**SRI VENKATESVARA ORIENTAL SERIES—No. 50**

EDITOR :—Prof. P. V. RAMANUJASWAMI, M.A.

பாலபாரதி இயற்றிய

இராமாயணத் திருப்புகழ் என்னும்

# இராமசெயத் திருப்புகழ்

(பிற்பகுதி. பொழிப்புரையுடன்)

பதிப்பாளர் :

திருப்பதி - திருவேங்கடவன் கீழ்க்கலை ஆராய்ச்சிக் கழகத்

தமிழ்த்துறைத் தலைவர்

கோ. பாலசுந்தர நாயகர் எம். ஏ. அவர்கள்




திருமலை - திருப்பதி தேவஸ்தான அறநிலையக்கழகத்தின் சார்பாக

அதன் செயல்துறைத் தலைவர்

ஸ்ரீ. செ. அன்னராவ் அவர்கள் பி. ஏ.,

ஆணைப்படி

திருமலை - திருப்பதி தேவஸ்தான அச்சகத்தில் பதிப்பிக்கப்பட்டது.

**1954**

ஸ்ரீ:

# முன்னுரை

"இராமசெயத் திருப்புகழி"ன் பிற்பகுதி இப்போது வெளி வருகிறது.

பால பாரதியாராகிய இந்நூலாசிரியர் கம்பராமாயணத்தைத் தழுவி இந்நூலை எழுதியுள்ளார். இது,

"துற்றபொருள் கொண்டு பாரதி
அப்பனுனை நெஞ்சி லேகொடு
சுத்தகவி கம்ப நாடன்முன் இனிதோதும்
சொற்படிவி ளம்பி ராமசெயம்"

என இவர் கூறுமாற்றால் அறியக் கிடக்கின்றது. அயோத்தியா காண்டம் துன்பச்செய்திகளை மிகுத்துக் கூறுகின்றதென்று கருதிப் போலும் அதனை மிகச் சுருக்கி 15 சந்த விருத்தங்களில் எழுதி யுள்ளனர். இஃது ஒரு சிறிய நூலாதலின் சில வருணனைகளை விட்டுவிட்டுக் கதையை மட்டும் ஒழுங்காக அமைத்துப் பாடியுள் ளார். கம்பர், "தயரதன் மதலையாய் வருதும் தாரணி" எனக் கூறிய இடத்தில், இவ்வாசிரியர், "நம் ஏற்ற மறந்துள மானிட னென்று மயோத்தி யிடந்தனில் வருவம்" என்று பாடி, மனித னாகத் திருமால் அவதரித்த போது அவரது இருவகை விபூதியையும் மறந்து மனித இயல்புடையவராகவே நடித்த சிறப்பைப் புலப் படுத்தியுள்ளமை அறிந்து மகிழத்தக்கது. இங்ஙனம் கூறியவாற் றால், இராமபிரானுடைய பல செயல்களுக்கும் எண்ணங்களுக்கு மாகப் பிறர் கூறும் வினாக்களுக்கு எளிதில் விடை கூற இயலுமா றறிக.

இவர், அகப்பொருள் துறைகளைத் தம் பாட்டுக்களில் அமைத் துப் பாடியுள்ளார். சில பாடல்களில் பல துறைகள் ஒருங்கே கூறப்பட்டுள்ளன. "நடுத்தளராது" என்று தொடங்கும் 108-ம் பாட்டில் வண்டோச்சி மருங்கணைதல், ஊர்வினைதல், நகைத்துரை யாடல், சுனையாடல், கெடுதி வினைதல், வறுங்களம் நாடி மயுங்கல்,

கூடலிழைத்தல் என்னும் துறைப் பெயர்களை ஒருங்கே அமைத்து வைத்துள்ளனர். 'அடிபடி மேலியங்கும்', என்று தொடங்கும் 104-ம் பாட்டும், 108-ம் பாட்டும் முறையே தெளிதல், இயலிடங் கூறல் என்னும் துறைகளைத் தனித் தனி கூறிச் செல்கின்றன. இவர் காலத்திலும், அகப் பொருட்டுறைகளை அமைத்துப் பாடி இழிந்த செல்வரை உயர்ந்தவராகக் கூறி அவர்பால் பொருள் பெற்று வாழும் வழக்கம் புலவரிடம் இருந்ததனால் அம் முறையை வெறுத்து, தமிழ்ப் பாக்களால் இறைவனைப் பாடி இன்புற்று வாழ்தலை மேற் கொள்ளக் கருதினார் இவர் என்பது உணரக் கிடக்கின்றது.

பாட்டிலக்கணமும் இறைவனைச் சந்தப் பாக்களாற் பாடுதற்குரியது என்ற கருத்தும், தவறுள்ள பாடல்களாயினும் இறைவன் திருப்புகழோடு பொருந்தியுள்ள பாக்களே மேலானவை என்ற கொள்கையும் இவருக்குண்டு என்பதை முறையே 247, 153-ம் பாடல்களால் அறியலாம்.

சோதிடக் கருத்துக்களை 177-ம் பாட்டிலும் இசையின் வகைகளை 195, 196 - ம் பாட்டுக்களிலும் அமைத்துப் பாடியுள்ளமையால் இவர் இவ் விருவகைக் கலைகளிலும் தேர்ச்சி பெற்றவர் என்று சொல்ல இடம் உண்டு.

சிலேடை வகையாற் பாடப்பட்ட கருத்துக்களை 232, 273 ஆகிய செய்யுட்களில் கண்டு மகிழலாம்.

இறைவன், விரிந்த பல் பொருள்கள் தோறும் கரந்து பரந்திருந்தும், அவற்றின் தன்மைகளைத் தான் பெறாமல் தனித்து நிற்கும் இயல்புடையான் என்பதனை,

"சேறுப டாதெழுந்து விடுபுழு
நீறுப டாதெழுந்து விழுகழல்
பேர்புன லூடுறைந்து வருகிடை இவைபோலத்

தீதற வேபரந்து துறைதொறும்
ஊடுற வேதுலைந்து மவையவை
சேர்வுறு மோதுறந்து கடைவழி உளைநீயே"

என்னும் அடிகளால் விளக்கி, விசிட்டாத்துவிதக் கருத்தையும், பல பொருளுவமை அணியையும் அமைத்துப் பாடியுள்ளமை காண்க.

பெரிய திருவடியாகிய கருடாழ்வாருக்கு நெற்றியிலும் ஒரு கண் உண்டு என்கிறார் இவர். அதற்கு வேறு நூல்களில் ஆதாரம் காணப்படவில்லை. ஆனால், சிவபெருமானே கருடாழ்வாராக வந்து திருமாலைத் தாங்குகிறார் என்று இவர் 204-ம் செய்யுளிற் கூறுகின்றதனால், உருத்திராம்சம் கருடாழ்வாருக்கு உண்டு என்று கொண்டு அவருக்கு நுதலிற் கண் உண்டு என்று கூறினார் போலும். ஆயின், அனுமானும் உருத்திராம்சம் உடையவராதலின், அவருக்கு நெற்றிக் கண் கூறப்படவில்லையே எனில், அனுமான், கம்பர் கூற்றின்படி உருத்திராம்சமும், வாயுவின் அம்சமும் கலக்கப் பெற்று உண்டானவர். கருடாழ்வாரோ, தனித்த உருத்திராம்சமே உடையவர். ஆதலின் அவருக்குக் கூறப்பட்ட நுதற்கண் அனுமானுக்குக் கூறப்படவில்லை எனக் கொள்ளலாம். கருடாழ்வார் நெற்றிக்கண் உடையவர் என்பதனை,

"நுதல்மீதே, இலகுலோசன லங்க்ருத தேவனை" (129 செ)

என்றும்,

"ஊழியில் வாயு வுங்க லங்கு
வேகம தாகி யுஞ்சி வந்த
ரூபம தாகி யுந்த்ரை யங்கண் எனலாயும்"

என்றும் இவர் பாடியிருத்தலால் அறியலாம். உருத்திரனே கருடாழ்வாராக வந்தனர் என்பதனை,

"ஊர்கரு டேச னென்று வந்தும் அமருடே
வாழுனு மானெ னும்ப்ர சண்ட
வாயுகு மார னென்று வந்தும்
வாகுவின் மீது கொண்டே ழுந்துன் இருபாதம்
வாழ்சுர ரேவ ணங்க வந்த
ஈசுர ரேசு மந்த தன்றி
வாகனம் வேறு கண்டி யம்ப அறியேனே" (204)

என்னும் அடிகள் உணர்த்துகின்றன.

திரு எட்டெழுத்தின் சிறப்புக்களை 211, 282-ம் பாட்டுக்களிலும், உபநிடதப் பொருள்களை 105, 208, 267 முதலிய பாட்டுக்களிலும் பரக்கக் குறிப்பிட்டுள்ளார்.

ஆழ்வார்களையும் அவர்கள் அருளிச் செயல்களையும் பற்றிக் கூறியிருத்தலை 225, 253, 254, 255 என்னும் பாட்டுக்களிற் காணலாம். திருக்கோவல் இடைகழியில், முதலாழ்வார் மூவர்களோடு இறைவனும் கூடியிருந்தபோது, ஆழ்வார்கள் மூவரும் ஒவ்வொரு அடி சொல்ல, இறைவன் இறுதி அடியைச் சொல்லி வெண்பாவை முடித்து, (மூவர் பாடிய அடிகளை ஒன்று சேர்த்துப் பாட்டாக்கியதால்) அந் நூலுக்குத் திரிகடகம் (மூன்று அடிகளை ஒன்று சேர்த்தது) என்று பெயரிட்டனர் என்று 253-ம் செய்யுளின் உரையால் அறிகிறோம். முதலாழ்வார்கள் அருளிய அந்தாதிகளினின்றும் இது வேறுபட்டது எனக் கருத இடம் தருகின்றது. ஆனால், இப் பெயரையுடைய நூல் ஒன்று இருப்பதாகத் தெரியவில்லை. இக் கருத்து உரையாசிரியர் கூறுகின்ற விளக்கம். நூலாசிரியர் கருத்து இவ்வாறில்லை.

திருமாலின் மாயச் செயல்களுள் முரண்பட்ட சிலவற்றை 345, 346, 347, ஆகிய பாட்டுக்களிற் புலப்படக் கூறியிருக்கும் முறை அறிந்து பாராட்டற் குரியது.

> ஸ்ரீமிறு பாடநெ ருங்கிய கோடலும்
> இனிய பாணிவி ரிந்திட வார்சடை
> நிமலர் சூடிய கொன்றைகு லாவுபொன்
> எதிர்தூவ (139)

இது கார்கால வருணனை. இதில், காந்தள் மலரை இரவலர் கையாகவும், வண்டு பாடுவதை அவர்கள் பாட்டாகவும், கொன்றையை ஈவோராகவும், அக் கொன்றை மலர்கள் மகரந்தப் பொடியைச் சொரிதலை இரவலர்க்குப் பொன்னைத் தருவதாகவும் குறிப்புருவகமாகப் பாடியிருப்பது அறிவுக்கு விருந்தளிப்பதாகும். இச் சந்தப் பாக்களில் வருணனைகளை அமைத்துப் பாடுதல் இவருக்கு எளிதே யாயினும் கதைப் போக்கினை நோக்கியும் சில உயர்ந்த செய்திகளைக் கூற வேண்டிய இன்றிமையாமையைக் கருதியும், இவர் மிகுதியாக வருணனைகளை அமைக்கவில்லை போலும்.

இவர் சிறந்த வைணவரே யாயினும் தத்துவங்களைக் கூறுங்கால், “உத்தம சித்தமும் முப்பது முப்பது, பத்திரு பத்தறு தத்வ விளக்கமும்” எனத் தொண்ணூற்றாறு தத்துவங்களைக் கொண்டனர். இங்ஙனங் கொள்ளுதல் சைவசித்தாந்த முறை. விசிட்டாத்து

வித்தில் பிரகிருதி தத்துவம் இருபத்து நான்கும், ஆன்ம தத்துவம் ஒன்றும், ஈசுவர தத்துவம் ஒன்றும் ஆக இருபத்தாறாகக் கொள்ளுவது முறை. அங்ஙன மிருக்க இவர் 96-தத்துவங்களைக் கூறியதனால், அவை இவ்விருபத்தாறின் கூறுகளாய்ப் பரந்துள்ளன என அறிவித்தற்குப் போலும் எனக் கருதலாம்.

இவர் பாக்களிற் கூறும் பிற சிறப்புக்களையும் கருத்துக்களையும் விவரித்துக் கூறப்புகின் மிகப் பல்குமாதலின், அறிஞர் அவற்றை அறிந்து கொள்வார்களாக.

"சித்திர மெனவொரு சிலம்பி
மெத்தெனு நடையொடு திரிந்து
தெற்றிய பலபல விதங்கொள் இழைசேர்நூல்
சிக்கற அடைவினில் விழுங்கும்
அத்திற மெனமுடி விறந்த
திக்கொடு செகமுழு துமண்ட வகையாவும்
பத்திசெ யயனொடு பயந்து
முற்றவு முடிவினி லுகந்து
பக்கண மெனவினி தருந்தி விடுவாய்நீ"

என்னும் இப் பாட்டின் கருத்து,

"ஊர்ண நாபிர் யதாஸ்ருஷ்ட்வா, ஸ்வயம் தத் க்ரஸதேபுந:
ததா ஸ்ருஷ்ட்வேதமகிலம், ஸ்வயம் தத் க்ரஸதேஹரி:"

என்று ஆன்றோர் வாக்கியத்தாலும்,

"யதோர்ண நாபிஸ் ஸ்ருஜதே க்ருஹ்ணதேச" என்று முண்டகோப நிடதத்திலும், "ஒரு சிலம்பிக்கு உண்டான ஸ்வபாவம் ஸர்வசக்திக்குக் கூடாதொழியாதிறே" என்று தத்வத்ரயத்திலும்;

"சின்னூல் பலபல வாயா லிழைத்துச் சிலம்பியின்னும்
அந்நூ லருந்தி விடுவது போல அரங்கரண்டம்
பன்னூறு கோடி படைத்தவை யாவும் பழம்படியே
மன்னூழி தன்னில் விழுங்குவர் போத மனமகிழ்ந்தே"

என்று திருவரங்கத்து மாலை (18) யிலும் அமைந்துள்ளது காண்க.

இவ் வாசிரியர் வட சொற்களைப் பெரிதும் ஆண்டுள்ளனர். அவற்றிற்கு ஆங்காங்குப் பொருளெழுதி யுள்ளேன். நாலாயிர

திவ்வியப் பிரபந்தத்தினின்றும் ஒருசில பாசுரங்களை ஒத்தபகுதிக்குக் காட்டாக அடிக் குறிப்பிலும், உரை இறுதியிலும் காட்டியிருக்கிறேன். இலக்கண முடிவுகளை எழுதப்புகின் மிக விரியு மென்று கருதி இரண்டொரு இடங்களில் மட்டும் குறிப்பெழுதி யுள்ளேன்.

கம்பராமாயணப் பாடல்களின் கருத்துப் பலவிடங்களில்வருவதால் அவைகளை எழுதுதல் மிகையென்று கருதி விடுத்தனன். ஏற்ற இடங்களில் அக் கருத்துக்களை ஒப்பு நோக்கிக் கொள்ளுமாறு அறிஞர்களைக் கேட்டுக் கொள்ளுகிறேன்.

சில வைணவர்களின் வேண்டுகோளின்படி இந்நூலை இவ்வாசிரியர் எழுதினார் என்று கூறுகின்றார்கள். இவர் வடமொழி, தமிழ் ஆகிய மொழிகளிலும் வைணவ சமய நூல்களிலும் தேர்ச்சியும், கவிபாடும் வன்மையும் பெற்றுத் தூயராய் இருந்ததனால், மறந்தும் புறந்தொழா மாந்தராகிய வைணவர்கள், தங்கள் சமயத்துக்கும் சிறந்த வண்ணப் பாக்களால் அமைந்த நூல் ஒன்று வேண்டுமெனக் கருதி, இவர்பால் தங்கள் கருத்தை யறிவித்து, அந் நூலும் இராம காதையாய் இருத்தல் நன்று என வேண்டிக் கொண்டனர். இவரும் அவ் வேண்டுகோளுக் கிசைந்து இந்நூலைப் பாடி முடித்தனர் என்ப.

உரையில் ஒவ்வொரு பாட்டிலும் 'பெருமானே' என்றதற்குப் பின், 'ஒரு விண்ணப்பம் கேட்பாயாக' என்று கூட்டிக் கொள்க.

இந் நூலின் உரையாசிரியர், பாட்டுகளின் கருத்துக்களை நன்கு விரித்துரைத்தலில் வல்லவர். பலநூல் அறிவுடையார் ஒருவரே இந் நூலுக்கு உரை யெழுதி இருத்தல் கூடும். பிறர் எழுதின் இத்துணை விளக்கங்கள் கூறியிருக்க இடமிராது. யாப்பிலக்கணத்தைப் பற்றிக் கூறும் 75-ம் பாட்டிலும் 154-ம் பாட்டிலும் கூறப்படும் விளக்கத்தாலும், 'இன்னொரு விதம்', 'மற்றொரு விதம்' என்று கூறும் உரைகளாலும் 104, 105 - ம் பாட்டுக்களிற் கூறும் அகப்பொருட்டுறை விளக்கத்தாலும் இவர் நல்ல இலக்கண அறிவுடையவர் என்று தெரிகிறது. தத்துவங்களை விளக்கிக் கூறுதலும் (96) மனித உடல் ஐம் பூதத்தின் சேர்க்கையால் ஆகியது என்பதனை (98-ம் பாட்டில்) விரித்துக் கூறுதலும், சில கதைகளை உத்தர காண்

தில் விளங்கக் கூறுதலும் ஆகிய இவற்ருல் இவரது கல்வி வு மிகப் பரந்தமைந்தது என்று தெரிகிறது.

இந் நூலாசிரியரே இவ் வுரையையும் எழுதினுர் என்று சிலர் துகின்றனர். அவ்வாறு கொள்வோமாயின், 'வேறு சிலர் கூறும் ு' என்று இரண்டொரு இடங்களில் இவரே கூறும் கருத்துக்கு து இயையாமற் போகின்றது. எனவே, பேரறிஞர் ஒருவர், ' வுரையை எழுதியிருப்பார் என்று கொள்ளலாம். இக் கொள் யை ஆய்ந்து முடிவு செய்தற்குத் தக்க சான்றுகள் இன்னும் டைக்கவில்லை.

இந்நூல் அச்சான பிறகு சில பாடங்கள் கிடைத்தன. வ, நல்ல பாடங்களாக இருப்பதால் அவற்றையே கொள்ளு நலமாகும்.

41-ம் பாட்டில், "முறித்துநி கர்த்த" என்பதனை "முறித்துட ர்த்த" என்றும், 140-ம் பாட்டில், "அவதானம்" என்பதனை, வாதானம்" என்றும், 177-ம் பாட்டில் "அஞ்சி னுடனுளும்" பதனை, "அஞ்சினுடனுரும்" என்றும், 260-ல் "முதலாக நீ ம்" என்பதனை, "முதலாக நீ விடும்" என்றும், 347-ல் "உந் ாயம்," என்பதனை, '"உந்தறியாமை'; என்றும் திருத்திக் ள்க.

பிழை திருத்தத்திற் காணப்படாத வேறு சில அச்சுப் பிழைக நேர்ந்துள்ளன. அவற்றையும் அறிஞர்களைத் திருத்திக் ள்ள வேண்டுகின்றேன். அவற்றுள், 9-ம் பாட்டில் "சக் தொடொன்று பிரியாமல்" என்பதும், 11-ம் பாட்டின் உரை நியில், "முதலையின் வாயற, கூப்பிட்ட யானையின் துயர் க்க" என்பதும், 115-ம் பாட்டில், "செங்கை காட்டி" என் ், சிறந்த திருத்தங்களாம்.

இப் பிற்பகுதி, உயுத்த காண்டம், உத்தர காண்டம் ஆகிய காண்டங்களை யுடையது. இவ்விரு காண்டங்களும் இதுவரை ிடப் படவில்லை. ஆதலின், இது எல்லோராலும் வரவேற்கப் ு என்பது என் கருத்து. வேறு சில சிறந்த பாடங்களையும் ற் சேர்க்கக் கருதினேன். ஏட்டுச் சுவடிகள் சரிவரக் கிடைக் மயால் என் கருத்து நிறைவேற வில்லை, எனினும், அடுத்த

பதிப்பில் அவற்றை வெளியிடுவேன். அறிஞர்கள் இம்முறை பொறுத்துத் தக்க உதவி செய்வார்களாக.

இந்நூலை வெளியிடுதற்கு எனக்கு ஊக்கம் காட்டி ஊ வளித்து வரும் எங்கள் கழகத் தலைவர் ஸ்ரீமான். ப. வெம். இர நுஜ ஸ்வாமி, M.A., அவர்கட்கும், இதனை வெளியிட உடன்ப ஆணைதந்த திருமலை - திருப்பதி தேவஸ்தான அறநிலையக் கழ தார்க்கும், அதன் செயல் துறைத் தலைவரும், இத்தகைய ச நூல்களை வெளியிடுவதில் பேரார்வம் உடையருமான ஸ்ரீம அண்ணாராவ், B.A., அவர்கட்கும் என் அன்பும் பணிவுங் க நன்றியைத் தெரிவித்துக் கொள்ளுகிறேன்.

இந்நூலை இனிது அச்சிட்டு விரைவில் வெளியிடுவதற்கு வங் காட்டிவரும் ஸ்ரீ. T. R. நரசிம்மாச்சாரியார், B. A., (Su T. T. Press) அவர்கட்கும் என் வணக்கமும் நன்றியும் உ வாகுக.

திருப்பதி
27–10–'54

கோ. பாலசுந்தர நாயு
பதிப்பாளர்.

ஸ்ரீ:

இராமாயணத் திருப்புகழ் என்னும்

# இராமசெயத் திருப்புகழ்.

பிற்பகுதி.

## 6. உயுத்த காண்டம்.

தானன தான தந்த தந்த
தானன தான தந்த தந்த
தானன தான தந்த தந்த தனதான

204. ஊழியில் வாயு வுங்க லங்கு
வேகம தாகி யுஞ்சி வந்த
ரூபம தாகி யுந்த்ரை யங்கள் எனலாயும்
ஓரிரு நாலு வெம்பு யங்க
மேலுள ளாகி யுந்து லங்கி
ஊர்கரு டேச னென்று வந்தும் அமரூடே
வாழுனு மானெ னும்ப்ர சண்ட
வாயுகு மார னென்று வந்தும்
வாகுவின் மீது கொண்டெ டூழ்ந்துன் இருபாதம்
வாழ்சுர ரேவ வணங்க வந்த
ஈசுர ரேசு மந்த தன்றி
வாகனம் வேறு கண்டி யம்ப அறியேனே
ஆழியின் வாய டைந்த பின்பு
பேடொடு சேவ லின்க ணங்கள்
ஆதர வாயு டன்க லந்தும் உயிர்வக

மாகியு லாவி யுங்கொ ணர்ந்த
நீடிரை தானு கந்து நண்பொ
டாடிய நீர்மை கண்டு வெம்பி அயர்போதில்

ஏழைமி சார மென்கொ லிந்த
வீநொத மீதொ ழிந்தி டெந்தை
இராகவ ராம சந்த்ர வென்று துதிகூற

ஏரணி பானு மைந்த னெண்கின்
நாதன்மு னோரும் வந்தி றைஞ்ச
ராகத மாக வந்தி ருந்த பெருமாளே.

உரை :—கடற் கரையிற் சேர்ந்திறங்கிய பின்னர், நீ தனித்துலாவும் போது ஒரு பெண் புறாவும் ஆண் புறாவும் கூட்டமாகி அன்பாய் ஒன்றோ டொன்று கலந்து உடலிரண்டும் உயிரொன்றுமாகித் திரிந்து, தேடிக் கொணர்ந்த நீண்ட இறையைத் தின்று நட்புடன் விளையாடிய தன்மை யைக் கண்டு, பறவைகட்குள்ள கூட்டுற வின்பம் எனக்கில்லையே என்று நின் உள்ளம் வெதும்பி மயங்கும் போழ்து, பெருமான் எங்குச் சென்ற னரோ வென்று நினைத்துத் தேடிவந்த அழகுள்ள கதிரோன் மைந்தனாகிய சுக்கிரீவனும், கரடிகட் கரசாகிய சாம்பவனும், மற்றவர்களும் நீ வருந்து தலை யறிந்து, "ஒன்றும் அறியாதார் போன்று வருந்துவதேன்? இத்திரு விளையாட்டு எதற்கு? இதனை விட்டு விடுக, எங்கள் தலைவனே, இராகவா, இராமசந்திரா," என்று போற்றி வணங்க, தெளியாத மயக்கம் அவர்கள் சொல்லால் தெளிந்தது போல், மிகச் சிறப்பாக அவர்களோடு முன் இருந்த இடத்திற்கு வந்தருளினை பெருமாளே; ஊழிக் காலத்தில் உலகங்களை யழிக் கும் காற்றுக்கு இவ்வளவு விரைவு உண்டோ? வென்றையுறத்தக்க விரை வுடனும், செந்நிறமுள்ள உடலுடனும், சொல்லப்படும் மூன்று கண்களுட னும், அனந்தன், வாசுகி முதலிய எட்டுத் தெய்வப் பாம்புகளையும் உடலின் கண் பல விடங்களிலும் மணிப் பணியாகத் தரித்த உறுப்புக்களுடனும் விளங்கி, நீ ஏறி நடாத்தும் கருடாழ்வாரென வந்தும், இராவணன் போரில் அழியாத வாழ்வு பெற்ற அனுமானென்னும் பெயருடைய வாயு மகனென வந்தும், தன் தோளின்மேல் நின்னை வைத்துக் கொண்டு, இமை யவர் வணங்கும் சிவபெருமானே சுமந்ததல்லால் வேறு பிற ஊர்தியை நினக்குச் சொல்ல அறியேன்.

(விநோதம் எனற்பாலது 'வீநொத'மெனத் திரிந்து நின்றது. பறவை முதலியன துணையொடு கூடியிருக்கக் கண்டபோது தனித்திருக்கும் காத லர்க்குத் துன்பம் மிகும். ஆதலின் இராமபிரானுக்கும் புறாக்களின் கூட் பெருந் துன்பம் விளைத்தது.)

தனதன தனன தந்த
தனதன தன்ன தந்த
தனதன தனன தந்த தனதான

205. நினைவுறு மனதி லொன்று
விரவிய மொழியி லொன்று
திரவிய செயலி லொன்று பலவாக

நிலவிய தொழிலன் வஞ்சன்
அசடரி லசட னுன்றன்
நெறியினி லொழுகி யன்பர் உறவாகிப்

புனல்கொடு மதுவி ரிந்த
மலர்கொடு நறைநி றைந்த
புகைகொடு தொழுதி றைஞ்சி அழியாத

புகழொடு நனிவி ளங்கி
இகழ்வற வினிய தொன்று
புரிவுறு பதவி யென்று பெறுவேனோ

வனசனு மயனும் வந்து
சுடுகனல் புகையி லங்கை
மனைதெரு மறுகு குன்று மதில்யாவும்

வளமுற வுதவு பின்பு
நெடியவி ணினுமி றங்கி
வசைகொடு தலைகு னிந்து திருதேசன்

அனலிடை முதன்ம டிந்த
குறைநிசி சரரு மைந்தர்
அனைவரு மினிது வந்து புடைசூழ

அணிநகர் குடிபு குந்து
நினைதொறும் வெருவ நின்ற
அனுமனை யடிமை கொண்ட பெருமாளே.

உரை :—இலங்கையில் பிரமனும், தச்சனாகிய மயனும் வந்து, சுடு நெருப்படங்கிப் புகையும் அந் நகரில் வீடுகள், பெருந் தெருக்கள், சிறு தெருக்கள், மேடைகள், மதில்கள் முதலியன வளமுடையனவாகச்செய்து கொடுத்த பின் நீண்ட விண்ணுலகினின்று மண்ணுலகில் இறங்கி, ஒரு

குரங்கினால் இத்தனைக் கேடுகளும் வர, அவற்றைத் தடுக்க வியலாமையால் மூவுலகும் எள்ளி நகைக்குமாறு இழிவு வந்ததே யென்று வருந்தி, அப்பழி யோடு தலைகள் குனிந்து அரக்கர் தலைவனான இராவணன், நெருப்பில் முன் இறந்தவர் போகக் குறையாகிய அரக்கர்களும், மைந்தர்களும், அமைச்சரும், தம்பியரும் நன்மையோடு பக்கத்தில் சுற்றிவர, அழகிய அவ் விலங்கையிற் குடி புகுந்தும், தன்னை மிக நினைக்குந் தோறும் அச்சங் கொள்ளச் செய்து நின்ற அத் தூதனை அடிமை கொண்டருளிய பெருமாளே ; நான் என் நெஞ்சில் நினைப்பது ஒன்றாயிருக்க, உள்ளம் கலந்து சொல்லும் சொல் ஒன்றாயிருக்க, நெடுகச் செய்வதில் வேறொன்றாயிருக்க, நினைவொன்றும், சொல் ஒன்றும், செய்வதொன்றுமாய் ஒன்றோடொன்று ஒவ்வாமற் பல செயல்களைச் செய்யும் தன்மையன் ; வஞ்சகன் ; அசடரில் பெரிய அசடன் ; இத்தகைய நான் உனது நெறியில் நடந்தும், நின் அன்பராகிய அடியார்கட்கு உறவாகித் திருமஞ்சன மாட்டுதற்குத் தூநீர் கொணர்ந்தும், தேனொழுக மலர்ந்த மலர்கள் கொணர்ந்தும், எங்கும் மணம் நிறைந்த அகிற் புகையை அமைத்தும், உன்னைப் பூசித்து வணங்கி அழியாத புகழுடன், உலகில் விளங்கி இகழ்ச்சியற்ற இன்பமாகிய அடிமைத் தொழிலாகிய பணிவிடைகளைச் செய்யும் பதவியை என்று பெறுவேனோ ? சொல்வாயாக. (தெரு - பெருந்தெரு. மறுகு - சிறுதெரு.)

தனத்தனன தந்த தனன
தனத்தனன தந்த தனன
தனத்தனன தந்த தனன — தனதான

206. மருட்டிவிடும் விஞ்சு சுமைகள்
சுமத்திவிடு மூந்து கரியை
மறிக்கவிடும் வஞ்ச வினைகொ — டுயிர்யாவும்

வதைக்கவிடு மங்கை விரல்கள்
குறைக்கவிடு மெங்கு மெழுதி
வழுத்தவிடு மண்டு கடலின் — மரமேறித்

துரத்திவிடும் மஞ்ச ளுதகம்
அருத்திவிடும் மைந்த ருறவு
துறக்கவிடும் வெம்பு களவு — முதல்யாவும்

தொடக்கிவிடும் நம்பு குருவை
மறக்கவிடும் வம்பி லிரவு
துயர்க்குள்விடும் அம்பொ னுடைமை — யெனலாமோ

பெருத்தசபை நின்று நிருதர்
புறப்படவி ருந்த பொழுது
ப்ரகத்தர்ப்ரப லங்கள் மொழிய ஒருமாமன்
பிணிப்படம தங்கள் பகர
அமைச்சரொடு மைந்தர் படைஞர்
ப்ரியப்படமொ ழிந்து பதற முதலேயவ்
விருத்தன்மதி வந்து புகல
அரக்கர்பதி சிந்தை மறுக
விலக்கியொரு தம்பி பணிய அனைவோரும்
வெருக்கொடும யங்க நெடிது
கலக்கமது கண்ட வனுமன்
விருப்புடன்வ ணங்கு பெரிய பெருமாளே.

உரை :—இலங்கையிற் குடிவந்த விராவணனுடைய பேரவையிலும் வெளியிலும் பரவி அரக்கர்கள் நின்றிருந்த பொழுது, இராவணன் அவர்களிடம் 'ஒரு குரங்கு வந்து இத்துணைக் கேட்டையும் விளைத்ததே, இதற்கு என்ன செய்வது' என்று கேட்க, அப்போது பிரகத்தன் தன் வீரப் பெருமைகளைச் சொன்னன் ; ஒப்பற்ற மாமனாகிய மகோதரன் தருக்கான மொழிகளைக் கூறினன் ; அமைச்சரும், பிள்ளைகளும், படைத் தலைவரும் அரசனுக்கு மகிழ்ச்சி யுண்டாக்கத் தக்கவற்றை மொழிந்து, 'இப்போதே நாங்கள் அனைவரும் ஒருங்கு சென்று அவ்விராம விலக்குவர்களையும் குரங்குப் படைகளையும் கொல்லுவோம்; எங்கட்கு விடை தருக' வென்று பதறி நின்றார்கள் ; மிகப் பழைய காலமுதலாக விருக்கும் கிழவனாகிய மாலியவான், முற் காலத்தில் விண்ணவர் பொருட்டுத் திருமால் நிலவுலகுக்கு வந்து ஆழிப் படையைச் செலுத்தி மாலி, சுமாலி முதலிய அரக்கர்களைக் கொன்றதையும், தான் மட்டும் பாதலத்தில் ஒளித்திருந்ததையும், இப்போதும் இமையோர்களைக் காக்க அத் திருமாலே இராமனாக வந்தாரென்பதையும், சீதை திருமகளே யென்பதையும், இவற்றை விண்ணவர் மறையாகச் சொல்லிய போது தான் கேட்டிருந்ததையும் சொல்லிப் பிறகு, இக் காரணங்களால் இராமனை வெல்ல முடியாதென்றும், சீதையைக் கொண்டு போய் இராமனிடம் விட வேண்டுமென்றும் பல அறிவுரைகளைப் புகன்றான் ; இவற்றைக் கேட்ட இராவணன், மாலியவான் சொல்லியவை தன் மனத்திற்குப் பொருந்தாமையால் சினங் கொண்டு அவ்வுரைகளை இகழ்ந்து தள்ளினன் ; அப்போது, விபீடணன், அங்கிருந்தவர்கள் எல்லோரையும் விலக்கி வந்து இராவணனை வணங்கவும், எல்லோரும் அச்சத்தால் மயங்கி நிற்கவும் செய்த அனுமானல் வணங்கப் பெற்ற மேலான பெரிய பெரு

மாளே ; பொன், அறிவைக் கெடுத்துவிடும் ; எடுக்க முடியாத பெருஞ் சுமைகளைச் சுமக்கச் செய்யும் ; மதம் தங்கி யடங்காத யானையை மறித்து நிறுத்தச் செய்யும் ; சூழ்ச்சிகளால் எல்லா வுயிர்களையும் கொலை செய்யத் துணிவுண்டாக்கிவிடும் ; திருடிய குற்றத்துக்காக அரசன் கட்டளையிடக் கைகள் விரல்கள் ஆகியவற்றை அறுக்கச் செய்துவிடும் ; தன் இனத்தவர் என்றும் கருதாமல் எங்கும் வசையோலையை அனுப்பச் செய்து விடும் ; நீர் மிக்குப் பெருகிய கடலின்மேல் கப்பலில் ஏற்றித் தூரத்திவிடும் ; தன்னிடமுள்ள பொருளைத் தனக்கு நற்கதி கிடைப்பதற்காக அறச் செயல்களிலும் தெய்வத் திருப்பணிகளிலும் செலவு செய்து மகிழாமல், அரசர், கள்வர், நெருப்பு, தாயத்தார், கடன்காரர், அறிவற்ற மூடர், ஆகியோர் கொண்டு செல்லா திருப்பதற்காகவும், தனக்கு இறுதிக் கடன் செய்வதற்காகவும், தன் பின் எஞ்சியுள்ளோர் தன் பெயரைச் சொல்லி அப்பொருளை நுகர்வதற்காகவும் துன்பத்தோடு காக்கச் செய்யும் ; தனக்குப் பிள்ளைப் பேறில்லையாயின், அயலவர் பிள்ளையைத் தன் பிள்ளையாகக் கொள்வதற்காக (மகன்மை) மஞ்சள் நீர் குடிக்கச் செய்யும் ; மக்களையும் உறவினரையும் வெறுத்துத் தள்ளச் செய்யும் ; திருடுதல் முதலிய கொடுஞ் செயல்களைச் செய்யச் செய்யும் ; குருவை (ஞானசிரியன்) மறக்கச் செய்யும் ; பொய்யாக இரத்தல் தொழிலில் மூழ்கச் செய்யும் ; இத்தகைய செயல்களையும் செய்விக்கும் தன்மையுள்ள—காட்சிக்கு அழகான பொன் நன்மையையே தரும் என்று சொல்வதற்காகுமோ ? ஆகாது.

(மகோதரனுகிய அமைச்சன் இராவணனுக்கு மாமன் முறையுடையவன். 'எங்கும் எழுதி வழுத்த விடும்' என்பதற்குச் செய்யுளை எழுதி எல்லாரையும் போற்றிப் புகழச் செய்யும் என்றும் பொருள் கூறலாம்.)

தானன தத்த தந்த தனதன தந்தன
தானன தத்த தந்த தனதன தந்தன
தானன தத்த தந்த தனதன தந்தன தனதான

207. தாழ்வறு பத்ம துங்க வபிநய மண்டப
மீதிலி ருக்கு மந்தண் மறைமுனி குண்டிகை
தாரைபெ றத்து ரந்து விடுபொழு திந்திரன் முதல்வானோர்

தானவர் முற்று நின்று செயசெய வென்றிட
மோதிய லைத்தெ ழுந்து முழுகிநெ டுங்கதிர்
சாடி யிழுத்தி றங்கி யொழுகிவ ரும்பிர ளயமேபோல்

சூழ்வினை யைக்க டந்து துளவினை யன்பொடு
கூடியபி ருக்க நண்பு பெறுகுவ மென்றுயர்
தூய்நிற முற்ற கங்கை குடிபுகு செம்பொனின்
அடிமீதே

சோர்வற வைத்த நெஞ்சு மருமலர் சிந்திடு
பாணியு முற்றி றைஞ்சு முடியுமு னன்பர்கள்
தோள்கணை ருக்க வந்து முறைசெயு மின்பமும்
அருள்வாயே

வாழ்வுப டைத்தி ருந்த விரணியன் மைந்தனொ
டாடிய சொற்கு ணின்று தறியின்மு ழங்கியொர்
மானுட வுக்ர சிங்க வடிவொடு வந்துதன்
மடியூடே

வாசலி டைப்பி ளந்து குருதியை யுண்டுயி
ரோடுகு டற்பி டுங்கி நெடியபு யங்களின்
மாலையெ னப்பு னைந்த முகிலுனை வென்றிட
நரனுனன்

வேள்வியி னிற்பி றந்த கமலம டந்தையை
நீவிடு புத்தி னென்ற பொழுது முனிந்துகை
வேல்கொடு குத்த வந்த தமையனை யஞ்சிவிண்
மிசைவேறாய்

வேளையெ னக்கி ரங்கு ரகுகுல புங்கவ
வாழியெ னப்ப ணிந்து சரணம டைந்திடு
வீடண னுக்கி லங்கை யரசுவ ழங்கிய
பெருமாளே.

உரை:—விபீடணன் இராவணனுக்குச் சொல்லுவது: "அண்ணா, பிரமன் படைப்புக்கள் ஒன்றாலும் இறவாதிருக்க நான்முகனிடத்து வரம் பெற்று இவ்வண்டங்கள் அனைத்தினுக்கும் தானே தலைவனென்று, இரணியாய நம என்பதனை மூல மந்திரமாக அனைவரையும் சொல்லச் செய்து, முற் காலத்தில் வாழ்ந்தவன் இரணியனென்னும் அசுரன்; அவன் தன் மகனைப் படிக்கவைத்த போது அப் பிள்ளை தன் தந்தையின் பெயரை முதற் கண் ஓதாமல் திருமாலின் மந்திரமாகிய திருவெட்டெழுத்தைச் சொல்ல, அதனை இரணியன் கேட்டுத் தன் பிள்ளையிடம் வந்து, "நீ சொல்லிய உன் தெய்வம் எங்குளது" என்று கேட்க, அவர் எங்குமுளார்

என்றவன் சொல்ல, ஆனால் இத் தூணிலிருப்பானோ? வென்று இரணியன் அருகிலிருந்த ஒரு தூணைச் சுட்டிக் கேட்க, இருக்கிறானென்று பிரகலாதன் சொல்ல, அப்படியாயின் அவனைக் காட்டென்று இரணியன் அத் தூணை கையால் அறைய, பிரகலாதன் சொல்லுக்குள் நின்று அத் தூணில் பேரவதாரம் செய்து ஒப்பற்ற மனித வுடலும் சிங்க முகமுங் கொண்டு, திருமால் வெளிப்பட்டு, இரணியனைப் பிடித்துத் தன் மடிமேற் கிடத்தி, உள்ளும் புறமுமற்ற வாயிற்படியின் கண் இருந்து, இரவும் பகலுமற்ற மாலை வேளையில், தன் நகங்களால் அவன் மார்பைக் கிழித்துப் பீறிய குருதியைக் குடித்து, அவன் உயிரோடு குடலையும் பிடுங்கி, நீண்ட தன் திருத்தோளின் மேல் மாலையாகத் தரித்தான். மேகம் போன்ற வுருவுடைய அந் நாராயணன் இப்போது உன்னை வெல்ல வேண்டி மனிதனாகத் தோன்றியிருக்கிறான்; திருமகளாகிய சீதா பிராட்டியாரைக் கொண்டு போய் விட்டு விடுக ; இதுவே உனக்கு நல்லறிவு'' என்று சொன்ன போது, இராவணன் மிகச் சினந்து கையிலிருந்த வேலினால் குத்த வந்தான் ; அதனால் தமையனுக்கு அஞ்சி விபீடணன் விண்ணிலெழுந்து, அவனுக்கு வேறுபட்டுக் கடலைக் கடந்து குரங்குப் படையினுள் நுழைந்து, 'இராகவா, நின் அடைக்கலம்; என்னை காத்தருள்க' என்று இராமன் திருவடிகளில் வணங்க, அவனுக்கு இலங்கை யரசாட்சியைத் தந்தருளிய பெருமாளே; நீ முன் திரிவிக்கிரம அவதாரம் செய்த போழ்து ஒரு திருவடியை மேலே தூக்கி அண்டச் சுவரை அளக்க, அத் திருவடிக்கு மஞ்சன மாட்டுவதற்கு, குற்றமற்ற பொற்றாமரைப் பூவாகிய, உயர்வும் அழகும் நன்மையுமுள்ள மண்டபத்திலிருக்கும், அழகும் அருளுமுடைய மறையோனாகிய நான்முகன் கமலண்டலத்தி லிருந்து நீர் தாரையாய் விழத் தூர்ந்துவிட்ட போது அஃது, இந்திரன் முதலிய இமையவரும், மாவலி முதலாய அசுரர்களும் வணங்கி வாழ்த்துமாறு, அண்டத்தை அலைத்துக் கொண்டு, விரைந்து, நீண்ட கதிர்களையுடைய கதிரவனையுந் தள்ளி யிழுத்துக் கொண்டு, இறங்கி ஓடிவரும் ஊழி வெள்ளம் போல் வந்து, பிறர் செய்த பாவத்தை போக்க, நின் திருவடிகளிற் றரித்த திருத்துழாயோடு அன்பு கொண்டு நட்புடனிருக்க நினைத்தது போற் தூய்மையும் வெண்மையுமுள்ள கங்கையாகிக் குடிபுகுந் திருந்தது ; அத்தகைய நின் செம்பொற் சேவடிகளில் மறப்பற்ற எண்ணம் கொண்டு நிற்கும் நெஞ்சும், மணமுள்ள பூக்களை அருச்சிக்கும் கைகளும், வணங்கும் தலையும் நின் அன்பர்களின் தோள்களோடு நெருங்குமாறு வந்து அடிமைத்தொழில் செய்யும் இன்பமும் எனக்கு அருள்க.

('புத்தியின்' எனவரற்பாலது சந்தம் நோக்கி, 'புத்தின்' என தொகுக்கும் வழித் தொகுத்தலாகி நின்றது. கங்கை, திருமாலின் திருவடிகளிற் குடிபுகுந்தமை, அங்குள்ள துளவோடு நட்புக் கொண்டிருக்கக் கருதியது போன்றுள தென்கிறார்.)

தானன தத்தன தந்தன
தானன தத்தன தந்தன
தானன தத்தன தந்தன தனதான

208. போரிடை பார்த்தனெ டுங்கயி
லாயபி ரார்த்தர்செ ழும்பத
பூசைசெ யாப்பொழு தொன்றினும் முயலேன்யான்
போவெனெ னுச்சொனு மன்திரு
தாள்களை நீட்டியல் மந்திர
போதனை யாற்றுதி கும்பிடு மலர்தூவென்
றீரமு ருத்தனி நின்றிட
ஆயவ னேத்திய ணிந்திடும்
ஏடுறு பூக்கள டங்கனும் நெடுவானின்
யாறது தேக்கிய செஞ்சடை
மேலது தோற்றிவி ளங்கலின்
யானுமை வேற்றுமை யென்றினி நினையேனே
மாருதி பார்த்துமொ ழிந்தபின்
வீடணர் வாழ்க்கைய றிந்திவன்
வாவென வார்த்தைவ ழங்கிநம் இளையோர்கள்
வாழ்குகன் மாக்கதிர் மைந்தனும்
நீயுமெ னுக்ருபை விஞ்சியும்
மாயவி ராக்கதர் தம்பதி முதலானோர்
வீரப ராக்ரம வெம்படை
சேனைக வீட்டுவ ரங்குண
மேன்மைகள் கேட்டுவி ளங்கியும் அலையேறி
மேலது போக்குரை யென்றனும்
நீள்வழி நீர்க்கர சன்றர
வேணுமெ னுச்சொல நம்பிய பெருமாளே.

உரை :—விபீடணன் முறையிட்ட ஓசையைக் கேட்டு, இவன் இராவ ணன் தம்பி யென்றறிந்து, 'இவனை நம்பால் சேர்க்கலாமா ?' வென்று சுக்கிரீவன் முதலியவரை நீ கேட்க, அவர்கள் கூடாதென்று மறுத்த பின், அநுமான் பார்த்து, இவன் சிறந்தவ னென்று தான் இலங்கையில் அவன் வீடு முதலியவற்றின் தூய்மையைக் கண்டறிந்ததனால் உறுதியாகச்

சொல்ல, வீபீடணனுடைய நற்செயலோடு கூடிய வாழ்க்கையை யறிந்து 'விபீடணு, இங்கு வருக' வென்று சொற்களை நன்முறையில் வழங்கி, 'நம் தம்பிமார்கள் செல்வமுள்ள குகனும், பெருமை மிக்க கதிரோன் மைந்தனாகிய சுக்கிரீவனும் நீயும் ஆவீர்கள்' என்று சொல்லி அருள் மிகுந்தாய்! பொய்யை மெய்யாகச் செய்யும் மாயமுள்ள அரக்கர் தலைவனான இராவணன் முதலியவர்கள் வீரமும், ஆற்றலும், கொடிய போர்க் கருவிகளும் பல வீரர்களும், அவர்கள் தவஞ் செய்து பெற்ற வரங்களும், குணங்களும் புகழ்களும், விபீடணன் சொல்லக் கேட்டுத் தெரிந்து விளங்கியும், 'அலையையுடைய கடலைக் கடந்து இலங்கைக்குப் போகும் வழியைச் சொல்' என்றலும், நாம் போதற்குரிய நெடிய வழியினைக் கடலுக்குத் தலைவனான வருணன் தான் செய்து கொடுக்க வேண்டுமென்று விபீடணன் சொல்ல அதனை மெய்யென்று நம்பியுமிருந்த பெருமாளே; பாரதப் போரில் பதின்மூன்றாம் நாள் இரவில், அருச்சுனன், 'நெடிய கயிலைமலையில் அமர்ந்திருக்கும் பித்தனாகிய சிவபெருமானுடைய செழுமையான திருவடிகட்குப் பூசை செய்யாத பொழுது, எச்செயலிலும் ஊக்கம் கொள்ளேன். அதனால் சிவபூசை செய்யப் போவே'னென்று சொல்ல, அப்போது உன் இரு திருவடிகளையும், நீ அருச்சுனனுக்கு எதிராக நீட்டி, நின் திருமந்திரமான எட்டெழுத்தை அவனுக் கறிவித்து, இவ்வறிவினாற் சிந்தனை செய்' என்று சொல்லி அன்புடன் நிற்க, அவன் நீ அருளியபடி பூசித்து மந்திரஞ் சொல்லி வணங்கிய பின், நின் திருவடிகளிற் சேர்த்த பூக்களெல்லாம் நீண்ட வாறு தேங்கி நிறைந்த சிவபெருமானுடைய சடையின் மேல் விளங்கியதைக் கைலையில் அருச்சுனன் காணுமாறு காட்டினையாதலால் இனி, நான் சிவபெருமான் வேறு; நீ வேறு என்று வேறுபாடுடைய உருவங்களாகக் கருதேன்; இருவீரும் ஒருவீரே யென்று உறுதியாய் நினைப்பேன்.

தானதன தந்தன தந்தன
தானதன தந்தன தந்தன
தானதன தந்தன தந்தன தனதான

209. ஓராயிரம் உன்பெயர் விஞ்சிய
காலாயிர மம்பொனெ டுஞ்சிர
மோராயிரம் வம்பவிழ் பங்கய விழிதாளும்
ஊடாயிரம் வெம்படை தங்குகை
தானுயிர மங்கதெ னும்படி
ரூபாக்ருதி யென்றுதெ ளிந்துனை இருபோதும்

தாராயிர முங்கொடு தெண்டனி
டாதேயிர வும்பக லும்பல
சாகாசம்வி ளம்பியு மூன்றிடு தமியேனும்
சாதேவன றிந்தபெ ரும்பதி
ஞாயிர வஞ்சவு டம்பிடை
தாமோதர னென்றறி யும்பதம் அடைவேனோ
நீராழமு ணர்ந்துவி ளங்கிய
கோமான்வரு ணன்றனை நெஞ்சினில்
நேரேகொளு மென்றபி னங்கொரு கிடையாகி
நீதாவழி யென்றுந யஞ்சொலி
நாளேழும கன்றிபின் வெம்புறு
நீலாசல மொன்றென நின்றிது சிறுபான்மை
மாராசத வொண்டிறல் கண்டல
தோரான்வரு ணன்பர லந்தனை
வாழ்வீர றிந்திடு மென்பதொ ரளவாக
வாராதது கண்டுத டஞ்சிலை
யாலேவழி கண்டிட வென்றொரு
மாகோபமெ ழுந்திட நின்றருள் பெருமாளே.

உரை :—'கடல் நீரின் ஆழத்தை நன்கறிந்து விளங்கும் கடல் அரசனை வருணனைத் திருவுளத்தில் ஒருமைப்பட நிறுத்திக் கடல் வழியைப் பெறுக' வென்று விபீடணன் கூறியதனால், அங்கே தருப்பையைப் பரப்பி அதன்மேற் பள்ளிகொண்டருளி, 'வருணா, வழி தருக' வென்று இனிமையாகச் சொல்லி, ஏழு நாட்கள் கழிந்த பின், கொதிக்கும் ஒப்பற்ற நீலமலை போல் எழுந்து நின்று, 'நான் கிடையாக விருந்து இன்சொற் கூறி வருணனை வேண்டியது, இழிந்த தன்மையன்றிப் பெருமையுடைய செயலன்று ; எனது பெரிய ராசத குணத்தின் அழகிய திறமையைக் கண்டாலன்றி வருணன் நம்மை யறியான் ; வருணனுடைய பெருமைகளையும் என் தாழ்வையும், செல்வத்தால் வாழும் வீரர்களே நீங்கள் அறிதிர்' என்று சொல்லி, அதுவரை வருணன் வாராதிருந்தமை கண்டு, நீண்ட வில்லாலே வழி காண்பேன் என்று ஒப்பற்ற பெருஞ்சினம் எழ நின்றிருந்த பெருமாளே ; நின் திருப்பேர்கள் ஒப்பற்றனவாய் அளவின்றி உள்ளன ; இதழ்கள் அவிழ்ந்த செந்தாமரை போன்ற திருக்கண்களும் அளவற்றன ; கொடிய படைக் கருவிகள் அமைந்த கைகளும் அளவற்றவை ; மற்றைய

உறுப்புக்களும் அங்கங்கு அளவற்றனவாயுள்ளன ; இத்தகைய பேருடல் நினைக்குள தென்று துணிந்தறிந்து, இரவு பகலாகிய இரு போதுகளிலும் ஆயிரம் பூ மாலைகளைக் கொண்டு நின் ஆயிரம் திருப்பேர்களையும் சொல்லி அணிந்து வணங்காமல், இரவும் பகலும் தீமைதரும் நட்புக்கினிய சொற்களைச் சொல்லிச் சுழன்று அலையும் தன்மையுடையவனும், களைகண் எவருமில்லாதவனு மாகிய நான், பாண்டவருள் ஒருவனாகிய சாதேவன் அறிந்ததும் பெரியதும் வஞ்சமுள்ளதுமான நின் பதினாறாயிரம் வடிவுகளுள், தாமோதரனென்ற திருமேனியே முதல் என அறியத்தக்க ஞானம் நீங்காத நின் திருவடிகளை அடைவேனோ ?

தனதன தனதத்த தத்தந்த தந்த
தனதன தனதத்த தத்தந்த தந்த
தனதன தனதத்த தத்தந்த தந்த தனதான

210. பசையற வெளிறக்க னித்தொண்டை யுண்டு
முகமொடு முகம்வைத்து மைக்கொந்த ளங்கள்
பரிமளம் விசிறக்கு லைத்தங்கி ரண்டு தொடையாலும்
பரிவொடு பிரியத்த ணைத்திங்கி தங்கள்
அடைவினில் விளைவித்து வட்டங்கொள் கொங்கை
பகடென வெதிர்தைத்தி டக்கண்டு வந்து நகரேகை
இசைபடு குறியிட்டு வைத்துந்தி யந்தண்
மடுவினில் முழுகிக்கு ளித்தங்க மொன்றி
இறுகிய துகில்கட்ட றச்சென்ற கன்ற கடிமீதே
இதயமொ டுயிர்வைத்து றக்கொண்ட பெண்கள்
கலவியில் வசமற்றி ருக்கின்ற நெஞ்சம்
இளகியுன் அடியிற்ப திக்குந்த வங்கள் பெறுவேனோ
விசையறு படவிற்ப டைக்கின்ற பண்டம்
அசைவுறு சகடத்தி னிற்கொண் டிறங்க
விரவிய பவளக்கொ டித்தண்டு சங்கு வெளிகாண
வெளிபடு சுறவைக்க கப்பந்தி கிண்ட
மறைபுகு மிமபுத்ர னுட்கொண்டொ துங்க
விபுலையு முடையற்று டற்கின்பி றந்து மிகநாண
அசுரரு மடியப்பி லத்தின்க ணின்று
பணிகளு நெளியக்கொ திக்கின்ற வங்கி
அயர்வுறு கடடப்பு றத்தின்கண் மண்ட உயர்வாரோர்

அமருல கடையப்பு கைக்கொண்டு வெம்ப
வெறுவுறு வருணப்ர புக்கண்டி றைஞ்ச
அலைகடல் சுவறக்க டைக்கண்சி வந்த பெருமாளே.

உரை :—நீ மிகச் சினந்து அம்பு செலுத்தியவுடன், அது கடலில் விழுந்து நீர் முழுதும் சுவறக் குடிக்கும் போது வருணனுடைய பொருள்கள், ஊர்தி, ஆடை அணிகள் முதலிய பண்டங்கள் வெந்து அறுபடவும், ஒளி பெற்ற மற்றைய பொருள்களை யெல்லாம் அசையும் வண்டியில் வைத்துக் கொண்டு கீழிறங்கவும், கலந்து படர்ந்த பவளக் கொடியின் தண்டுகளும் சங்குகளும் வெளியே தெரியவும், கடலினின்றும் வெளிப் பட்ட சுறு மீன்களைப் பறவைக் கூட்டங்கள் கிளறிக் கொத்தவும், அடைக்கலம் புகுந்த மைந்நாகமலை இந்திரனுக்கஞ்சி ஒளிக்கவும், நிலமகள், தான் உடுத்திருந்த ஆடை வெந்ததனால், இன்பம் நீங்கி நாணமடையவும், ஒளித்திருக்கத் தக்க நீரில்லாமையால் அசுரர் வெளி நின்று வெந்து மடிய வும், பாதலத்தில் நின்ற பாம்புகள் வெப்பம் தாங்காமல் உடலை நெளிக்க வும், கொடுமையாகச் சுட்ட நெருப்பு வருத்தமற்ற கூர்மத்தின் முதுகிற் போய் விரைந்து சுடவும், உயர்ச்சியாகிய மேன்மையையுடைய விண்ண வர் வாழும் உலகத்தைப் புகை சூழ்ந்து கொளுத்தவும், விண்ணுலகு முதல் பாதலத்தில் உள்ள கூர்மம் வரையில் ஒரே அளவாக நெருப்பு வளர்ந்து எரிக்கும் போது, மிக அஞ்சிய வருணன் வந்து வணங்கவும், அலைகடல் சுவறுமாறு கடைக்கண் சிவந்து சினங்கொண்ட பெருமாளே; பெண் களின் கொவ்வைக் கனிபோற் சிவந்த உதடுகள் வெண்ணிறமாம்படி பசை யற உமிழ் நீரை யுண்டும், முகத்தொடு முகம் வைத்தும், கரியகுழல் மணம் வீசவும், சொருகுறக் கோத்து அவர்களுடைய இரண்டு தொடைகளிலும் அன்புடன் அணைத்தும், இன்பந்தருங் கலவிகளை மதனூலிற் சொல்லப் பட்ட முறையிற் செய்தும், வட்ட வடிவான கொங்கைகள் யானைக் கொம்பு போல் எதிர்த்து மார்பில் தைக்கவும், மகிழ்ச்சியுடன் நகக் குறிகளை அக் கொங்கையில் பொருந்தித் தோன்ற அமைத்தும், உந்தியாகிய அழகும் குளிர்ச்சியுமுடைய மடுவில் மூழ்கிக் குளித்து ஈருடலும் ஒன்றுபடக் கலந் தும், அரையில் இறுகக் கட்டிய புடைவை நெகிழ அல்குலின்மேல் மன மும் உயிரும் பொருந்த வைத்தும், பொருந்தச் செய்து கொண்ட பெண் களின் இன்ப நுகர்ச்சியில் மெய்ம்மறந்து நிற்கும் என் கல்நெஞ்சத்தை நின் திருவடிகளினின்றும் திரும்பிவர வொட்டாமல் புதைத்துக் கிடக்கும் தவத்தை நான் என்று பெறுவேனோ? சொல்வாயாக.

('உந்தி, யந்தண் மடுவினில் முழுகிக் குளித்தங்க மொன்றி' என் னும் அடிகட்கு இடக்கர்ப் பொருள் எழுதியிருத்தலின் விளக்கமான உரை எழுதாது விடப்பட்டது.)

தான தாந்தான தான தனன
தான தாந்தான தான தனன
தான தாந்தான தான தனன தனதான

211. தாப மாம்போது நீரு நிழலும்
மோக மாம்போது ஞான உணர்வு
தாக மாம்போது பான முணவு பசியாறுன்

சாது வாம்போது கேளிர் வினைமுன்
வாது வாம்போது மோது கிகிரி
சாவ தாம்போது வீடு சிறிதும் உதவாதே

லோப மாம்போது தார முதகம்
ஆழ மாம்போது மேடு மழையி
னூடு போம்போது மூடு சிவிகை பலநூலும்

ஓத லாம்போது தீவ்ர மதியம்
நோவ தாம்போது தீர வமிழ்தம்
ஓசை யோங்கார நாம மலது பிறிதாமோ

கோப மாம்போது வேத வசன
வாளி தான்கூறி நேட முடுகு
கோல மீன்பூசல் காணும் வருணன் அதுகாணும்

கோதை பூந்தோகை கேள்வ சரணம்
நீதி நீங்காத ராம கருணை
கோயி லாந்தேவ தேவ வபயம் எனவோடும்

வாபி ராந்தாவு ஞவி பிழையென்
ஏவு போந்தாரை கூறு கெனலும்
வாரி வேந்தான ஞேத வவன துரைகேளா

மாறு காந்தார தீவி லசுரர்
நூற தாங்கோடி பேரு மடிய
வாளி யாங்கேவி மீள வருள்செய் பெருமாளே.

உரை :—நீ கோபங்கொண்டு நின்றபோது, நீ விட்ட அம்பு கடலை யடைந்து வருணன் எங்கே யென்று தேட, அழகிய மகர மீன்கள் விரைந்து செய்யும் போரை விலக்கப் பார்த்த வருணன், அந்நெருப்பைக் கண்டு ஓடிவந்து, நின் திருவடிகளை வணங்கி, 'அழகிய பூ மாலையைத்

தரித்துத் தாமரை மலரில் வாழும் பெரிய பிராட்டியாரின் கணவரே, அடைக்கலம்; மனு வழக்குத் தவறாத இராமா அடைக்கலம்; அருளைத் திருக்கோயிலாகக் கொண்டெழுந்தருளியுள்ள தேவர்க்குந் தெய்வமே, அடைக்கலம் அடைக்கல'மென்று மூறையிட்டு மீண்டும் வணங்க அவ் வருணனை நீ பார்த்து 'அறிவற்றவனே, இனி நீ உன் உயிர் போகாமல் பிழைத்துப்போ; என் அம்பு வாளா திரும்பாது; அது செல்லும் வழியைச் சொல்,' என்று சினமின்றிக் கேட்டவுடன் அதற்குரிய வகையைக் கடற்கரசனான வருணன் சொல்ல, அங்ஙனமே வடதிசையில் மாறுகாந்காரத் தீவில் இருந்த நூறுகோடி யசுரரும் அழிய அவ் அம்பினை அங்கே அனுப்பி மீண்டும் தன்னிடம் வரப்பணித்தருளினை பெருமாளே: (இவ் வசுரரைக் கொன்றதால் வாலியை மறைந்து நின்று கொன்றது குற்றமின்மை யறிக. பாவிகளை எதிர்த்து நின்று கொல்லுதல் வேண்டுமென்னும் நீதியில்லை; அவர்களை எவ்விதத்திலும் கொல்லுதல் அறமென்றும் அறிக) உடல் வெப்பங் கொண்ட போது நீரும் நிழலும், அறிவு மயங்கி அவாவும்போது மெய்யறிவின் தெளிவும், நீர் வேட்கையுள்ளபோது நீரும் பசியானல் உணவும், சத்துவ குணம் உள்ளபோது பெண்கள் விளையாட்டும், பழவினை வாதமிடும்போது சக்கரப் படையும், இறப்பு நேரும் போது வீடுபேறும், சிறிதும் இரப்போர்க்குக் கொடாது இவறியபோது வள்ளன்மையும், நீர் ஆழமாய் இருக்கும்போது மேடும், மழையில் நனையும் போது, நனையாமல் மேல் மூடி அமைக்கப்பட்டு எருதினுல் ஈர்க்கப்படும் வண்டியும், பல கலைகளையும் கற்கும்போது தீவிர புத்தியும், நோய் வந்தபோது அது தீர்க்கும் மருந்தும், ஆகிய வெல்லாம், ஓசையுடைய ஓங்காரம் முதலாகிய எழுழுத்துங் கூடிய எட்டெழுத்தான நின் திருப்பேரன்றி வேறுண்டாகுமோ? இல்லை.

(பிராந்தன் - பழைய அறிவு கெட்டுப் பித்தேறியவன்; பழைய அறிவாவது, பரசுராமனை இராமன் வென்று அவன் வில்லைப் பறித்து வருணனை நினைத்து மேலே நீட்ட அந்நினைவறிந்து அதனை வாங்கி வைத்திருந்து, கரன் சண்டையில் இராமன் வில்லொடிந்து போக, அப்போது வருணனை நினைத்துக் கீழே கையை நீட்ட அந்நினைவறிந்து முன் வாங்கி வைத்திருந்த அவ்வில்லைத் தந்தது. நல்லறிவோடு காத்திருந்து ஏவல் செய்து, இப்போது அளவற்ற தருக்கினுல் நல்லறிவு கெட்டு ஏழு நாளும் வராமல், நெருப்பாற் சுட்டு ஒறுக்கும் காலத்தில் அறிவு பிறந்து அஞ்சி வந்தனை; ஆதலின் நீ பிராந்தன் என்று கூறினுன் இராமன்.)

(சிவிகை - பல்லக்கும் ஆம்) (தீவிர அறிவாவது: மந்தம், மந்ததரம், தீவிரம், தீவிரதரம் என அறிவு நான்கு வகைப்படும்; அவற்றுள் மந்தமாவது வாழைத் தண்டிலும், மந்ததரமாவது பூச்சை விறகிலும், தீவிர

மாவது, உலர்ந்த விறகிலும், தீவிரதரமாவது கரியிலும் நெருப்புப் பிடி பதுபோல அறிவு செல்வது. தீவிரதரமாவது நூலால் அறிவு வந்த பின் அதனாலும், கேள்வியாலும், அன்பு நிட்டைகள் கூடுவது; ஆதலி நூலாயும் அறிவினைத் தீவிர அறிவு என்றார்.)

தனன தனந்த தனன தந்த
தனன தனந்த தனன தந்த
தனன தனந்த தனன தந்த தனதான

212. அரவு சுமந்த தகில மெங்கும்
அரவு சுமந்த துணையு மந்த
அரவு மிரண்டு வடிவ மன்று செகநீயெ

றவையு மிரண்டு வடிவு மன்று
நெடிது சுமந்த வரவு மொன்றிவ்
வகில முமுன்றன் வடிவு மென்று தெளிவார்யா

சுருதி முடிந்த பொருள தென்பர்
அருள்வ டிவென்ப ரறிவ தென்பர்
சுடர்ம யமென்பர் அருவ மென்பர் அவரோது

சொலவு பொருந்த விரகி னின்று
மருவி யவுன்ற னளவு கண்டு
தொழுது பணிந்து திருவ ரங்கம் மறவேலே

வருண னையஞ்ச லெனவி ளம்பி
விரிக டலின்கண் வழிவி டென்று
மகிமை துலங்கி யருளு கின்ற பொழுதேயெ

வலிமு துகின்கண் நடவு மென்று
பெரிது சுமந்த பிறகு வந்து
வருந ளன்விஞ்சை வகையின் முந்தி அணைகோ

இருநி லமெங்கு மினிது நின்ற
மலைகள் பிடுங்கி யனும துங்கன்
இரவி மகன்கு முதன்ம யிந்தன் வலிநீல

இளவ ரசன்ப னசன டங்க
உவரி குழம்ப நளன்வி ரும்ப
எறிவ துகண்டு மனம கிழ்ந்த பெருமாளே

உரை :— வருணனை அஞ்சற்க வென்று சொல்லிய பின், கடல் வழி யாக இலங்கைக்குச் செல்லுவதற்கு வழி விடுக வென்று உன் பெருமை விளங்குமாறு நீ கேட்ட போது, வருணன், என் திண்ணிய முதுகின்மேல் மலைகளைப் படுத்து அதன்மேல் நடத்திர் என்று சொல்லி விரிவாகச் சுமந்த பின்னர்; மகிழ்ச்சியோடு வரும் நளனுடைய சிற்பக் கலையின் வகைகளினால் முன்னே அணைகோல, அப்போது, பெரிய நிலம் சுமக்கும் மலைகளை அனுமான் பிடுங்கி, கதிரோன் மைந்தனாகிய சுக்கிரீவனும், குமு தனும், மயிந்தனும்; வலிமை மிக்க நீலனும், இளவரசாகிய அங்கதனும், பனசனும் ஆகிய சேனைகளும் கடலும் குழம்பவும், அணைகட்டும் நளன் விரும்பவும் எறிவது கண்டு திருவுள்ளம் மகிழ்ந்தருளினை பெருமாளே; எல்லா உலகங்களையும் ஆதிசேடனாகிய பாம்பு சுமந்து உன்னையும் சுமந் தது ; எனவே அப் பாம்பு இரண்டுருவுடைய தன்று ; உலகங்க ளென்றும் நீ யென்றும் தனித் தனி உருவங்களல்ல ; உன்னையும் உலகையும் சுமந்த பாம்பும் ஒன்றே; உலக மனைத்தும் நின் வடிவமே என்பவற்றைத் தெளியத் தக்க பேர் யார் ? சிலர் மறை வடிவம் என்பர் ; மற்றும் சிலர் அருள் வடி வென்பர் ; அறிவு வடிவமென்றும் உரைப்பர் ; சோதி வடிவு என்றும் அருவென்றும் கூறுவர் ; இங்ஙனம் அவரவர் கூறும் சொல்லுக்குப் பொருத்தமாகச் சூழ்ச்சியில் நின்று சேர்ந்த நின் வடிவைக் கண்டு கை குவித்து வணங்கித் திருவரங்கமென்னும் நினைவு கூர்வதை என்றும் மற வேன்.

சொலவு - சொல்.

தனந்தான தத்தனன தத்த
தனந்தான தத்தனன தத்த
தனந்தான தத்தனன தத்த தனதான

213. விருந்தேய ழைத்தினிதி ருத்தி
அறங்கூர நற்பகடு கட்டி
விளைந்தேவ ரப்பொருள்ப டைத்து மனைவாழ்வு

மிகுந்தூரில் மிக்கவனொ ருத்தன்
எனும்பேரெ டுக்கவிசை பெற்று
விளங்காயி ழைக்குவச முற்று நலமேவிப்

பெருந்தேவ ருக்குவழி பட்டு
மனந்தானி னைத்தபடி மக்கள்
பெரும்பேறு முற்றியவர் கட்கு மதிகூறிப்

பிணங்காது நற்குடிப டுத்தி
நெடுங்கால மிப்படியு ழைக்கப்
பிறந்தாசை யற்றறினி முத்தி அருள்வாயே

துரங்தேக விக்குலம னைத்தும்
நடந்தேம ரத்தினொடு கற்கள்
சுமந்தேய டிக்கடிகு விக்க வழிநூறுட

துலங்கோச னைக்கிடைகி டக்க
மருங்கான வுட்கிடைய கற்சி
சுருங்காது பத்துவன மெத்த வருணேசன்

இருந்தேப டுத்திடுபு றத்தின்
முழங்காழி யைத்தொனிய டக்கி
இழிந்தேந ளப்புவொ ருத்தன் அணைகோல

இடஞ்சேர வெற்பினைய டுக்கி
நெடுஞ்சேது வைக்கடிது கட்டி
இலங்காபு ரிக்குவழி விட்ட பெருமாளே

உரை :—குரங்குக் கூட்டமெல்லாம் நான் முன்னே நீ முன்னே யென்று ஒருவரை யொருவர் துரத்தி நடந்து சென்று மரங்களோடு மலைகளைச் சுமந்து வந்து அடிக்கடி குவிக்க வழியாக விளங்கி நூறு யோசனை நீளங் கிடக்கவும், அதன் இருபுறமான உள்ளிடத்தில் அமைந்த அகலப் நீளத்திற் கேற்பச் சுருங்காமல் பத்து யோசனை அமையவும், நீர் திரும்பி யெழவும், வருணன் இருந்து படுத்து முழங்கும் கடலோசையை அடக்கி நிற்க, நளனென்னும் பெயரையுடைய தலைவன் பள்ளத்தி லிறங்கி அணையாகக் கோலி வளைக்க, ஏற்கும் அகலம் உண்டாகுமாறு மலைகளை அடுக்கி நீண்ட சேதுவை விரைவிற் கட்டி இலங்கை நகருக்கு வழி காணவிட்ட பெருமாளே ; நான் பிறந்த பின்னர் விருந்தாக வந்தவரை அழைத்து அவர்கட்கு இன்பமான உணவை யளித்தும், அறம் மிகுதியும் வளர நல்ல கிடாய்களைக் கலப்பையில் கட்டி உழுது பயிரிட்டு விளைவித்த பொருள்களைப் பெற்று அவற்றாற் செல்வம் பெற்றும், வீடும் செல்வமும் மிகுந்து ஊருக்கு இவன் ஒருவனே சிறந்தவனென்று பெயர் பெற்றும், நல்லனவென்றாராய்ந்து தரித்த பொற்பணிகளை யணிந்த பெண்களுக்கு வசமாகி நலம் பெற்றும், பெருந் தேவர்கட்குப் பூசனை புரிந்து கருதியவாறே மக்களைப் பெற்றும், அவர்கட்கு அறிவுரை கூறி, அவர்களை வெறுக்காமல் நற்குடிகளாக்கியும், இவ்வாறு இல்லறத்தில் அழுந்தி எழ வியலாமல் தவித்

துக் கிடாவைப்போல் உழைத்தும், எனக்குப் பிறவியினால் உண்டாகிய விருப்பம் அற்றுப் போயிற்று ; இனி வீடுபேற்றை அருள்வாயாக.

தத்த தானன தத்தன தானன
தத்த தானன தத்தன தானன
தத்த தானன தத்தன தானன தனதான

214. புத்தி யோடுச மர்த்திலை யாயினும்
வித்தை யோதுக ருத்திலை யேனுமொர்
புட்ட மாகினு மிட்டறி யாமுரண் உறுமேனும்
பொய்த்த வாசக னிக்ருபை யேனும
சுத்த ஞகினு நற்றெருடி நாரியர்
பொற்ப யோதர நத்திய பாதக வடிவேனும்
எத்த ஞகினு மப்புற மேதிரி
மத்த ஞகினு மக்கர மானதொர்
எட்டு மேகரு திக்கொடி ராகவ எனவோதும்
இச்சை யாகிய பக்தர்கள் போலினி
முத்தி வேணுமெ னக்கரு தேனடி
இட்ட தோர்பய பத்தியை நீமுதல் அருள்வாயே
நத்து வேலையி னப்புற மேயபின்
விச்சை சேருந ளப்ரபு வானவன்
நற்ப தாதியி ருப்புறு பாசறை இடம்யாவும்
நட்பி ஞேடுச மைத்திட வானரர்
புக்கு வாழ்வுற வப்புற மேகமழ
நட்டு வாரவ ரிச்சுட னேமுக டதுகோலி
அத்ரி மீதுள புற்கொடு நீடிய
கற்றை சாலவு முச்சிய சாலையில்
அற்ற தோர்துயில் வித்தகன் மாருதி கவிராசன்
அச்சு தாவம ரப்ரபு வேசரண்
இச்சை யேவல்ப ணித்தருள் வாயென
அச்சு வேதப ருப்பத மீதுறை பெருமாளே.

உரை :—சேதுவாகிய அணையின்மேல் நடந்து சங்குகள் உள்ள கடலைக் கடந்து அக்கரையை அடைந்த பின் சிற்பத் தொழிலமைந்த நள

ஞகிய படைத் தலைவன், சிறந்த வானரப் படைகள் தங்கியிருக்கத் தக் படை வீடுகளை அன்புடனமைக்க, அவ் வவ்விடங்களில் குரங்குப் படைக இன்புடன் தங்கியிருக்க, அப்புறத்தில் மூங்கில்களை நட்டு வரிச்சுப் பிடித்து அதனோடு முகடு வளைத்து, மலைமீதுள்ள புற்களைக் கொணர்ந்து நீண்ட கற்றையாக்கி மிகவும் மூடிய பன்னசாலையில், தூக்கமில்லாத ஒப்பற் இளைய பெருமாள், அனுமான், சுக்கிரீவன் ஆகியோர் உன்னிடம் வந்து போற்றி, 'அச்சுதா, தேவ தேவா, நின் திருவுள்ளத்துக்கு விருப்பமாக திருவடித் தொண்டுகள் இவையென எங்கட்குப் பணிக்க வேண்டு' மென் றிரக்க, அச் சுவேத மலையின்மேல் அமர்ந்தருளிய பெருமாளே ; எனக்கு நல்லறிவோடு திறமையில்லை யாயினும், நூற்களைக் கற்கும் கருத்தில்லை யாயினும், ஒரு மலரையேனும் நின் திருவடிகளில் அருச்சிக்க அறியாத வேறுபாடு உண்டேனும், பொய்த்த சொற்கள் அமைந்திருப்பினும், அரு ளற்ற கொடிய தன்மை யிருப்பினும், தூய்மையற்ற தன்மை யிருப்பினும் நற்கடகந் தரித்த கைகளையுடைய பெண்களின் கொங்கைகளை விரும்பும் பாவ வடிவிருப்பினும், அடுத்துப் பிறரை வஞ்சித்தல் இருப்பினும், உன் அறத்திற்குப் புறம்பாகத் திரியும் பித்துண்டாயினும், ஒப்பற்ற திருவெட் டெழுத்தைப் பலகாலும் நினைத்துக் கொண்டு இராகவா, இராமா வென்று சொல்லும் ஒப்பற்ற அன்பையும் அச்சத்தையும் நீ முன்னே அருள்வா யாக : அதன் பின் வீடுபேறருள்க.

தனத்தன தானன தத்த
தனத்தன தானன தத்த
தனத்தன தானன தத்த தனதான

215. வருத்தமதானபிறப்பில்
உதித்திடு யோனியுரைக்கில்
மழைக்கண தாரைநிகர்க்கும் மகவாக
வளர்த்திடு தாயர்கணக்கை
விதித்திடின் வேலையினிட்ட
மணற்சிறி தாய்விடு மெய்த்த முலையாலே
திருக்குறு பாவிகுடிக்க
அருத்திய பாலது மிக்க
திருக்கழ லாணைம திக்கின் உனதான
திரைக்கட லோர்சுழி யொக்கும்
அடக்கிய வீமம கற்று
செகத்தினி மேனுமி றக்க விடலாமோ

அரக்கர்பி ரான்விடு மொற்றர்
குரக்குரு வாயவி டத்தில்
அடுத்தவை யாயுமு யற்சி யுறுபோதில்
அவர்க்கெதிர் வீடண னுற்று
மனத்தெளி வோடுபி டித்து
அடித்துமு னேவிட மிக்க கிருபையாகி
உருக்கமு நேயமு மெத்தி
அடைக்கல மாயவன் மற்றென்
உயிர்த்துணை யானதும் வெற்றி அரசான
உபக்ரம மானது மற்றை
அனைத்துமி ராவண னுட்க
உரைத்திடு வீரென விட்ட பெருமாளே

உரை :—இங்கிப்படி யிருக்க, அரக்கர் தலைவனான இராவணன் விட்ட ஒற்றராகிய சுகன் சாரணன் என்னும் இருவரும் குரங்கு வடிவங் கொண்டு அச் சுவேத மலையின்கண் அடுத்துள்ள படைகளையும் அவர்கள் சொற்களையும் வீரத்தையும் தங்கள் அறிவில் தெளிய அறிய முயலும்போது, அவர்களை எதிரே கண்ட விபீடணன், இவர்கள் ஒற்றர்கள் எனத் தெளிந்து அவர்களைப் பிடித்து அடித்து உன் திருமுன்னர்க் கொண்டுவர, நீ அவர்கட்கு மிக்க கருணையோடு மொழிந்ததையும், உள்ளத்தில் உருக்கமும் அன்பும் மிகுந்து, 'இந்த விபீடணன் என்னிடம் அடைக்கலம் புகுந்து உயிர்த் துணையாயினதையும், வெற்றிபெற்று இலங்கையை யாள்வதற்கு இரண்டாம் முறையாகிய நிலையான அரசன் ஆனதையும், மற்றெல்லாச் செய்திகளையும் இராவணன் உள்ளந் திடுக்கிடுமாறு சொல்லுங்க'ளென்று சொல்லித் தன் படைகளையும், ஆற்றலையும் அளவையும் அறிவித்து அனுப்பிவிட்டனை பெருமாளே; வருந்தும் தரும் பிறப்பில் நான் பிறந்த யோனிகளின் கணக்கைச் சொல்லின் மழைத்தாரையை யொக்கும்; வளர்த்த தாயரை யுரைக்கின் கடலில் நிறைந்துள்ள மணலும் சிறிதாகி விடும்; செய்த்த பக்குவங் கொண்ட தனங்களில் உலகத்துக்குப் பாவியாகிய நான் குடித்த பாலின் அளவைச் சொல்லின் நின் திருவடியின்மேலாணையாக நின்னுடைய திருப்பாற்கடலில் அளவின்றிச் சுழித்துள்ள சுழிகளில் ஒரு சுழியாகும்; என்னை அடக்கிய சுடுகாட்டை எண்ணிப் பார்த்தால் என்னை அடக்காத நிலமில்லை; பலவிதப் பிறவிகளிலும் நான் இறந்த பிறகு என்னை அடக்கம் செய்தவிடம் உலக முழுதுமாகும் என்றபடி; ஆதலின், இதுவே தொழிலாகப் பிறந்தும் இறந்தும் இருத்தல் ஆகுமோ? ஆகாது; நீ எனக்கு நல்லருள் செய்வாயாக.

தனத்தன தத்தன தந்த தந்தன
தனத்தன தத்தன தந்த தந்தன
தனத்தன தத்தன தந்த தந்தன தனதான

216· விடைப்பணி புத்தமு தங்கள் சிந்தின
மதக்கரி குத்திய தந்த நொந்தன
மிகுத்தெரி யக்கன லுங்கு ளிர்ந்தன கடலூடே
விடுத்திடு வெற்பு மிதந்து நின்றன
கிரிக்குடு மித்தலை நின்றெ றிந்திட
விரித்திடு மெத்தையி னங்க மூழ்ந்தின ணிலமாதுட
படைத்தப டைத்திரள் அங்கு திர்ந்தன
சுழற்றுவ ளிக்குந லங்கு றைந்தன
பகைத்தவை யெத்தலை யுங்கு லைந்தன கனகேசன்
படைத்தவ ளம்பர லந்தொ லைந்தன
எழுத்துய ரெட்டில்வி ளைந்திடுஞ் செயல்
பகுத்தும தித்துவி ளங்க விங்கினி எளிதாமே
அடுத்தம லைத்தலை நின்றி லங்கையில்
நெருக்குதெ ருக்களு மண்ட பங்களும்
அகத்திலு யர்ச்சியு மன்றின் முன்றிலும் விடுதேருட
அரக்கர்செ ருக்குமத தங்க யம்பரி
புறப்படு கெற்சித மூந்தி ருந்திழை
யவர்க்கருள் பொற்புநெ டுந்த டங்களும் வளர்காவுட
இடித்திர ளொத்தசெய் குன்ற மும்பல
மதிற்குடு மித்தலை யுங்க டும்பொறி
இணைக்கமு மெய்ப்படை யும்பு ரந்தரன் நகர்நாண
இருக்கையு மிக்கப்ர பஞ்ச மெங்கணும்
விழிக்கடை வைத்துவி யந்து பண்புடன்
இலக்குவ னுக்குவி ளம்பி நின்றருள் பெருமாளே

உரை :—சுவேத மலைக்கு அடுத்த வேறொரு மலையின்மேல் நின்று இலங்கையிலுள்ள நெருக்கமான தெருக்களையும், மண்டபங்களையும், வீட்டின் உயரத்தையும், அம்பலமாகிய பொது விடத்தையும், முற்றங்களையும் செலுத்தி விடப்பட்ட தேர்களையும், அரக்கர்களின் செருக்காகிய உட்களிப் பையும், மிதமுள்ள யானைகளும் குதிரைகளும் புறப்படும் கெற்சிதத்தை

யும், பொன்னலும் மணியாலும் செய்யப் பெற்ற கலன்களை யணிந்த பெண்களின் அழகையும், அவர்களுடைய குணங்களையும், வளர்ந்த சோலைகளையும் இடிக்குழுவை யொத்த மேடைகளையும், எழு மதில்களின் சிகரங்களையும், கடுமையான கோட்டை வாயில் முதலியவை பொருந்திய இணக்கத்தையும், மெய்போல் தவருத படைக்கலங்களையும், இந்திரன் நகராகிய அமராவதியும் நாணுமா றிருக்கும் இருப்பையும், வளமிக்க இலங்கை நிலமெங்கணும் கடைக்கண் வைத்துப் பார்த்து வியந்து, வகை வகையான இலக்கணங்களை இலக்குவனுக்குச் சொல்லி நின்றருளிய பெருமாளே ; முன்னளில், நின் திருமந்திரத்தின் வலிமையினல், இரணியன் பிரகலாதனைக் கடிக்குமாறு விடுத்த எட்டுத் திக்குக்களிலும் இருந்த பாம்புகளின் நஞ்சுள்ள பற்கள், புதிதாகக் கறந்தது போன்ற பாலைச் சிந்தின ; மத யானைகள் எட்டும் குத்திய கொம்புகள் ஒடிந்து நொந்தன ; மிக்க நெருப்பில் தள்ளியபோது அந்நெருப்பும் குளிர்ந்தது ; கடலின் நடுவே கட்டி விடப்பட்ட மலையும் மிதந்தது ; மலை யுச்சியினின்றும் கீழே யெறியப்பட்ட பிரகலாதன் விழுந்த விடம் பஞ்சு மெத்தைபோல இருக்குமாறு நிலமகளும் அழுந்தினள் ; தவ வலிமையாற் பெற்ற படைக்கலங்கள், அவன் மேற் பட்டுப் பொடியாய் உதிர்ந்தன ; சுழன்று வீசும் பெருங் காற்றும் தன் வலிமை குறைந்தது ; இங்ஙனம் பிரகலாதன்மேல் பகைத்தவை எல்லாம் அழிந்தன ; இரணியனகிய அசுரர் தலைவனும் வரத்தாற் பெற்ற பெருமைகள் யாவும் அழியத் தானும் ஒழிந்தான் ; இவ்வாறு உயர்ந்த திருவெட்டெழுத்தினல் விளைந்த செயல்களைத் தொகுத்தும் விரித்தும், நினைத்தும் தெளியுமாறு ஆராய்ந்து விளங்குதல் எளிதாமோ? ஆகாது.

தான தானன தனன தந்த
தான தானன தனன தந்த
தான தானன தனன தந்த தனதான

2:7. மாறி லாவரு மறைய டங்க
ஓது வாரற மெலிதல் கண்டு
மாய ராசனி டைப்பி றந்து கரைகோலி
வாழு நான்முகன் வனிதை பங்கன்
வானு ளோர்முனி வரர்வி ளங்க
மாலை யாமடை யினில்வி ளம்பி அருளாயேல்
ஆறு மூவகை யெனவி ரிந்த
நீள்பு ராணமு மினிய மந்த்ரம்
ஆரு மாகம வகையு நின்ற அறம்யாவும்

ஆசி லாமனு நெறிவ ரம்பும்
வேறு வேறுள சமய வம்பும்
ஆழி சூழுல கினில்வி ளங்கும் எனலாமோ

வீறு கோபுர மிசையில் வந்து
சேனை வாழ்பலை யையெதிர் கண்டு
மேவு சாரனை வினவி நெஞ்சின் மிகநாணி

வீட ணாதிபன் இரவி மைந்தன்
நீலன் மாபன சனளன் எண்கின்
வீரன் மாகுமு தனது மிந்தன் ஒருபாலோர்

ஈறி லாவனு மனவ னந்த
வாலி சேயிவ னுடன்ம யிந்தன்
ஈச னேயனை யவொரு துங்கன் இளவீரன்

ராம னேகரி யவிறை யென்று
தூத ரேயடை வினில்வி ளம்ப
ராவ ணாதிப னறிய நின்ற பெருமாளே.

உரை :—மிக வுயர்ந்த கோபுரத்தின்மேல் இராவணன் வந்து நின்று, குரங்குப் படைகள் திறமையோடுள்ள சுவேத மலையைப் பார்த்துத் தன்னுடன் வந்த ஒற்றனாகிய சாரனை நோக்கி இவர்கள் யார்? யார்? என்ன பெயருடையர்? என்று விளக்கிச் சொல்லுக வென்று கேட்டு மிக்க வெட்கத்தோடு நிற்கையில், சாரன் சொல்லலுற்றான்; "இவர் விபீடணர் ஆகிய எங்கள் அரசர்; இவர் கதிரோன் மைந்தனாகிய சுக்கிரீவ மன்னர்; இவன் நீலன்; இவன் பெருமையுள்ள பனசன்; இவன் நளன், இவன் கரடிகட்கு அரசான சாம்பவன் என்னும் பெருமையுள்ள வீரன்; இவன் சிறப்புள்ள குமுதன்; இவன் அழகிய துமிந்தன்; ஒருபுறம் இவர்கள் இருக்க, மற்றொருபுறம் தனக்கு ஒப்பும் சிறப்புமில்லாத அனுமான் அவன்; அவன் அழகிய வாலியின் மகனாகிய அங்கதன்; அந்த வாலியை நீங்கள் முன்னே அறிவீர்கள்; அவன் மயிந்தன்; சிவபெருமானை யொத்த வலிமை மிக்க அவன், இளையவனாகிய இலக்குவன்; கருநிறமுள்ள அரசனே இராமன்" என்று முறையாக அவன் சொல்லக் கேட்டு இராவணன் அறிய நின்ற பெருமாளே; முன்னாளில் வேறுபாடில்லாததும் ஓதுதற்கரியது மாயிருந்த வேதம் பரவாமல் அடங்கி ஓதுவாரின்றி யொடுங்கிய போது, நீ, பராசர முனிவரிடத்து வியாசராக அவதரித்தருளி, வேதக் கடலை நான்கு கரையாக வளைத்துக் கட்டி, இருக்கு, எசுர், சாமம், அதர்வணம் என்று பெயரிட்டு, நான்முகன், மலைமகள் பங்கன், இமையவர், முனிவர் ஆகியோர்க்கு

நன்கு தெரியுமாறு ஒழுங்கும் வரிசையும் பெறச் சொல்லியருளி யிராயா யின், பிரம்மம் முதல் பிரமாண்டம் ஈருகப் பெயர் பெற்றுள்ள விரிந்த புராணங்களும் இனிய திருமந்திரமான காமிகம், யோகம், சித்தியம், காரணம் அசிதம், தீமித்தம், சூட்சுமம், சகத்திரம், அஞ்சுமானம், சுப்பிர பேதம், விசையம், நிசுவாசம், சுவாயம்புவம், ஆக்கினேயம், வீரம், ரவுர வம், மகுடம், விமலம், சந்திரம், நான்முகம், பிமமம், புரோக்கீதம், லளிதம், சித்தந்திரம், சந்தானம், சர்வோத்தமம், பாரமேசம், பாருடம், தந்திரம் என்று பெயர் பெற்ற இருபத்தெட்டு ஆகம வகையும், பதினெட்டுத் தரும புராணங்களும், குற்றமற்ற மனு, விஞ்ஞானேசுர நெறியின் மேற் கோளும், பல வகையிலும் அறிவு வேறுபட்ட சமய வாதிகளின் புதுமையும், கடல் சூழ்ந்த உலகில் விளங்குமென்று சொல்லலாமோ? ஆகாது.

தனதன தான தத்த தந்த
தனதன தான தத்த தந்த
தனதன தான தத்த தந்த தனதான

218. இருநில மீது பத்தி கொண்டு
நினதடி யேது திப்ப தன்றி
இனியொரு தேவ ரைப்பு கழ்ந்து தொழுமாறென்
எழுதவொ ணாத பொற்ப மைந்த
மரகத மேரு வொத்தி லங்கி
இனிமையி னோடு தெற்கி லங்கை முகமாக
அருமல ராள்செ கத்து மங்கை
துளவணி தாள்பி டிக்க வுந்தி
அயன்முத லோர்வ ழுத்த ரங்க நகரூடே
அரவணை மீதி னிற்பொ லிந்து
நதியிடை நீகி டக்கை யந்த
அருள்பெறு வீட ணர்க்கி ரங்கி யலவோதான்
ஒருகிரி மீதி லுச்சி நின்று
நிருதர்பி ரானெ டுத்தி யம்ப
உரியகு மாரர் மக்கள் மந்த்ரி வகைமாமன்
உயர்படை மேவு கத்த னென்று
வெகுவித மாம ரக்கர் தங்கள்
உரிமைவி டாது சுற்ற அண்டர் குலமாதர்

பரிவுட னேவல் பற்ற வங்கை
இருபது நால முற்பி றங்கு
பகுநெடு வாயெ யிற்று விம்ப ஒளிவீறப்
படிதரு மேக மொத்தி ருண்டு
மலைநிகர் கோபு ரத்தில் வந்து
பலதலை வீர னிற்கை கண்ட பெருமாளே.

உரை :—இராவணன் கோபுரத்தின் மேல் நின்று பார்க்கும்போது, நீ ஒப்பற்ற சுவேத மலையின் உச்சியில் நின்று, அரக்கர்க்கரசனான விபீடணன் இவரிவர் இத்தகையர் என்றெடுத்துச் சொல்ல, இராவணனுக்குரிய இந்திரசித்து முதலிய மைந்தர்களும், அவர்களுடைய மக்களும், அமைச்சர்களும், மாமனாகிய மகோதரனும், உயர்ந்த படைகளைத் தாங்கிய பிரகத்தனும் (படைத் தலைவன்) ஆகிய அரக்கர்கள் தம் உரிமைத் தொழில்களையும், முறைமையையும் விடாமற் சுற்றவும், விண்ணுளோரின் மகளிர் அன்புடன் ஏவல் செய்யவும், கொடிய கைகள் இருபதும் தொங்கவும், முன்னால் விளங்கும் பற்கள், பிளவுபட்ட நீண்ட பத்து வாய்களிலும் மதிபோல விஞ்சிய ஒளியைப் பெருமையாக வீசவும், கோபுரத்தின்மேல் படிந்த முகில்போல் உடல் இருண்டு, பத்துத் தலைகளையுடைய இராவணன் நின்றமையைக் கண்டருளின பெருமாளே; இப் பேருலகில் பத்திமை கொண்டு நின் திருவடிகளை வணங்குவதில்லாமல் வேறு தெய்வங்களைப் போற்றி வணங்கும் நெறி என்ன பயனுடைத்து; சித்திரத்தில் எழுத வியலாத அழகையுடைய மரகத மணியாலமைந்த மலையொன்று உண்டாகில் அதற்கொப்பாக நீ விளங்கி, அன்புடன் தென் திசையில் இருக்கும் இலங்கையை முகம் வைத்து நோக்கி, திருமகளும் நிலமகளும் திருத்துழாயை யணிந்த நின் செம்மலரடிகளை வருட, உந்தியிற் பிறந்த நான்முகன் முதலிய இமையவர் புகழ்ந்து பாடி வணங்க, திருவரங்கமென்னும் திருப்பதிக்கு நடுவில் சேடனாகிய படுக்கையின்மேல் பொலிவுடன் விளங்கி, திருக்காவிரியின் நடுவே பள்ளிகொண்டருளியது, நின்னைப் பூசிக்கும் அருளைப் பெற்ற விபீடணனுக்குத் திருவுள்ளம் இரங்கி யன்றோ?

தத்த தான தத்த தத்த தந்த
தத்த தான தத்த தத்த தந்த
தத்த தான தத்த தத்த தந்த தனதான

219. அற்கு லாவும் வெற்பெ னக்கி ளர்ந்து
முற்ற வேக னைத்து நெய்த்த துண்டம்
அற்ப வேர்வெ ழுப்ப ணைத்தகொம்பு கொடுசாடும்

அக்க டாவி னிற்ப்ர மிக்க வந்து
கட்டு வீசு கிட்டு முட்டு துண்டி
அப்பு மோதெ னக்கொ தித்த ழுன்று — நமனூர்தம்

தெற்கு வாவெ னத்து ரப்பி மூந்த
அட்ட காச மிட்டு யிர்க்கொ ழுந்து
சிக்க வேயு பக்ர மிக்கு மன்று — க்ருபையோடே

செக்கர் வானி டைப்ப சுத்த கொண்டல்
உற்ற கோல மொப்பு றப்பி றங்க
சித்ர ராச பட்சி யிற்பு குந்து — வருவாயே

நிற்கை கோபு ரத்தி னுச்சி கண்டு
குத்து வேனெ னக்கொ தித்த டர்ந்து
கிட்டு ராவெ னப்பி பிடித்தி லங்கை — யுடையோனை

நெற்றி கீழ்ப டப்பு டைத்த டர்ந்து
சுற்றி வாலி விட்ட கழ்க்கி டங்கில்
நிர்த்த மாடு வித்து கிர்ப்பு றங்கொ — டுடல்கீறி

பற்கொ டேக டித்து ரப்பி மண்டி
எற்றி வாய்ம டித்து தைத்து வென்று
பத்து மாமு டிப்ப றித்தெ ழுந்து — திருகாநீள்

பத்ம பாத முற்று முற்ப ணிந்த
சுக்கி ரீவ னைத்த டக்கை கொண்டு
பற்றி யேயெ டுத்த ணைத்து வந்த — பெருமாளே.

உரை :—கோபுரத்தின் உச்சியில் இராவணன் நிற்றலைச் சுக்கிரீவ மன்னன் கண்டு, அவனைக் குத்துவேனென நெஞ்சிற் சினமூண்டு, அக் கோபுரத்தின்மேற் குதித்து, அவனை நெருக்கி நின்று, 'அடா, பலைக் குணம் உடையவனே,' என்று கொடுமையாகக் கூறி, இலங்கை யரசனை அவனைப் பிடித்து நெற்றி கீழாகுமாறு அடித்தும் அறைந்தும், வாலினாற் கட்டி அகழிக் கிடங்கிலெறிந்து கூத்தாடச் செய்தும், நகங்களின் நுனி யால் உடலைக் கிழித்தும், பற்களாற் கடித்தும், அதட்டி விரைவாகக் கைகளால் நெருக்கி எற்றித் தள்ளியும், வாயைப் பிடித்துக் கொண்டு உதைத்தும் அவனை வென்று, பெரிய பத்து மணி முடிகளையும் திருகிப் பறித்துக் கொண்டு வானிலெழுந்து வந்து, நின் நீண்ட திருவடித் தாமரை களில் சேர்த்து வணங்க அக் குரக்கரசைக் கண்டு, நின் நீண்ட கை களால் அவனைப் பிடித்து மார்பிலணைத்து மகிழ்ந்தனை பெருமாளே; இருள்

குடியிருந்த நீலமலை போலெழுந்து, எல்லா உயிர்களும் அஞ்சி யிறக்கு மாறு முழங்கி, நெய்ப் பக்குவங் கொண்ட மூக்கிற் சிறிது வியர்வை உண்டாக, பருத்து நீண்ட இரு கொம்புகளாலும் குத்தும் அவ்வெருமைக் கடாவின் மேலேறி, கண்டவர் வெருக்கொள வந்து, 'பாசத்தால் கட்டு; கழுத்திற் சுற்றுமாறு வீசு; அருகிற் செல்; மேலே முட்டு; துடுக்குடன் அறை; அடி' என்று சொல்லிச் சினந்து, நெஞ்சம் சுடப்பட்ட எமன் 'என்னிடமாகிய தென்றிசைக்கு வா' வென்று அதட்டி என் முன் ஆ வாரம் செய்து உயிராகிய கொழுந்தை யாதனு உடலிற் புகச் செய்து பாசக் கட்டுக்குள் அகப்படுத்தித் தனக்கு உரிமையாக்கிக் கொள்ளும் அப் போது, நீ அருளோடு, செவ்வானிடையே பசிய நீலமுகில் போன்ற அழகிய வடிவுடன், தனக்குத் தானே ஒப்பாக விளங்கும் பறவை கரசான கருடன் மேலேறி வந்து அருள் செய்வாயாக.

(கருடாழ்வானைச் செக்கர்வானுக்கும், அவ்வானிலுள்ள நீலமுகிலை திருமாலுக்கும் உவமையாகக் கொள்க. இராவணன், கோபுரத்தின் உச்சி யில் நின்றதைக் கண்ட சுக்ரீவன், ஒருவருமறியாமல் அவனிடம் விண்ணை லெழுந்து சென்று பொருது, அவனுடைய மணிமுடிகள் பத்தையு கொணர்ந்த இச்செய்தியை அங்கதன் தூது சென்ற போதும் எடுத்து காட்டியுள்ளான்.)

தனதன தான தத்த தந்த
தனதன தான தத்த தந்த
தனதன தான தத்த தந்த தனதா

220. கதிபெறு நார தப்ர சண்ட
முனியொரு நாணி லத்தி ழிந்து
கருணைவி டாத கிட்ண வென்று தொழுதேயு
கரவட மாயை யிற்ப்ர பஞ்சம்
அடிமையி னேடி யற்று நின்ற
கணமிசை யோர்கு ளத்தின் முந்தி யதில்மூழ்கி
புதுமட வாளெ னப்பி றந்து
நரபதி மார்பி னைப்பு ணர்ந்து
புதல்வர்கள் பேர்பெற்றி டும்பை யுடன்மாழ்கி
புனலிடை மீள மற்றும் வந்து
துதிசெய நீக கைத்து நின்ற
புனிதவி னோத சித்தி ரங்கள் அறிவார்யா

பதினெழு மாவெ ளப்ர பஞ்ச
அடைவுட னேவ குத்தல் கொண்டு
பரிவுட னேகி ழக்கு நின்று பெருநீலன்

பவனகு மாரன் வெற்றி கொண்டு
குடதிசை போய டைத்தி யென்று
படையொடு நீயும் தெற்கெ ழுந்தும் உணர்வாலி

மதலைய டாசெ ருச்செ யென்று
நெறியுட னேவ குத்தி ரண்டு
வகைவெள மாக விக்கு லங்கள் வனமேவி

மகிழ்கனி காய ளிக்க வென்றும்
இளையவ ரோடு முற்றி லங்கை
வடதிசை வாயில் பற்றி நின்ற பெருமாளே.

உரை :—பெரு நிலம்போல் பதினேழு வெள்ளமாக அப் படைகளை வரிசையாய் நான்காக வகுத்து, பெருமையுடைய நீலனே, நீ கிழக்கு வாயிலின்கண் நின்று போர் புரிக வென்று அன்போடு சொல்லியும், வாயு மைந்தனாகிய அனுமானை வெற்றியோடு மேலைக் கோட்டை வாயிலில் நின்று பொருதி யென்றேவியும், அப்பெரும் படை வீரர்களோடும், அடா, அங்கதா நீ தெற்கே சென்று சண்டைசெய் யென்று அவனுக்குக் கட்டளையிட்டும், நீ, மற்றைய படைகளோடு வடக்குப்புற வாயில் நின்றும், இரண்டு வெள்ளம் படைகளைக் காட்டிற்கு அனுப்பி, சண்டை செய்யும் அறுபத்தெட்டு வெள்ளம் குரங்குகளும், மிக்க இன்பத்துடன் உண்ணுவதற்காகக் காய், கனிகளைக் கொணர்ந்து தருதிர் என்று சொல்லியும், தம்பியாகிய இளைய பெருமாள், சுக்கிரீவன், விபீடணன் ஆகியவர்களுடன் இலங்கைக் கோட்டையின் வட வாயிலை முற்றி நின்றருளின பெருமாளே; வீடுபெறத் தக்க நாரதரென்னும் மிகப் பெரிய முனிவர், ஒரு நாள் நிலவுலகுக்கு இறங்கி வந்து, துவாரகையில் கண்ணபிரானைக் கண்டு, 'அருளை விடாது உலகைக் காக்கும் கிருட்டிணா' என்று சொல்லி வணங்கி நிற்க, உனது கள்ள மாயையினால் உலகைச் சோம்பச் செய்து மயக்கத்தால் அவ்வுலகை நடப்பித்தலைச் செய்தல் வேண்டுமென்று கருதிய அக்கணத்தில், அந் நாரதரை மாயை மூடிக் கொண்டதனால், அவருக்கு முன்னேயிருந்த வோர் குளத்தில் அவர் மூழ்கிப் புதுப் பெண்ணாகப் பிறந்து, ஒரு அரசனைக் கூடி மகிழ்ந்து, பிள்ளைகளையும் பேரன்மார்களையும் பெற்று நீண்ட காலம் வருந்தி நொந்து முன் மூழ்கிய அந்நீரிலே மீண்டும் மூழ்கிப் பண்டைய வுருவை யடைந்து, ஒரு நொடிக்குள் பெண்ணாய்ப் பிறந்து

துன்பப்பட்டதை நினைத்து உன்னைப் புகழ்ந்து பாட, நீ நகைத்
நின்றனை. உன் தூய திருவிளையாடல்களை அறிவார் யார்? எவருமில

தனதானன தத்தன தானன
தனதானன தத்தன தானன
தனதானன தத்தன தானன தனதா

221. அரியாகவு தித்தது மேலொரு
மதயானைபி ழைத்தது நீள்பதம்
அனைதாழிப டைத்தது மேவிய சபையூடே
அவளாடைக ளட்சய மானதும்
அமரூடிர விற்பக லானதும்
அமவாசியை முற்பிற கானதும் அலைமூழ்கு
ஒருசேயுயிர் பெற்றதும் வேவுறு
கருவாகிய கட்டையி ராசதன்
உருவானது மிப்புவி வாணர்கள் அறியாரே
உனதீரடி யிற்படி யார்முழு
நாகூடுத னித்தனி யேகுவர்
உலகாயசி ருட்டிய லாதுபின் நடவாதே
இருநூறுவெ ளப்படை யானதொர்
அணியாகவ குத்ததி லேநகர்
இடுகாவல்பி ரித்தபி னாறிரு வெளமோடே
எமன்வாயிலின் முற்றும கோதரன்
அரிவாயில்ப்ர கத்தன டாவுக
இனமேற்றிசை பற்றுக மாமகன் எனவோ
வருதேரொடு நற்கரி மாவொடும்
அடல்சேரும ரக்கர்கு ழாமொடும்
அவர்மேவுப டைக்கல மாகிய வகையோடு
வடவாயில்பு றப்படு வேனென
நிருதேசனெ ருப்பட வேயவன்
வருமோவென நிற்பவ னேசுரர் பெருமாளே

உரை :—இப்பால் இலங்கையில், இருநூறு வெள்ளம் படைக
ஓரணியாக, ஐந்தணி வகுத்து, அவற்றில் ஒன்றைப் பிரித்து நகருக்கு

காவலாக்கி, மற்றொன்றுடன் யமன் திசையாகிய தெற்கில் மகோதரன் நின்று குரங்குகளைக் கொல்ல வேண்டுமென்றும், மேற்றிசையில் உள்ள வாயிலில் ஓரணியுடன் தன் பெருமகனாகிய இந்திரசித்துப் பொர வேண்டு மென்றும் அனுமானைப் பிடிக்க வேண்டுமென்றும், கீழ்த் திசையில் சேனை களுடன் பிரகத்தன் சண்டை செய்தல் வேண்டுமென்றும், மற்றைய இருநூறு வெள்ளம் படைகளுடனும், தேர்கள், சிறந்த யானைகள், குதிரை கள், வலிமைமிக்க அரக்கர் குழாங்கள் ஆகியவற்றுடனும் வரத்தாற் பெற்ற படைக்கலங்களுடனும், வடக்குக் கோட்டை வாயிலிற் புறப்படுவேன் என்றும் சொல்லி ஒருப்பட்ட அவ் இராவணன் வருவானோ வென்று நினைத்து நிற்கும் இறைவனே, விண்ணவர் பெருமானே; முற்காலத்தில் இரணியனுக்காகத் தூணில் நரசிங்கமாய் நீ வந்ததையும், ஒரு மத யானை முதலைவாயில் அகப்பட்டு ஆதிமூலமே யென்றழைத்த போது நீ, அவ் யானையைக் காத்ததையும், கிருஷ்ணவதாரத்தில் நீ பால் தயிர்களைக் குடித் தாயென்று இடைச்சிகள் துரத்த நீ ஓடிவர, வழியிலிருந்த ததிபாண்டனை உராய்ந்து உள்ளே ஒரு தாழியில் புகுந்து கொள்ள, உடனே கண்டெரிந்த அத்ததி பாண்டன், நீ யிருந்த தாழியின் மூடியை இறுகப் பற்றிக் கொண்டு, ' எனக்குக் கண் வேண்டாம்; வீடுபேறு வேண்டும்; அதைத் தாராவிடின் விடேன் '' என்று சொல்லி நிற்க, அப்போது அழகிய தாழி யாகிய அத் ததிபாண்டனுக்கு வைகுந்தம் அளித்ததையும், அரசவையில் பஞ்சாலிக்கு ஆடை மாளாமல் சுரக்க அருளியதையும், பதினான்காம்நாள் பாரதப் போரில், பார்த்தன் சயிந்தவனைக் கொல்லுவதற்காகப் பகலை இரவாக்கியதையும், அப்பாரதப் போரின் தொடக்கத்தில் களபலி கொடுத் தல் பாண்டவர்க் கியலுமாறு பின்னாளில் வரும் அமாவாசையை முன்னா ளில் வரச் செய்ததையும், அவந்தியிலிருந்த சாந்தீப முனிவருக்குக் குரு தட்சிணையாகக் கடலில் இறந்த அவர் மைந்தனைத் தேடி எமலோகத்தி னின்றும் கொண்டு வந்து அம் முனிவருக்குக் கொடுத்ததையும், உத்தரை யின் கருவாய் அசுவத்தாமனின் அம்பாற் கரியாகிக் கீழே விழுந்த அக் கரிக்கட்டையைப் பரீட்சித்தென்னும் அரசனாகுமாறு செய்ததையும், உன் அருள் என்று எல்லோரும் அறியாவிடினும், பெருஞ் சபைகளில் நடந்த அப்பெருஞ் செய்கைகளை அங்கிருந்தார் பலரும் அறிந்திருக்க இவ்வுலக மக்கள் அறியார்களா? அறிவார்கள்; அப்படி அறிந்து வைத்தும் நின் திருவடிகளை வணங்கார்; பெரு நரகிற்குத் தனித் தனி போகின்றனர்; அவர்கள் அறிவுக்கு நாமென்ன சொல்லலாம்; உலகின் படைப்பே இந் நிலைமை என்னலா மன்றி வேறு நடவாதென்பது உறுதி; படைப்புக் காலத்தில் உண்டாகிய விதிப்படியே எதுவும் நடக்கும்.

(இப்பாட்டில் கிருட்டின அவதாரத்தின் திருவிளையாடல்கள் சொல் லப்பட்டுள்ளன.)

தந்தன தானன தந்தன தந்தனந்
தந்தன தானன தந்தன தந்தனந்
தந்தன தானன தந்தன தந்தனந் தனதான

222. கஞ்சனார் தாமேவ ணங்குதாள் கொந்தெழும்
பைந்துழாய் தானேயி யங்குதாள் பின்புவெண்
கங்கைநீ ராலேவி ளங்குதாள் சந்ததம் புவிமாது
கண்கொளா மாரூப வின்பமா துந்தினம்
செங்கையா லேநீவு கின்றதாள் அண்டமும்
கண்டபா ரீரேழு மண்டியே தொண்டிடும் தலைநாள்
தஞ்சமா யூடேய டங்குதா ளன்பர்தம்
சிந்தையூ டேபோய மர்ந்ததாள் பண்படும்
சந்தமா நால்வேத மந்த்ரநூ லின்கொழுந் தகலா(
தண்டியே சீராடு கின்றதாள் வெஞ்சுரம்
சென்றதாள் பூமாரி சிந்தியே யன்புடன்
சங்கமாய் வானோரி றைஞ்சுதாள் என்சிரம் புனைவேடு
இஞ்சிதா னேரேவ ளைந்தவா றும்பழுந்
தம்பிமார் மூவோர்ம டிந்தவா றுந்திருந்
தெம்பியா லேநாசி தங்கையா ரங்கிழந் துளவாடி
என்கையா லேமானி றந்தவா றுங்குரங்
கொன்றுதான் மாநீர்க டந்தவா றுங்கடந்
திந்தவூர் தீயால கன்றவா றும்பகர்ந் திடுவாயே
அஞ்சுமோ நேரேய டங்குமோ வஞ்சினங்
கன்றுமோ பூமேல ணங்கையே தந்துவந் [வெ
தண்டுமோ சீர்வீட ணன்பெறு முன்பதம் பெறுமே
றம்பிலே போரோடு துஞ்சுமோ வஞ்சகன்
சிந்தைதா னேதோவ றிந்திலே னென்றையின்
றங்கதா நீபோய றிந்துவா வென்றநம் பெருமாளே

உரை :—தூதுவிடுதல் அரச நீதியென்று கருதி இராமன் அங்கதனோடு சொல்வது : "இலங்கையில் கோட்டை மதிலை நாம் செவ்வையாக வளைத்த வகையையும், முன் தண்டக வனத்தில் நிகழ்ந்த போரில் கரன் தூடணன், திரிசிரன் என்னும் தம்பியர் மூவரும் இறந்ததையும், குற்றமற்ற என் தம்பியால் சூர்ப்பநகை மூக்கிழந்ததையும், என் கையா

மானாக வந்த மாரீசன் இறந்ததையும், பல குரங்குகளுள் ஒரு குரங்கு பெரு நீர்க் கடலைக் கடந்து வந்து, இவ்வூரை எரியாற் கொளுத்திக் கூத் தாட்டுக் கண்டதையும் நீ சொல்வாயானால், இராவணன் அஞ்சுவானோ? செவ்வியின் உடன்பட்டு அடங்குவானோ? கடுஞ்சினத்தால் உளங் கொதிப்பானோ? மலர் மகள் போன்ற சீதையைக் கொண்டு வந்து நம்பாற் கொடுத்து அடைக்கலம் ஆவானோ? சிறப்புள்ள விபீடணன் பெறுத முன் பதமாகிய அயோத்தியை நான் கொடுக்கப் பெறுவானோ? போர்க் களத்தில் என் அம்பினால் இறப்பானோ? அவ் வஞ்சகன் உள்ளத்தை நானறியேன்; அங்கதா, இவற்றுள் ஒன்றை நீ சென்று அறிந்துவா" என்று மொழிந்தருளிய திருவரங்கப் பெருமானே; நின் திருவடி, உந்தியிற் பிறந்த பிரமன் வணங்குந் திருவடி; கொத்தாகப் பூத்த பசிய திருத்துழாய் தானே அசையும் திருவடி; பின் ஒப்பற்ற கங்கைநீரால் விளங்குந் திருவடி; உயர்ந்த நிலமகளும், கண்ணில் அடங்காத அழகையுடைய இன்பந்தரும் திருமகளும், என்றும் சிவந்த திருக்கைகளால் தடவுகின்ற திருவடி; முன்னாளில் விண்ணுலகையும் கண்ணுற்க் கண்டு, பதினன்குலகங்களையும் மிக விரைவில் அளந்து நின்ற திருவடி; அடியார்கள் உள்ளத்தில் புகுந்தமர்ந் தருளிய திருவடி; இமையவர் கூட்டமாகக் கூடி அன்புடன் பூமாரி பொழிந்து வணங்கும் திருவடி; இத்தகைய நின் திருவடிகளை என் தலையில் தரிப் பேனோ? சொல்வாயாக.

தானன தத்தந் தனதத்
தானன தத்தந் தனதத்
தானன தத்தந் தனதத் தனதான

223. ஊழியி ருக்கின் றவரொத்
தாசைமி குத்தும் பொருள்செப்
போடுபு தைத்தும் கருதிச் சுகமேயாம்
ஊனொடு றக்கங் களும்விட்
டாரொரு வர்க்குங் க்ருபையற்
றோடிய சித்தந் தெளியப் படையாதே
பாழினு ழைக்குங் கொடுமைக்
கீழ்மைய ரைக்கண் டகரைப்
பாதக ரைக்குண் டகரைப் பலவாகப்
பாடியெ னக்கொன் றதுகிட்
டாமலி ளைக்கின் றவனைப்
பாரினு யக்கொண் டடிமைக் கொளுவாயே

ஆழிய டைத்துங் கிரிமுக்
கூடம டுத்துங் கிளர்சுற்
றூரல்பி டித்தும் புனல்கட் டகழ்தூர

ஆடல்ப டைத்துஞ் சரணுற்
ேறோனைய ளித்தும் படிகட்
டாண்மையு ரைத்துந் திருவைச் சிறைசேரூர்

சூழவ ளைத்தும் படையைப்
பேரணி யிட்டுங் கெழுமித்
தோள்கள்பு டைத்துந் தருமத் துறைநாடிச்

சோரன்ம னத்தின் கிடையைக்
காணநி னைத்தங் கதனைத்
தூதுவி டுக்குங் கருணைப் பெருமாளே.

உரை:—கடலை யடைத்தும், திரிகூட மலையாகிய சுவேதமலையை யடுத்திருந்தும், உயர்ந்த கோட்டையின் சுற்று மதிலைப் பிடித்தும், நீரால் கட்டப்பட்ட அகழியைத் தூர்த்துக் கூத்தாட்டுக் கண்டும், திருவடிகளே அடைக்கலமென்று வந்த விபீடணனைக் காத்தும், ஒற்றர்களிடம் துலாக் கோலில் நிறை கட்டினதுபோல் சமனாகிய வுள்ளத்தோடு குரங்குப் படைகளின் ஆண்மையைச் சொல்லுக வென்று அறிவித்து அனுப்பியும், பிராட்டியைச் சிறை வைத்த இலங்கையைச் சுற்றி வளைத்தும், நான்கு வாயின் கண்ணும் படைகளை அணிவகுத்துப் பிரித்து வைத்தும், அவ் வீரரை அவ்வவ் வாயிலின்கண் தம் தோள்களைத் தட்டி ஆரவாரம் செய் வித்தும், அரச நீதியின் முறைப்படியே, பிராட்டியைத் திருடிய கள்வன் உள்ளத்திலுள்ள கருத்தை யறிய நினைத்துத் தூதுவிட்டருளிய அருளை யுடைய பெருமாளே; மக்கள் ஊழிக் காலம் வரையில் வாழ்வதாக வெண்ணி, பற்றுள்ளம் மிக்கும், பொன்னைச் செப்புள்வைத்துப் புதைத்தும், அதனால் பலகாலம் வாழலாமென்று நினைத்து இனிய உணவும் தூக்கமும் ஆகியவற்றை விட்டும், எத்தகையோர்க்கும் கொடாமல் இரக்கமற்று உறுதியான நன்மைகளின்றிக் கவலைப்பட்டும், ஓடிக்கொண்டிருக்கும் மனம் தெளிய மெய்யறிவு பிறவாமல், வீணில் மேன்மேலும் உழைக்கும் கொடுமையான அற்பர்கள்; அக் குரூரரை—பாவியரை—குண்டகரைப் பலவகையாகப் போற்றி, அவர்களால் ஒன்றும் கிட்டாமல் நொந்த மன முடைய என்னை இப்புவியில் பிழைக்கச் செய்து அடிமை கொண்டருளுக.

(குரங்குப் படைகளின் ஆண்மையை நடு நிலைமையோடு கூறியதனால் "படிகட் டாண்மை யுரைத்தும்" என்றார்.)

தந்தன தத்தத் தனதன
தந்தன தத்தத் தனதன
தந்தன தத்தத் தனதன தனதான

224., கொம்பைய சைத்துச் செவியினை
முந்தநெ றித்துச் சினமது
கொண்டுசு ழித்துக் கருகிய தொருபாரக்
குன்றநி கர்த்துச் சிறுகிய
துண்டம்வெ யர்த்துப் பொலிதரு
குண்டையை விட்டுக் கடிதினில் நமனார்தம்
வெண்பல்க டித்துக் கயிறது
கொண்டுசு ழற்றித் தடியினை
விஞ்சவெ டுத்துப் பொரவரும் ஒருபோது
மென்கம லக்கட் க்ருபையுடன்
அஞ்சலெ னக்கட் டுரைசெய்து
வென்றிகொள் சக்ரப் படையொடு வருவாயே
உம்பிகள் பட்டுக் கொடியவள்
மைந்தர்கள் கெட்டுச் செவிமூலை
ஒண்டொடி யற்றுச் சரணென ஒருவீரன்
உய்ந்துபி ழைத்துப் புரிசையை
நம்படை சுற்றிக் கடுகவும்
ஒண்டியொ துக்குற் றனையினி நிருதாவுன்
அம்பொன்மு டிக்கொத் துதறினர்
உன்பதி சுட்டுப் பொருதனர்
அன்றுபு றப்பட் டிலையென நகையாநின்(று)
அஞ்சவு ருக்கிச் செழுமலர்
மங்கையை விட்டுப் பிழையெனும்
அங்கதர் சித்தத் தினிலுறை பெருமாளே.

உரை :—நீ சொல்லியபடியே (அங்கதன்) இராவணனிடம் போய் "தண்டகவனத்தில் நின் தம்பியர் மூவரும் இறக்கவும், அதற்கு முன் தாடகையும் அவள் மக்களுள் ஒருவனும் மடியவும், மற்றொருவன் மானாக வந்து மாளவும், அழகிய வளையல்களை யணிந்த உன் தங்கையாகிய சூர்ப்ப நகை காது, கொங்கை, மூக்குக ளறுபட்டுத் துன்புறவும், கடற்கரையில்

உன் தம்பியாகிய ஒப்பற்ற வீரமுள்ள விபீடணன் அடைக்கல மென்று சொல்லிப் பிழைக்கவும், உன் கோட்டை மதிலை எங்கள் படைகள் வளைத்து முற்றவும், அப் படைகளில்லாமல் எஞ்சிய சிற்றிடத்தில் பதுங்கி ஒதுங்கி யிருக்கின்றனை; அடா, அரக்கனே, இனி உன் அழகிய பொன் முடியாகிய கொத்துக்கள் பத்தையும் எம்மவர் உதறித் தள்ளினர்; உன் நகரை எரித்து அரக்கர்களைக் கொன்றனர்; அப்பொழுதும் நீ புறப்பட்ட யல்லை; நீ செய்யும் ஆண்மை என்ன?" என்று சிரித்து நின்று அ விராணன் அஞ்சுமாறு நகைத்து, "செழித்த செந்தாமரைப் பூவிலிருக்கு பிராட்டியாரை விட்டுப் பிழைப்பாய்" என்று சொல்லிய அங்கதன் மன திருந்தருளிய பெருமாளே; எமதருமனுடைய ஊர்தியான எருமைக்கிடா கொம்பை யசைத்து, முன்னே காதுகளை நெறித்து, சினந்து கண்களை விழித்து, கருநிறமுள்ள மலைபோல், சிறுகிய மூக்கில் வியர்வை தோன் விருக்க அதன் மேலேறி நடத்தி எமன் விரைந்து வந்து, தன் வெ பற்களைக் கடித்து, கயிறாகிய பாசத்தைக் கையிற் பிடித்துச் சுழற்றி, த யினை மேம்பட எடுத்து என்னை அடிக்கவரும் ஒப்பற்ற அந் நேரத்தில் மெல்லிய தாமரைக் கண்களில் அருளோடு, அஞ்சற்கவென்று சொல்லி கொண்டு வெற்றி மிக்க ஆழிப் படையுடன் என்முன் வந்தருள வேண்டு

("கதியினை விஞ்ச வெடுத்து" எனவும் பாடம்.)

தந்த தத்தன தான தந்த
தந்த தத்தன தான தந்த
தந்த தத்தன தான தந்த தனதா

225. பங்க யத்தட நீர்ப டிந்து
தெண்டி ரைப்பொனி சூழ்கு டந்தை
பண்பு றத்தொழு தேபு யங்க அணைமீதே

பைம்பு னற்கட லோவ ளைந்த
அஞ்ச னக்கிரி யோவெ ழுந்து
பம்பு நற்புன லோவி தென்று களிகூர

தங்கு பத்தியி னுல்வ ணங்கி
அன்ப ருக்கரு கேசெ றிந்து
தண்ட மிழ்க்குரு கூரர் செஞ்சொல் மறையோதி

சங்கு சக்கர மாய்வி ளங்கு
திண்பு யப்பொறி யோடு நின்று
தஞ்ச முற்றொரு கால மின்பம் உறுவேனோ

இங்கெ னக்கொரு தூதன் வந்து
வம்பு ரைக்கும தோஷி வன்றன்
என்பொ டித்திடு வீர்க ளென்ற கொடியோன்முன்
எண்ப டப்பிடி யாவெ திர்த்த
வஞ்ச ரைத்தலை கால்பி டுங்கி
எண்டி சைப்புற மீதெ றிந்து மதில்மேல்நின்(று)
அங்க னற்கணை மாரி வந்து
சங்க ரிக்குமு னேயி லங்கை
அங்கி ளைத்தவர் போமி னென்று விடவோதி
அந்த ரத்தினி லேயெ ழுந்து
செங்க திர்ப்பிறை போல்வி ளங்கும்
அங்க தப்பெரு மாள்வ ணங்கு பெருமாளே.

உரை :—அங்கதன் சொல்லியது கேட்ட விராவணன், சொல்வது: "இங்கொரு தூதன் வந்து எனக்குத் தீச்சொற்களைச் சொல்லுவதோ? இவன் எலும்பை ஒடித்து உதிர்த்துப் போடுங்கள்;" என்று இராவணன் சொல்ல, அவன் முன்னே, நன்றாக எண்ணிப் பிடித்து எதிர்த்த வஞ்சகராகிய அரக்கர்களைத் தலையும் காலும் பிடுங்கி எட்டுத் திசைகளிலும் சிதற வெறிந்தும், மதிலின்மேல் நின்று, "நெருப்புப் போன்ற அம்பு மழைகள் வந்து கொல்லுவதற்கு முன்னே, வலிமை யற்றவர்கள் அனைவரும் இலங்கையை விட்டுப் பாதுகாவலான விடத்தை அடைதிர்," என்று அரக்கருடைய மனவுறுதி கெடச் சொல்லியும் விண்ணிலெழுந்து செங்கதிரின் பிறைபோல் விளங்கிய அங்கதனாகிய பெருமை பெற்றவன் வந்து வணங்கவிருந்த பெருமாளே; பொற்றாமரைக் குளத்தில் நீராடி, தெளிந்த அலைகளையுடைய திருக்காவிரியாறு சூழ்ந்துள்ள குடந்தையில் (கும்பகோணம்) இருக்கும் உன்னை நற்குணங்கள் பெற வணங்கி, அரவணைமேற் பள்ளி கொண்டருளிய உன்னைப் பசுமை நிறமுள்ள நீர் நிறைந்த கடலோ? வளர்ந்த நீல மலையோ? மேல் எழுந்து பரந்த நீரோ? என்று ஐயுற்று வியக்குமாறு மகிழ்ந்து, தங்கியுள்ள பத்திமையால் வணங்கி, நின் அடியவர் அருகில் நெருங்கி, இனிமையான குளிர்ந்த தமிழால், குருகைப்பிரானாகிய நம்மாழ்வார் செவ்வையாய் அருளியுள்ள தமிழ் மறையை ஓதி, சங்கு சக்கர வடிவாய் அழுத்தமாய்த் தோளில் விளங்கும் குறியாகிய எழுத்தோடு நின்று, எளிமையான ஆளாகி, ஒரு காலத்தில் நான் இன்பம் பெறுவேனோ?

(செங்கதிர்ப் பிறை என்றது இல்பொருளுவமை. 'இலங்கை' என்பதன் ஈற்றில் ஐந்தனுருபு தொக்கி நின்றது.)

தனதனன தனதனன தனதனந் தனதனன
தனதனன தனதனன தனதனந் தனதனன
தனதனன தனதனன தனதனந் தனதனன
தனதான

226. நெடியகண பணவிகட மணியலங் க்ருததரள
எயிறுசிறு பிறையிலொளிர் இருபதைம் பதுவதன
நிறைபவன வுதரவனல் பொறிபரந் திடுநயன
உரகேசன்

நிமிர்சுடிகை மலரணையின் மழைபொருந் தியமுகிலும்
மணியுமறி கடலுமர கதநெடுங் கிரியுமென
நிகரில்வடி வழகினெடு மகுடமுங் குடதிசையில்
ஒளிவீ

அடியிணைகள் குணதிசையி லிருமடந் தையர்மடியில்
வளரவட திசைமுதுகு பொலியவங் கிருவிழியும்
அருள்பொழிய முககமல மதியிலங் கையர்பதியை
மிகசா

அருமறைகள் பரவரிய திருவரங் கமதுறையும்
உனதுவழி யடிமையென வனுதினங் கவலையற
அசதியற மனமுருகி நினைவுறுந் தவநெறிகள்
பெறுவே

கொடியவனை யிருபதுகை நிருதர்தங் குலபதியை
யுடனணுகி யவனுடைய நினைவறிந் தசுரர்களை
குலையவொரு நொடியதனுள் முடுகியங் கதனணுகி
ரகுவீ

கொடியிடையை யவன்விடுவ திலையவன் தனதுமுடி
ஒருபதற வெதிர்பதறி யுடல்பிளந் துகுகுருதி
கொடிகழுகு பருகவினி யொருவிருந் திடநினைதி
எனலோடு

முடியசைய முகமலர மனமுவந் திடநெடிய
ஒருகையடு கணைதெரிய ஒருபெருஞ் சிலைகுனிய
முரிபுருவ நெறியமதி யிளவல்முன் செலமுடுகு
படைகூ

முறுகுசின மெழமுறுவல் சிறிதுவந் துலவவிரு
கனகபுய புளகமெழ வுலகமெங் கணுமறிய
முரசறைய வமருறுதி யெனவெழுந் தருளிவரு
பெருமாளே.

உரை :—கொடியவனும் இருபது கைகள் உள்ளவனும் அரக்கர்க்கரசனுமான இராவணனை, நீ சொல்லியபடியே அங்கதன் அணுகி, அவன் கருத்தை யறிந்து அரக்கர்களின் உறவினர்கள் நடுங்க, ஒரு நொடிக்குள், விரைந்து உன்பால் வந்து, "இரகு வீரா, கொடி போலும் இடையையுடைய பிராட்டியாரை அவ் விராவணன் விடுவதில்லை; அவனுடைய தலைகள் பத்தும் அற்று விழ எதிர்த்துப் பதறி அவனுடலைப் பிளந்து, அதினின்று ஒழுகும் குருதியைக் காக்கைகளும் கழுகுகளும் குடிக்க, இனிய விருந்திட நினைத்தல் வேண்டும்" என்று சொன்னவுடன், நீ, "இத்தகைய அறிவிலி இல்லை" யென்று தலையை யசைத்து, சீதை நம்பால் வந்தனள் என்னும் துணிவினால் முகம் மகிழ்ந்து, தூதுவிட்டு அதனால் அவளைக் கொடுக்கப் பேற்றோம் என்று பிறர் கூறும் வசையில்லாமல், போரிட்டு அவளைப் பெறுதல் வாய்த்தது என்று உளம் மகிழ்ந்து, நீண்ட வொரு திருக்கையால் கொல்லுந் தொழிலையுடைய அம்புகளைத் தெரிந்தெடுத்து, ஒரு கையால் பெரிய வில்லை வளைத்து, வளைந்த புருவம் நெறிக்க, (புருவம் நெறித்தல் இவன் நமக்கெதிரோ? என்று கருதி) நல்லறிவுடைய இளைய பெருமாள் முன்னே நடக்க, குரங்குப் படைகள் விரைந்து சுற்றி வர, இராவணனுடைய மூர்க்க குணத்தை நினைத்துத் திருகித் திருகிச் சினங் கொண்டு, இவனோ நம்மை வெல்ல நினைப்பவனென்று சிறு முறுவல் செய்து, பொன் மயமான இரு தோள்களும், நினைத்து வந்த செயல் நிறைவேறும் வாய்ப்பு வந்ததென்று புளகமெழ, உலகமாகிய எல்லா விடங்களிலும் உள்ளோர் அறியுமாறு, போர் நிகழ்தல் உறுதியென்று முரசறைய எழுந்தருளின பெருமாளே; நீளமும் கூட்டமுமுள்ள படங்களும், வேறுபட்ட மணிகளின் அழகும், திரண்ட பற்கள் சிதறிய பிறைபோல் விளங்கும் ஆயிர முகமும், காற்றை நிறையக் கொண்ட வயிறும், நெருப்புப் பொறி பரந்த கண்களுமுடைய பாம்பரசாகிய ஆதிசேடன் என்னும், நெற்றிக் குறியாகிய படப் பொறிகளையுடைய மலர்ப் படுக்கையின்மேல், மழை பெய்யும் வடிவமுள்ள முகிலும், நீல மணியும், அலைமறிந்த கடலும், மரகத மலையும் போல ஒப்பற்ற பேரழகோடு, முடி மேற்றிசையில் ஒளிவிடவும், திருவடிகள் இரண்டும் கிழக்குத் திசையில் நிலமகள் திருமகள் ஆகிய மனைவியர் மடித்தலத்து வளரவும், வடக்குத் திசையில் திருமுதுகு விளங்கவும், அப் பள்ளியிடத்தில் திருக் கண்களிரண்டும் அருளைப் பொழியும் திருமுகத் தாமரை, நல்லறிவுடைய, இலங்கையிலுள்ளவர்கட்கு அரசனான

விபீடணனை மிகப் பார்த்தருளவும், ஓதுதற்கரிய மறைகளாலும் புகழ லாத திருவரங்கமாகிய திருப்பதியில் பள்ளி கொண்டிருக்கும் உ அடிமை யென்று நாள்தோறும் கவலையற, மறப்புமற நெஞ்சுருகி உ னையே நினைத்தற்குரிய தவநெறிகளை நான் பெறுவேனோ ?

தானா தானன தாத்த தானன
தானா தானன தாத்த தானன
தானா தானன தாத்த தானன தனத

227. வீறு நாரியர் வாக்கி லேவினை
மாறு வேல்பொரு நோக்கி லேமனம்
வேறு யேவரு தாக்கி லேயிரு குழையூ

மீதா தாடிய தோட்டி லேமணி
வாரு டேவளர் கோட்டி லேமுழு
வீணே யாம்வினை யாட்டி லேயிரு குறிபோ

ஊறு மேனிகொள் கீற்றி லேநுதல்
மேலே தானிடு நீற்றி லேபழி
ஓரார் தாம்வர லாற்றி லேநெடு மயல

ஓடா மோகப ராக்கி லேயுனை
நாடே னோர்பொறி காக்கி லேனர
கூடே போய்விழு மாக்கி லேசம தொழியா

தேறு வானவர் பார்க்க வானரர்
மேலே தான்வினை கூர்க்க மாருதி
சீறு வேதென வர்க்க வாருதி வழிய

சேரார் மாநகர் பாழ்க்க நாணெலி
தானே மாநகர் கேட்க ராவணி
சீர்போய் வாளமர் தாழ்க்க வூர்மிசை வெயிலோ

ஏறு நீள்வெயில் காட்ட வீடணன்
ஓயா தேவினை மூட்ட மோதரன்
ஏறு மாயைகள் பூட்ட மாகுட கனா

ஈதோ வாழ்வென வீட்டை நாடிட
நேரே போய்வினை யாட்டை மேவிய
ராமா ராவண வேட்டை யாடிய பெருமா

உரை :—இனி நமக்கு நற்காலமென்று துணிந்து மனந்தேறிய இமையவர் அப் போரினைக் காணவும், குரங்குகளின்மேல் வஞ்சம் மிகுதியாக வினை செய்து மிக்கு வென்ற அரக்கர் போர்த் திறத்தை நன்ருகக் கண்டு சினங் கொண்டு 'ஈதே'தென்று அனுமான் ஆரவாரம் செய்யவும், கடல் வழியாக வந்து பகைவருடைய பெரு நகர் பாழ்பட நீ செய்த கோதண்டத்தின் நாணோசையைப் பிராட்டியார் காதுகளிற் கேட்கவும், இந்திரசித்தன்று புகழ் கெட்டு, படைப் போர் இழிவடைந்து போகவும், இலங்கையின்மேல் முன் எறிவாராத கதிரவனும் எறி நீண்ட வெயிலைக் காட்டவும், விபீடணன் ஓயாமல் போரினை மூட்டவும், மகோதரன், எற்றுக் கொள்ளக் கூடாத மாயைகளைப் பூட்டிச் செய்யவும், பெரிய கும்பகன்னனும், 'நம் வாழ்வு இதுதானோ ?' வென்று வெறுத்து வீடுபேற்றை நினைத்துச் சேரவும், செவ்வியுடைய இலங்கைக்குப் போய்த் திருவிளையாடல்களைச் செய்த இராமபிரானே, இராவணனாகிய அறிவில்லா விலங்கை வேட்டையாடியருளிய பெருமாளே; பெருமை மிக்க பெண்களின் பேச்சிலும், போர் செய்தலை விடாத வேல் போன்ற கண்களிலும் மனம் வேறுபட்டு, இனிமையாகப் பேசும் அவர்களுடைய தாக்குதலிலும், இரு காதுக்குள்ளுமிருந்து மேலே ஆடியசைந்த காதணிகளிலும், (குழைகளிலும் தோட்டிலும்) மூட்டுக்களில் மணிகள் அமைத்து செய்யப்பட்ட கச்சினுள் வளரும் யானைக் கொம்பு போன்ற தனங்களிலும், முழுதும் பயனில்லாத விளையாட்டிலும், குறிப்போல் வடுப்பட்ட உடலிற் கொண்ட கிழிப்பிலும், நெற்றியில் இட்டுள்ள திருநீற்றிலும், பழியைக் கருதாது தாம் தெரிவித்து வரும் நெறியிலும் மிக மயங்கி, ஓடிக் காணும் எல்லாமும் அம் மயக்கமேயாகி, இந்தப் பராக்கிலே மறந்து, உன்னை யாரென்று தெரிந்து கொள்ள, ஐம்பொறிகளுள் ஒன்ருகிய கண்ணைக் காக்கும் செயலில்லாதவன் நான்; நரகில் வாழும் பெருங் கவலை என்னைவிட்டு ஒழிந்து போகாதோ? சொல்லுக.

தான தானன தனதன தந்தன
தான தானன தனதன தந்தன
தான தானன தனதன தந்தன தனதான

228. பூமி யானது தனதுக னங்கெட
நோயு லாவுடல் இனியற நொந்தகைப்
போத னாகிட யமன்விடு கண்டகர் பதநோவும்
போக மாநரக துயுலெ ழுந்திட
ஏழொ டேழுல குரையற வெங்கடல்
போது நீள்வினை தொலைவுற வென்பிற விபுமாளக்

காம மேமுத லறுபகை வென்றிடு
ஞான மானது நிலைபெற வுன்க்ருபை
காண லாமென வுலகுதெ ளிந்திட ஒருகால
காறு லாவிய துளவொடு கங்கையும்
நாலு வேதமு மினிதும ணந்திடு
காமர் சேவடி தொழுதுவை குந்தமும் அடைவே

மாம ராதிகள் மலைகளெ றிந்தவை
தூளி யாய்விழ வியன்மழு வங்கதை
வாளி சூலமு முடுகநெ டும்பறை நிமிர்கான
வாரி யோசையி னதிரநி ணங்குடர்
சோரி யூனிடை யொழுகம லர்ந்தடர்
வான ரேசரு நிசிச ரும்பொரு முதலுளி
நாம நீலனொ தொருகையில் வெம்புறு
கீழை வாயிலி னிருதர்ம டிந்தபின்
நாச மாய்விடு பகைஞர்கு லைந்துயிர் தடுமா
நாலு வாயிலு மமர்கள்வி ளைந்திட
ராவ ணசுர னினிவரு மிங்கென
நாடி யேவட திசைமிசை நின்றருள் பெருமாளே

உரை :—முரசொலி கேட்டவுடன், நான்கு வாயிலிலும் நின்ற வானர கள், அரக்கர்கள் எறிந்த பெரிய மரங்கள் முதல் மலைகளெல்லாம் தூளா படி வேல், மழு, கொடுந்தடி, அம்பு, சூலம் முதலிய படைக்கலங்களா மோதவும், பெரிய பறை, களம் நிறைந்த எக்காளம், முதலிய இயங்கள் கட லொலிபோல் ஆரவாரம் செய்யவும், நிணமும், குடரும், குருதியும், தசை யும் இடையில் ஒழுகி ஓடவும், போர் செய்த குரங்குப் படைத் தலைவ களும், அரக்கர்களும், பொருத முதல் நாளில், பெயர் பெற்ற நீலனுடை ஒப்பில்லாத கையினால், கிழக்கு வாயிலில் சினத்தாற் கொதிக்கும் அரக்க இறந்த பின், இராவணன் விட்ட பகைவரானவர்களும் இறந்து உயிர் த மாறவும், நான்கு வாயில்களிலும் இவ்வாறே போர் நிகழவும், இராவண இங்கே வருவானென்று நினைத்து வடக்கு வாயிலின்கண் நின்றருளி பெருமாளே ; நிலவுலகம் என்னைச் சுமந்த பொறை கெட்டுப் போகவும் நோய் உலவிக் கொண்டிருக்கும் உடல் அற்றுப் போகவும், என்னைப் படைத்த பிரமன் தன் கைகள் நொந்து படைக்குந் தொழிலை விடவும் தூதர்கள் என்னைப் பிடிப்பதற்காக அலைந்து திரிந்ததனால் உண்டாகிய கால் நோய் நீங்கவும், பெரு நரகில் நான் குடியிராமல் அது புல் முளைத்

றுப் போகவும், பதினுன் குலகங்களிலும் என் பேச்சு இல்லாதிருக்கவும், கடல்போற் பெருகிய நல்வினை தீவினை யென்னும் இரண்டும் எஞ்சியிரா மல் அற்றுப் போகவும், என் பிறவி யழியவும், காமம் முதலிய பகைகள் ஆறும் அழியவும், வெற்றி பெற்ற ஞானமொன்றுமே அழிவின்றி நிலை பெறவும், நின்னருளைக் காணலாமென்று பெரியோர்கள் தம் உள்ளந் தெளியவும், தேன் உலவும் திருத்துழாய் மாலையோடு கங்கையாறும், நான்கு வேதங்களும், இன்பமாகக் கூடியிருந்த அழகிய நின் திருவடிகளை நான் ஒரு காலத்தில் வணங்கி வைகுந்தம் அடைவேனே? அன்றி இப் படியே அலைவேனே?

தனதன தத்தந் தனந்த
தனதன தத்தந் தனந்த
தனதன தத்தந் தனந்த தனதான

229. வரிவிழி தைக்கின் றபின்பு
மனமது சிக்கென் றழுந்தி
மருவுடல் புக்கங் கிணங்கி மடவார்தம்
வசமுறு பித்தந் தெளிந்து
பொருவகை யெட்டுங் கடந்து
மறுவில்கு ணத்தன் பர்தங்கள் உறவாகித்
திருவடி யைக்கண் டுகொண்டு
மதுமலர் வர்க்கம் பொழிந்து
செறிபுனல் சுற்றுங் குடந்தை அதுபாடித்
திரைகட லிற்றுன் றுகின்ற
மணவினை யொக்கும் ப்ரபஞ்ச
செனனம றுத்துன் பதங்கள் பெறுவேனே
நிருதர் படக்கண் டபின்பு
தசமுகன் வெச்சென் றெழுந்து
நிருபனை முற்கண் டெதிர்ந்து பதிவீசும்
நிரைமலை யைக்கண் டதுண்டம்
உறவொரு விற்கொண் டடர்ந்து
நிலையது மத்துங் கன்வந்து பொருபோதில்
எரியுமிழ் குத்தொன் றில்வெம்பி
மருமமி சைக்கொம் புசிந்தி
இவனுமொர் குத்தின் கலங்க அமராடி

இருபது கைக்கொண் டவம்பு
சிலையொடெ திர்க்கின்ற பின்றை
இளவல்பொ ரக்கண் டுநின்ற பெருமாளே

உரை :—பத்து முகங்களையுடைய இராவணன், நான்கு வாயில்களிலும் தன் சேனைகள் அழிவதைக் கண்டு வெப்பங் கொண்டெழுந்து குரக்கரசனை சுக்கிரீவனை முன்னே கண்டு எதிர்க்க, அவ்வானர அரசன் எறிந்த மலைகளை ஒன்றன் பின் ஒன்றாகத் தன் வில்லால் துண்டித்த பிறகு அழிவில்லாத் தன்மையையுடைய அனுமான் வந்து போர் புரியும்போது அவன் குத்திய நெருப்பைக் கக்கும் குத்தினால் நெஞ்சு சுருண்டு மார்பில் இருந்த திசையானைகளின் முப்பத்திரண்டு கொம்புகளும் கீழே சிந்த மயக்கமடைந்து தெளிந்து, அனுமானைக் கையாற் குத்த அவனும் அதனால் மயங்கித் தெளிவடைந்த போதில், பத்துக் கைகளில் வில்லும் பத்துக் கைகளில் அம்புமாக வரும்போது இலக்குவன் அவனுடன் போர் செய்வதைக் கண்டு நின்ற பெருமாளே ; பெண்களுடைய செவ்வரி பரந்த கடைக் கண்கள் தைத்தபின், மனம் திண்மையாக அழுந்திக் கலவி செய்ய உடல் ஒன்றோடொன்று நெருங்கி இணங்கி, அப்பெண்களின் வயப்பட்டு நிற்கும் பித்துத் தெளிந்து, என்னை அடக்கியாளும் எட்டு வகையான இராகத் தொழில்களைக் கடந்து வென்று, குற்றமற்ற குணங்களையுடைய நின் அடியார்கட்கு உறவாகி, அவர்களோடு வந்து, நின் திருவடியைக் கண்டு, தேனொழுகும் பூக்களைச் சொரிந்து மிகுந்த நீரையுடைய காவிரியாறு சுற்றியுள்ள திருக்குடந்தையைப் பாடி, அலையையுடைய கடலில் கிடக்கும் மணலைப்போல் உலகிற் பிறக்கும் எண்ணற்ற பிறவியின் வேரையறுத்து நின் திருவடிகளை யடையப் பெறுவேனோ ?

(நிருபன் என்றதும் பதி என்றதும் சுக்கிரீவனை என்க.)

தனத்த தனதன தான தத்தன
தனத்த தனதன தான தத்தன
தனத்த தனதன தான தத்தன தனதான

230. நிலத்தை யளவிட வோப ரத்தவின்
முகட்டை யளவிட வோவ டுப்பரு
நெருப்பை யளவிட வோசி றப்புறு மடியார்தம்
நினைப்பை யளவிட வோபு கழ்ச்சியர்
பிறப்பை யளவிட வோஅ கற்சிலை
நிறத்தை யளவிட வோதி னைப்பகி ரதிவீறும்

சலத்தை யளவிட வோம லர்க்கொடி
கரத்தை யளவிட வோக கப்பதி
தடக்கை யளவிட வோசெ ழித்திடு மறைநால்வர்
சிரத்தை யளவிட வோப ணத்தலை
நடத்தை யளவிட வோம ணிக்கழல்
தரித்த திருவடி நீப டைத்ததென் அருள்வாயே
இலக்கு மணன்விடு வாளி தைத்திட
வலக்கை யுறுகணை நூறி மற்றைய
இடக்கை யுறுசிலை மாறி விட்டபின் ஒருவேலை
இலக்க முறவிட மார்பு புக்கது
துளைக்க வவன்விழு போது பற்றிமுன்
எடுக்க விளவலெ ழாமை யிற்பரி பவமாகி
அலக்க ணுறுமது போது மெத்தென
எடுத்து விசைகொடு தாவி யக்களை
அகற்றி யடலனு மான திப்ரிய மதுவீற
அருத்தி யிமையவர் பூவி றைத்திட
எடுத்த சிலையுடன் நீல வெற்பென
அரக்கர் பதியுட னேயெ திர்த்தருள் பெருமாளே.

உரை :—இளைய பெருமாள் விட்ட அம்புகளால், இராவணன் வலக் கையிலிருந்த அம்புகளைப் பொடியாக்கி இடக் கையிலிருந்த விற்களையும் ஒடித்தபின், அவன் ஒரு வேற்படையை இலக்குவன்மேல் வீச அது அவ் விளையோன் மார்பில் தைக்க அவன் கீழே விழுந்து மயங்க, இராவணன்தன் கையால் அவனைத் தூக்கும் போது மேல் கிளம்பாமையால், எளிமையாகி இராவணன் வருந்தும் போது, அனுமான் வந்து மெல்லிய பொருள்களை எடுப்பது போல் எடுத்து விசையோடு பாய்ந்து மயக்கந் தெளியச் செய்து திரும்பி வர, அனுமானை நீ கண்டு அவனிடம் அருள் மிகுந்திருக்க, அப் போது, விருப்பம் மிக வாய்ந்த இமையவர் பூமாரி பொழிய, இடக்கையில் கோதண்டத்துடன் நீல மலையைப் போல், அரக்கர் தலைவனான இராவண னுடன் எதிர்த்து நின்றருளினை பெருமாளே; உன் திருவடிகளின் அளவை யறிய, நீ முன்னாளில் அளந்த உலகை அளவிடவோ? பெரிய விண் முகட்டை யளவிடவோ? அருகில் அணுகவொட்டாமல் சுடும் நெருப்பை யளவிடவோ? அறிவுத் திறமையுள்ள அடியார்களின் தியானத்தை அளவிடவோ? புகழ்ந்து போற்றுவோர் தம் பிறப்பை யளவிடவோ?

கல்லாகிக் கிடந்த அகலிகையின் மார்பை யளவிடவோ? அலைகளையுடை கங்கை யாற்றின் வெள்ளத்தை யளவிடவோ? பொற்றாமரையி லிருக்கு பெரிய பிராட்டியாருடைய திருக்கரங்களை அளவிடவோ? பறவைகட்க சரான கருடாழ்வாருடைய நீண்ட திருக்கைகளை அளவிடவோ? செழித் வேதங்களையுடைய புருஷர் நால்வர்களின் தலையை அளவிடவோ? காளி கனுகிய பாம்பின் தலைகளில் ஆடிய கூத்தினை அளவிடவோ? மணிக பதித்த வீரக் கழலை யணிந்த திருவடிகளை நீ அவ்வளவாகப் படை தேன்? அதனை அருளிச் செய்க.

தானதன தத்த தான
தானதன தத்த தான
தானதன தத்த தான தனதான

231. நாகணையை விட்டு நேரில்
கோசலைக ரத்தி லாகி
நாடுறுவ னத்தில் மேவி வழியூடே
நாளுமொழி வற்ற பாறை
கோதமர் கிழத்தி யாக
நான்மறைம ணத்த தூளி ய துவிசிட்
பாகிரதி யுற்ற வோடம்
ஏறியொரு சித்ர கூட
பாரசிக ரத்து லாவி முறையாலே
பாரரசு நத்தி டாத
பேரிளவ லுச்சி சூடு
பாதுகை யளித்த பாத மடைவேனோ
ஆகவத சக்கி ரீபன்
வேகமொடு சுக்கி ரீபன்
ஆகமுற விட்ட சூல மதுநூறி
ஆயிடைய ரக்க ராலும்
ஈடுறவெ டுக்கொ ணாத
ஆகியையெ டுத்து நீடு தமர்மேவி
மாகரிகி றுத்து கோடு
நால்வகையி னெட்டும் வீழ
மார்பினிடை குத்தி மோது வசிபாரா

வாளமரு ழுக்கி வீடு
தாவிவரு ருத்ர வேட
மாருதிபு யத்தி லேறு பெருமாளே.

உரை :—நீ இராவணனுடன் எதிர்க்கும் போது, நீ ஏறியிருந்த ஊர்தியாகிய அனுமான், போர்க் களத்தில் பத்துக் கழுத்துக்களையுடைய இராவணன், சுக்கிரீவன் மார்பிற் படுமாறு முடுக்கி விடுத்த சூலம் பொடியாமாறு நொறுக்கி, அங்கு அரக்கர்களாலும் வருந்தி எடுக்க வியலாத இளைய பெருமாளை எடுத்து, மிகுதியாய்க் கூடியிருந்த தம்மவரிடம் கொண்டு சேர்த்து, திசை யானைகள் எட்டும் நிறுத்திய முப்பத்திரண்டு கொம்புகளும் கீழே விழுமாறு இராவணன் மார்பில் குத்தி, அரக்கர் மோதிப் போர்புரியும் வலிமையைக் கண்டு, நடுவிலே புக்குப் போர்க் களத்தைக் கலக்கி உருத்திரனுடைய வடிவம் போல வர, அவன் தோளில் ஏறியிருந்தருளினை பெருமாளே; திருப்பாற் கடலிற் பள்ளிகொண்டருளிய அரவணையை விட்டு, ஒப்பற்ற கோசலையின் கைகளில் தங்கி, உன் நாட்டிற் பொருந்தியிருந்த காட்டில் கோசிக முனிவரின் பின் சென்று வழியில் என்றும் நீங்காதிருந்த பாறையைக் கௌதம முனிவரர் மனைவியாகிய அகலியாக நான்மறைகளும் கூடியுள்ள திருவடித் துகளை வீசி, கங்கையில் இருந்த ஓடத்தில் ஏறி, ஒப்பற்ற சித்திரகூட மலையின் பருத்த உச்சியில் உலவித் திரிந்து, மூத்தோனிருக்க இளையோன் அரசாள்வது மனு முறைக்கு அடாத செயலென்று வந்த வெற்றி மிக்க பரதன் தலையுச்சியிற் சூட்டிக் கொள்ளத் திருப் பாதுகையைக் கொடுத்தருளினை ; அத் திருவடிகளை அடியேன் சேருவேனோ? சொல்லுக.

தனந்தன தானன தத்தன
தனந்தன தானன தத்தன
தனந்தன தானன தத்தன தனதான

232. வியட்புனை சாபமு ருக்கியும்
எதிர்ந்தவள் கூனைய கற்றியும்
வருங்கொடி யாளுயிர் பற்றியும் அழியாதே
மகந்தனில் காவல் நடத்தியும்
நெருங்கிய மானைய டக்கியும்
மயங்கவ ராவையு றுத்தியும் அவண்சேர
அயர்ந்துபுள் வாய்விட வெற்றியும்
நெடுங்கடல் சூழ்புவி கட்டியும்
அழிந்தவ ராவிதி ருப்பியும் மடமாதின்

அருந்துயர் தீரவ ருட்செய்தும்
இரண்டவ தாரமும் ஒத்தவுன்
அரங்கவி மானமன த்தினின் மறவேனே

புயந்தனி லேறிவ டிக்கணை
துரந்துநி சாசரர் பட்டெதிர்
புறந்தர யானைய டற்பரி உடல்வேறாய்

புரண்டிட வோடுதி ரைக்கடல்
பரந்திட மோதியு முட்கனல்
புகைந்திட நீள்புய வெற்பிரு பதுநாலு

வியன்சிலை வாளிய கற்றியும்
உடம்பினி லூடுக ழற்றியும்
விளங்கிய மாமுடி தட்டியும் ஒருபாகனை

விழும்படி தேரது முக்கியும்
அசங்கத மாகவ ரக்கனை
வெறுங்கையி னேடுநி றுத்திய பெருமாளே

உரை :—அனுமானுடைய தோளில் நீ ஏறிய பின், அரத்தாற் கூர்மை செய்யப்பட்டுள்ள அம்புகளைத் தொடுத்து விட்டு, எதிர்த்த அரக்கர்கள் இறக்கவும், அஞ்சியோர் முதுகு காட்டியோடவும், யானைகள், வலிமை மிக்க குதிரைகள் ஆகியவை உடல் துணிக்கப்பட்டு வேறாகிப் பிணமாய்ப் புரளவும், குருதிக் கடல் ஓடிப் பரக்குமாறு மோதியும், இவற்றைக் கண்ட விராவணன் நெஞ்சில் நெருப்புப் புகைய நீண்ட மலைபோன்ற இருபது கைகளாலும் ஏவிய விற்கள் பத்தையும் அம்புகளையும் துண்டம் செய்துப் அவன் உடலிற் கட்டியிருந்த கவசத்தை விழச் செய்தும், எங்கும் விளங்கும் மாமுடிகளைக் கீழே தள்ளியும், ஒப்பற்ற தேர்ப்பாகனை இறக்கச் செய்து தேரைத் தூளாக்கியும், பார்ப்பதற்கு வெறுப்புண்டாகுமாறு இராவணனை வெறுங் கையோடு காலாளாக நிறுத்தினை பெருமாளே ; இராமவதாரத்தில் ஆற்றல்மிக்க வில்லை மிதிலையில் ஒடித்தும், எதிரே வந்த மந்தரை யென்பவளுடைய உடற் கூனை உண்டை யெறிந்து போக்கியும், விசுவாமித்திர முனிவரின் பின் போகும் போது எதிர்த்து வந்து கொடுமை செய்யும் தாடகையின் உயிரைக் கவர்ந்தும், மாய வேடத்துடன் நெருங்கிவந்த மாரீசனாகிய மானைக் கொன்று அவன் மாயத்தை யடக்கியும், எல்லோரும் மயங்குமாறு இந்திரசித்தன் விட்ட நாகபாசத்தைக் கருடாழ்வானால் அறுக்கச் செய்தும், பஞ்சவடியிற் குறும்பு செய்த காக்கை பிறிதோர் அடைக்கலம் இன்மையால் வாய் விட்டலறத் துரத்தி

அதன் கண்ணைப் பிடுங்கியும், கடலில் அணை கட்டியும், பிரம்மாத்திரத்தால் இறந்த வானரர் உயிர்களை மருத்து மலையால் திருப்பியும், இராவணன் இறந்த பின் திருமூர்த்திகளின் வரத்தின்படி அயோத்தி சென்றும், இளமையையுடைய பிராட்டியார் சிறைத் துன்பம் நீங்க அருள் செய்தும், (அகலிகை சாபம் தீர்த்தென்றும் ஆம்) கிருஷ்ணாவதாரத்தில் கஞ்சன் செய்த வேள்விச் சாலையிலிருந்த வில்லை ஒடித்தும், மதுரை நகரில் எதிரே வந்த மணமுள்ள பொருள்களை விற்கும் கூனியின் கூனைப் போக்கியும், பால் கொடுப்பவள் போல் வந்த பொல்லாத பூதனையாகிய கொடுமை செய்யும் அரக்கியின் உயிரைக் கவர்ந்தும், அரசர்கள் செய்யும் ராசசூயம், அசுவமேதம் முதலிய வேள்விகள் அழியாமற் காத்தும், உன்னைக் கொல்ல நெருங்கி வந்த கேசி யென்னும் அரக்கனது மாய வடிவமான குதிரையைக் கொன்றும், (குவலயா பீடமென்னும் யானையை யெனலும் ஆம்) காளிங்கன் என்னும் பாம்பு அறிவு கலங்கும்படி அதன் தலைமேல் ஆடியும், கொக்கு வடிவாய் உன்னைக் கொல்ல வந்த அரக்கனது வாயினுட் புகுந்து, அது வாய்விட் டலறுமாறு, உன் உடலைப் பருக்கச் செய்து, அப் பறவையின் வாயைப் பிளந்தும், கடல் சூழ்ந்த துவாரகையாகிய நிலத்தைப் புதிதாகக் கட்டியும், இறந்தவர் உயிர்களை மீண்டுங் கொணர்ந்தும் (அஃதாவது, மலைப் பாம்பின் வயிற்றில் அகப்பட்ட இடையர், பசுக்கள் முதலியவற்றின் உயிரைக் கொண்டு வந்ததும் காளிங்க மடுவிலிருந்த நச்சு நீரைப் பருகியிறந்த இடையர்களும், சாந்தீப முனிவர் மைந்தனும், கண்ணனுக்கு முன் கஞ்சனால் கொல்லப்பட்ட ஆறு பிள்ளைகளும், துவாரகையில் இறந்த ஓர் அந்தணன் மைந்தர் பதின்மரும், அசுவத்தாமாவின் அம்பினால் உத்தரை வயிற்றில் இறந்து பிறந்த பரீட்சித்தும், ஆகியோரின் உயிரை மீட்டதும்,) அறியாமையையுடைய திரௌபதியின் மானங் காத்து ஆடை சுரக்கச் செய்து அருள்புரிந்தும், இரு அவதாரங்களும் ஒன்றென்று சொல்லுமாறு ஒத்த செயல்களைச் செய்த நின் திருவரங்க விமானத்தை என்றும் மறவேன்.

(இப்பாட்டின் முற்பகுதியில் சிலேடை யமைந்துள்ளது.)

தந்தன தானன தந்த
தந்தன தானன தந்த
தந்தன தானன தந்த தனதான

233. கண்களோ வேல்களோ வெஞ்ச
ரங்களோ வாள்களோ வஞ்ச
கங்களோ எமனோ நஞ்சின் வடிவேயோ

கஞ்சமோ நீலமோ தங்கு
கெண்டையோ சேல்களோ கண்ட
கண்களான் மாயமோ வென்று பலகா

பண்கொளா மாரனர் கொஞ்சு
கின்றதே தோவெனு நின்று
பங்கமாய் மோகமாய் நெஞ்சு தடுமா

பண்டனைய் வீணனய் வெம்பி
நொந்தநாள் போதும்வா வென்று
பைம்பொனர் பாதநீ யென்று தருவா

மண்கொளா தாகவே துன்று
மெண்குசேர் தானையோ டுந்தி
மஞ்சுபோல் நீடுகோ தண்ட மதுகே

மண்டுதோள் மாகிரீ டங்கள்
அஞ்சுநா லாறுநா லின்கண்
வம்புறு வாளியே சிந்தி எதிர்போ

எண்கொளா வீரர்போய் முந்து
தந்திபோய் ஏறுதே ரின்றி
இன்சொல்போ யாண்மைபோய் நின்ற நிலைகா

என்செய்வாய் வாடினய் கிஞ்சு
வஞ்சகா ராவண வஞ்சல்
இன்றுபோய் நாளைவா வென்ற பெருமாளே

உரை :—நிலம் இடம் கொள்ளாமல், நெருங்கிய கரடிகளோடு சேர் குரங்குப் படைகளுடனே முற்பட்டுச் சென்று போர் செய்து நீருண் முகில்போல், உனது நீண்ட வில்லை வளைத்து, எதிர்த்து நின்ற இராவ ணுடைய இருபது தோள்களிடத்தும் பத்து முடிகளிடத்தும், பொய்த்து போகாத அம்புகளை வீசியபோது, அளவற்ற அரக்கர்களும் முதன்ன யான யானைகளும் அழிந்து போகவும், ஏறிய தேரும் இன்றிக் குதிரை களும் இறந்து ஒழியவும், இன்சொற்கள் நீங்கவும், ஆண்மை கெடவு அவ் அரக்கர் தலைவன் நின்ற நிலையைக் கண்டருளி, "ஆரும் ஐயா, என்ன செய்வாய்; உனக்குள்ளன அனைத்தும் அழிந்ததனுல் வாடினு மிக்க வஞ்சகமுள்ள இராவண, அஞ்சாதே, இன்று உன் இருப்பிட சென்று நாளை போர்புரிய வருவாய்," என்றருளிச் செய்தனை பெருமாளே பெண்களின் கண்களை வேற்படைகளோ, கொடிய அம்புகளோ, வா

களோ, வஞ்சமான மாயங்களோ, எமனோ, நஞ்சின் வடிவமோ, தாமரை அரும்புகளோ, நீல மலர்களோ, எதிர்த்து நின்ற கெண்டை மீன்களோ, பார்த்த கண்களால் வரும் மாயங்களோ, என்று பன்முறை சொல்லியும், இசைகொண்ட மதன நூலின் முறைப்படி கொஞ்சுவது எப்படி யென்று கேட்டும், தாழ்வுற்று மதி மயங்கித் தடுமாறிக் கெட்டவனாய், வீணனாய்ச் சூடுண்டு புண்ணாகி நான் நொந்த நாள் போதும்; இனி, வாவென் றென்னை யழைத்துப் பசும் பொன்னால் இயன்ற அணிகலன்களை நிறைய வணிந்த உன் திருவடிகளை என்று அருள்வாயோ ?

தனனதான தந்த தான தத்த
தனனதான தந்த தான தத்த
தனனதான தந்த தான தத்த தனதான

234. மடுவின்மூல மென்ற மாக ரிக்கும்
இனியசூரி யன்கு மார னுக்கும்
வடிவுகாண வந்தி ராச பட்சி மிசையேறி
மறுவிலாது யர்ந்த வீட ளித்த
கருணைநீர்மை நம்பி னேனெ னக்கும்
மருவுதேவ ரிங்கு வேறொ ருத்தர் பிடியாதுன்
அடியரேமு ளிந்து வேறு கட்டி
விடுவரேனு நின்க்ரு பாதி ருட்டி
அரியதேனு நின்ற தேவ பத்தி யவர்யாரும்
அழிவுபேசி நெஞ்சு தானி னைக்க
நகுவரேனும் என்ற னேழ்பி றப்பும்
அரியிராம வென்று பாடு மிச்சை ஒழியேனே
முடுகியேயெ திர்ந்த தோர்க ளத்தில்
நிருதர்கோன்வெ றுங்கை யாயி ளைத்து
முகமெடாது சிந்தை நாண முற்று மதயானை
முனைசெய்கோட ரிந்த மார்பு கெட்டு
நெடியவீரம் வென்றி தாழ்வு பட்டு
முறைசெய்வாரு மின்றியே தனித்து வரமாக
உடையதேர் சிவன்கை வாளும் விட்டு
மலையைநேரி டந்த தோளு மட்கி
உயர்கிரீட பந்தி போய் விரித்த தலையேயாய்

உறுதிநூல்வி ளம்பு நாவு மற்று
வெருவியேயி லங்கை மாந கர்க்குள்
ஒருவனேந டந்து போக விட்ட பெருமாளே.

உரை :—போர் செய்ய விரைந்து வந்து எதிர்ந்த களத்தில், அரக்கர் தலைவனான இராவணன், தனக்குரிய எல்லாச் சிறப்புக்களையும் இழந்து வெறுங் கையுடையனாகி மனந் தளர்ந்து இளைத்து, முகத்தை நேரே எடுத்துப் பாராமல் நாணமடைந்து, திசையானைகளின் கொம்புகள் முப்பத்திரண்டும், பிடுங்கப்படாமல் அறுக்கப்பட்டிருந்த மார்பினின்றும் கழன்று முதுகின் புறமாக விழுந்ததனால் மார்பின் வலிமையற்று, மிக்க திறமையும், மூவுலகங்களையும் கைக்கொண்ட வெற்றியும் நின் முன்னே தாழ்வடைய, குடை தாமரை முதலிய விருதுகளும் முறை செய்வோரும் இன்றித் தவித்து, வரத்தாற் சிவபிரான் அளித்த வாளையும் கைவிட்டுக் கைலை மலையை இருபது கைகளாலும் வேரோடு பிடுங்கிய வலிமையும் இளைய பெருமாளை எடுக்கமாட்டாமையால் மழுங்கி, உயர்ந்த மணிமுடிகளின் வரிசை பத்தும் விழுந்ததனால் விரிந்த தலைகளாகி, உறுதியான நூற்பொருள்களைக் கூறும் நா, 'இன்று போய்ப் போர்க்கு நாளை வா' என்று சொல்லியதற்கு மறுமொழி பேசமாட்டாமையால் பயனற்று, அச்சத்தோடு இலங்கை நகருக்குள் ஒருவனாக நடந்து போகுமாறுவிட்ட பெருமாளே ; மடுவில் முதலை வாயில் அகப்பட்டு, 'ஆதிமூலமே' என்று கூப்பிட்ட பெரிய யானைக்கும், கதிரவன் மைந்தனாகிய கன்னனுக்கும், உன் வடிவைக் காட்டப் பறவையரசான கருடன் மேலேறிக் குற்றமற்ற எல்லாப் பதவிகட்கும் மேலான வீடுபேற்றை நீ யளித்த அருட் குணத்தை நான் நம்பினேன்; எனக்கு உன்னையன்றி வேறொரு தேவரை வணங்க மனம் பிடிக்காது ; நின் அடியார்கள் என்மேற் சினந்து, நான் வேறு தெய்வத்தினிடம் பக்தியுள்ளவனென்று வீணிற் கற்பனை செய்து கட்டி விடுவார்களாயினும், நின் அருட்கண் கிடைத்தல் எனக்கு அரிதாயினும், வேறு தெய்வங்களிடம் அன்பு செய்பவர்கள், உன்னால் ஒன்றும் பயனில்லை யென்று பொய்யாக அழிவு பேசி என் மனம் உருகுமாறு சிரிப்பார்களானாலும், நான் பிறக்கும் எழு வகைப் பிறப்புக்களிலும் அரி, இராமா வென்று பாடும் ஆர்வமுள்ள இயற்கைத் தன்மையை மறவாமல் நின்னைப் போற்றுவேன்.

('நின்ற தேவ பத்தியவர்' என்றது பிற தெய்வங்களை வழிபாடு செய்பவரை. நெஞ்சுதான் நினைக்க நகுவரேனும் என்றது, உன்னாற் பயனில்லை யென்று அவர்கள் கூறுவதை நான் நினைக்குமாறு திறமையுடன் சொல்லிச் சிரிப்பார்களாயினும் என்னும் பொருளது.)

தானன தான தான தந்த
தானன தான தான தந்த
தானன தான தான தந்த — தனதான

235. கானிடை நீடு காயு முண்டு
வானிடை மாரி நீரு முண்டு
காய்பசி தாக மாறு மூந்தும் — உடைவேறென்
காணிய கோவ ணாதி யுண்டு
நீள்புற வாயில் கூட முண்டு
காவலும் வீடு மேனு றங்க — அவமீதில்
ஆனதோர் போது போக வெங்கள்
வாழ்சட கோப னார்மொ ழிந்த
ஆயிர வேத மாலை யுண்டு — திசைமாறி
ஆதவ னோடி னாலென் விஞ்சு
மாமனு நீதி கோணி யொன்ற
தாகிலென் வீணர் போன்மெ லிந்து — தளரேனே
மாநிரு தேசன் ஊர்பு குந்து
தூதரை யேவி வேறி ருந்த
மாபல சேனை தாரு மென்றோர் — அணைமேவி
மாலிய வான்மு னேமொ ழிந்த
நீதிபொ ருமை லேபு முங்கி
மாதுலன் வாய்மை பேணி யெம்பி — துயில்மாறத்
தானினி வேணு நீர்கொ ணர்ந்து
வாருமெ னாமுன் வீரர் சென்று
தாடையின் மோத வேயெ ழுந்து — முதல்வாநீ
தாயைவி டாய்கெ டாம லென்று
கூறிய போது சீறல் கண்ட
சார்பிலி கால னாகி நின்ற — பெருமானே.

உரை :—வெறுங் கையுடன் நடந்து மிகப் பெருமை வாய்ந்த அரக்கர் தலைவனாகிய இராவணன் இலங்கைக்குள் புகுந்து, 'இங்கொழிய மற்றைய விடங்களிலுள்ள மிக்க ஆற்றலுடைய நம் படைகளை யெல்லாம் அழைத்து வாருங்கள்' என்று தூதர்களை அனுப்பி, ஒரு புறத்தில் மெத்தையின் மேல் படுத்திருந்து, மாலியவான் முன்னம் சீதா பிராட்டியாரை விடுக வென்று

சொல்லிய சிறந்த நீதியைக் கேட்டுப் பொருமல் நெஞ்சம் புழுங்கி, 'கும்பகருணன் இருக்கும் போது மயக்கம் என்' என்று மாமனாகிய மகோதரன் சொல்லியதை உண்மையென நினைத்து, அங்கிருந்த அரக்கரைப் பார்த்து, 'நீங்கள் என் தம்பியின் பெருந் தூக்கத்தைப் போக்க வேண்டும். பிறகு, நீங்கள் அவனை இங்கே அழைத்துவரல் வேண்டும்' என்று சொல்லும் முன், வீரர்கள் சென்று கும்பகருணனுடைய தாடையில் அடிக்க அவன் எழுந்து தமையனிடம் வந்து, "அண்ணாவே, நீ உலகத் தாயை விடு; நாமெல்லாம் கெடாமல் இருப்போம்" என்று சொன்ன போது, இராவணன் சினந்ததைப் பார்த்த சார்பில்லாத அக் கும்பகருணனுக்கு எமனாகி நின்றருளிய பெருமாளே; காட்டினிடத்துக் கொம்புகளில் பழமும், காயும், கிழங்கும், இலையும் உண்டு; முகிலினிடத்து மழையும் நீருமுண்டு; இவற்றால் காய்ந்து வறண்ட பசியும் நீர் வேட்கையும் போம்; முதன்மையாக உடுக்கப்படும் உடை வேறு என் வேண்டும்? அதற்கு அழகிய கோவணம் முதலிய கிழிந்த துணிகள் உண்டு; சுற்றிலும் காவல் செய்யும் சுவர்களையுடைய வீடு உறங்குவதற்கு எதற்காக? வீட்டின் புறத்திலுள்ள இடமும் திண்ணையும் போதும்; (கூடமாவது வீட்டின் புறத்தை யடுத்த திண்ணை) வீணிற் கழியும் பொழுதை நல் வழியிற் கழிக்க எங்கள் ஆசாரியராக வாழும் நம்மாழ்வார் திருவாக்கால் அருளிய ஆயிரம் தமிழ்ப் பாட்டுக்களால் அந்தாதியாக அமைந்த மறையாகிய மாலையுளது; இவைகள் எல்லாம் உளவாக, கதிரவன் திசை மாறித் தோன்றி மறைந்தால் என்ன? பெருமையுள்ள மநுநீதி மாறுபட்டு, அவரவர் குலாசாரங்கள் மாறினாலென்ன? இவற்றை நினைத்து மெலியும் வீணரைப்போல் மனந் தளரேன்.

(கும்பகன்னனை எழுப்பும் முறை கம்ப ராமாயணத்தில் பலவாகக் கூறப்பட்டுளது. இவர் சுருக்கமாகக் கூறியுள்ளார்.)

தானன தனன தனன தந்த
தானன தனன தனன தந்த
தானன தனன தனன தந்த தனதான

236. கூறிய புனல்க ளவைப டிந்து
பேர்புனை தரும நகைபு ரிந்து
கோதரு நிதிகள் பலவ ழங்கி இருபோதும்
கூடிய வதிதி யுடனை யின்று
வேள்வியின் வகைகள் பலமு யன்று
கோதைய ருறவு நனிது றந்து திரிவாரும்

ஏறுவ ரிழிவ ருழல்வ தன்றி
நீடிய செனன மரண தொந்த
மியாவையு மொழிய வுயர நின்ற நிலைகாணார்

ஈனம துடைய தொழிலி னின்று
நாரண பரம வரிமு குந்த
ராகவ வெனினு மவர்வை குந்தம் அடைவாரே

சீறிய தமைய னடிவ ணங்கி
ஊனொடு நறவு பலநு கர்ந்து
சீரிய வணிகள் பலவ ணிந்து ர்தமேறிச்

சேடனு நெளிய வமர ரஞ்ச
வானரர் வெருவ மதில்க டந்து
சேவக கருணன் வருதல் கண்டு மலைபோல

வீறிய வொருவன் இவனெ வன்கொல்
வீடண வுரைசெய் எனவி றைஞ்சி
மேலென தமைய னவன தம்பி உலகேழும்

மேருவு மனைய நிலைய னென்று
கூறனு மவனை யினிது கொண்டு
மீளுதி யுறவு புரிவ னென்ற பெருமாளே.

உரை :—இராவணன் கால்களில் வணங்கி, அவன் தந்த இறைச்சியை மிகவும் தின்று, கள்ளையும் நிரம்பக் குடித்து, சிறந்த அணிகளை நன்கு தரித்துத் தேரிலேறி, பாதலத்தில் உலகைச் சுமக்கும் ஆதிசேடனும் படங்கள் நெளியவும், இமையவர் அஞ்சவும், வானரர்கள் நடுங்கவும், கோட்டை மதிலைத் தாண்டி நல்ல வீரமுள்ள கும்பகருணன் வருவதைப் பார்த்து, " வீடணா, மலைபோற் பருத்துப் பெருமையோடு வரும் ஒப்பற்ற இவன் எவன்? சொல் " லென்று நீ அருளிச் செய்யக் கேட்ட விபீடணன், வணங்கி, 'எனக்கு மேலான தமையன் ; அந்த இராவணனுக்குத் தம்பி ; கும்ப கருணன் என்னும் பெயருடையவன்; ஏழுலகங்களையும், அவற்றைத் தாங்கும் மகாமேரு மலையையும் ஒன்று சேர்த்து ஒரு வடிவமாக்கினாற் போன்ற உடல் நிலையை யுடையவன்,' என்றுரைக்க, நீ, 'அவனை இங்கே விரைவாகக் கூட்டிக் கொண்டு வந்தால் அவனிடம் உறவு கொள்வே' னென்றருளின பெருமாளே; கங்கை முதலிய புண்ணிய நீருள் மூழ்கியும், புகழ்பெற்ற அறநெறியில் முகமலர்ந்தும் அகம் மகிழ்ந்தும் குறைமற்ற பொருள்களைத் தானம் செய்தும், இரவு பகல் என்னும் இரு வேளைகளிலும் கூடிய விருந்தினரோடு உண்டும், வேள்விகள் பலவற்றையும் ஊக்கத்

துடன் செய்தும் பெண்களோடு கூடும் உறவைத் துறந்தும் திரிபவர்களும் மேலுலகத்தில் ஏறுவார்கள்; புண்ணியத்தின் பயனை நுகர்ந்து கழித்த பின் உலகில் இறங்குவார்கள்; இங்கு மங்கும் திரிந்து உழல்வதல்லாமல் அவர்கள், பிறப் பிறப்பென்னும் தொடர்பை யொழித்து, எல்லாப் பதவிகட்கும் மேலான வைகுந்தத்தின் நிலையைக் காணார்கள்; இனி, இழி தொழிலிலே நிலையாக நின்றும் நாரணா, பரமா, அரி முகுந்தா, இராகவா, இராமா வென்று நினைப்பினும் அவர்கள் வைகுண்டத்தை அடைவார்கள்.

('உயர நின்ற நிலை' என்றது எல்லா உலகங்களுக்கும் மேலாகி அழியாத பரமபதத்தை.)

தானான தந்த தந்த தனதன
தானான தந்த தந்த தனதன
தானான தந்த தந்த தனதன தனதான

237. வாரூட மைந்து பைந்த ரளமணி
மேலேய ணிந்து சந்து புழுகுடன்
மாமேள மண்டி மிண்டி யனுதினம் உயர்வாக
மார்பேநெ ருங்கி யங்கு விரவிய
தோளேய ளந்து பஞ்ச சரபதி
மாலாய்வி ழுந்த ழுந்தி வடிவமும் அடைவேபோய்
ஒரூரு மின்றி யெங்கு நிலையற
வேமாறு கண்டு சண்டை யிடுமுலை
யோடேட நடந்து ரம்பை யெனவரு மடவார்தம்
ஊனூர்வ ழும்பு சந்த தமும்விடு
பாழ்வாயி லின்க ணின்ப மெனவிடு
லோகீத தொந்த மென்று தவிர்வது மொழியாயோ
போரூடு சென்று கும்ப கருணனை
மாவீட ணன்ப ணிந்து னடைவுகள்
போரேறு ணர்ந்து கொண்டு வருகென அருளானன்
போதாயி லங்கை யின்று பெறுதிசொல்
மாறுகொ ளென்று நின்ற பொழுதெதிர்
பூரேயொர் தம்பி யின்றி முதலவன் மறமீதே
நேரேது ணிந்து மங்க லழகல
நானேயெ திர்ந்து முந்த மடிகுவன்
நீபோயி ருந்து பின்பு முறைபுரி யெனவோடும்

நீர்மாரி வந்து கண்கள் சொரிதர
ஊரோதி நும்பி நண்ப னுரைசெயும்
நீள்வாய்மை கொண்டு பின்பு பொரவரு பெருமாளே.

உரை :—பெருமை மிக்க விபீடணன், நீ அனுப்பியபடி போர்க்கள மடைந்து, கும்பகருணனுக்கு வணக்கம் செய்து, 'அண்ணா, உன் நல்லி யல்புகளையெல்லாம், அரக்கராகிய யானைப் படைக்குச் சிங்கமாய இராம பிரான் அறிந்து உன்னைத் தம்பால் அழைத்து வருமாறு சொல்லி அருள் கூர்ந்தார் ; ஆதலின், என்னோடு அவர்களிடம் வருக; வந்தால் இப்போதே இலங்கைச் செல்வத்தைப் பெறுவாய் ; என் சொல்லை மறாமல் ஏற்றுக் கொள்' என்று சொல்லி நின்றபோது, கும்பகருணன், 'எனக்கு இது போதும் ; தமையன் வீரத்தோடு போர்க்களத்தில் சண்டை செய்து, தம்பியருள் ஒருவனுமில்லாமல், செவ்வையாகத் தூண்டிக்கப் பெற்று அழிதல் அழகன்று : நான் எதிர்த்துப் போர் புரிந்து முன்னே இறப்ப வன் ; நம் தமையன் எனக்குப் பின் இறப்பவன் ; பின்னர், நீ இலங்கை நகர்க்கு வந்து அரசாளும் முறையைச் செய்' என்று சொன்னவுடன், விபீடணன் கண்களின்றும் நீர் மழைபோற் சொரியப் பாசறைக்கு வந்து, நட்புடனே அழுது சொல்லிய பெருஞ் சொற்களை திருவுளங் கொண்டு, பின், போர்க்கு வந்தருளினை பெருமாளே ; கச்சினுள் விருந்தும், பசிய முத்து மாலையை மேலே யணிந்தும், சந்தனம் முதலிய கலவைகளை யணிந் தும், பெரிய கலவியின் அழகு விஞ்சியும், விம்மி யெழுந்து நாளுக்கு நாள் உயர்ந்து மார்பிடம் முழுதையும் கவர்ந்து நெருங்கியும், தன்னிடம் வருந் தோள்களை அளப்பதுபோற் பரந்தும், ஐவகை மலர்களை அம்பாகவுடைய மன்மதனும் காமவேட்கையால் அழுந்தி வெந்து, தங்கியிருக்க ஓருரும் இன்றி எங்கும் நிலையின்றி எரிந்து உருவழிந்து போருமாறு போர் புரிந் தும் அமர்ந்துள்ள கொங்கைகளோடு நடந்து, தெய்வ மகளான அரம்பை யைப் போல் வரும் பெண்களின் ஊனின் நாற்றமுண்டாகிய பாழ்வாயி வில் இன்பம் உள்ளதென்று மூழ்க விடும் உடலால் வரும் இன்பத் தொடர்பு என்னைவிட்டு என்று போகுமோ சொல்வாயாக.

தனன தத்த தந்த
தனன தத்த தந்த
தனன தத்த தந்த தனதான

238. அறுகெ ருக்க ணிந்த
சிவனு மற்றை யுந்தி
அயனு மட்ட ளந்த வரம்யாவும்

அசுரர் பெற்று வந்து
செலவி டப்ப ரந்த
அருள்வ ரத்தை யெந்த வகையாலு

குறைப டக்க ரந்து
புலவ ரைப்பு ரந்து
குலவி நிற்பை யுன்றன் அருளாலே

குளிர்சி றப்ப மைந்த
இவரை யப்ர சண்டர்
கொலைசெ யத்தொ டங்கின் முடியாதே

தெறுக ளத்தில் வந்து
கவிக ளைப்பி சைந்து
திலத மிட்டு நின்று பொருதாலு

தினவு கெட்ட தன்று
படைமி தித்த றைந்து
செறித டக்கை கொண்டு மிகவா

முறைவி டுத்து ரந்து
விழவு தைத்து நுங்கி
முடுகி யிட்ட கும்ப கனனோடே

முதலெ திர்த்த டர்ந்த
அனுமன் வெற்றி கண்டு
முடிது ளக்கி நின்ற பெருமாளே

உரை :—விபீடணனை அனுப்பிவிட்ட பின், கும்பகருணன் கொடிய போர்க்களத்தில் வந்து, குரங்குகளைக் கையாற் பிசைந்து அவர்கள் குருதியால் நெற்றியில் திலக மணிந்து நின்று சண்டை செய்தும், அவன் கைகளின் தினவு தீர்ந்ததில்லை ; அதனால் பின்னையும் அக் குரங்குப் படைகளைக் காலால் மிதித்தும் கையால் அறைந்தும், கடகமும் தோள்வளையும் செறிந்த கைகளைக் கொண்டு மிகவும் வாரியெடுத்து விழுங்கி மற்றையவர்களை முறையாகத் துரத்தியும், கீழே விழ உதைத்தும், மிக விரைவாகக் கொல்லும் பொழுது, அவனை யெதிர்த்து நின்ற அனுமானுடைய வீரத்தைக் கண்டு வியந்து முடியசைத்து நின்ற பெருமாளே ; அறுகும் வெள்ளெருக்க மலரும் சூடிய சிவபெருமானும் நின் உந்தித் தாமரையிற் பிறந்த நான்முகனும் அருளிய அளவற்ற வரங்களை அசுரர்கள் பெற்று வந்து செலுத்தப்படும் பரந்த அவ்வருள் வரங்களை, எவ்விதத்திலும் குறைத்து

அசுரரை வேரறச் செய்து, விண்ணவரைக் காத்து அவர்களுடன் குலவி நிற்பாய்; உன்னருளால் குளிர்ந்த சிறப்புப் பெற்றுள்ள இவ் விமையவர்களைப் பெருமையுள்ள சிவபெருமானும் பிரமனும் கொல்லத் தொடங்கி எந்த வகை செய்யினும் அஃது அவர்களால் முடியாது; ஆதலின் அவ் விரு தெய்வங்கட்கும் நீயே பெருந் தெய்வம் என்பது வெளிப்படையாகையால் நீயே என்னைக் காக்க வேண்டும்.

(புலவர்—தேவர்.)

தந்த தனதன தானன
தந்த தனதன தானன
தந்த தனதன தானன தனதான

239. வம்ப னிரணிய னுலொரு
சிங்க வுருவொடு மேவினை
வந்து குறளுரு வாயினை ஒருசேனும்

மண்டு கமடமு மாயினை
பன்றி யெனவினை யாடினை
மங்கை வடிவிலு லாவினை கழுமீதோர்

தும்பி யெனவெழில் வீறினை
அந்த மறையவ னுயினை
துன்று குழவியொ டோதிம வடிவானுய்

துங்க மிகுபரி யாகுவை
எந்த வடிவுகொ ளாயுன்றன்
தொந்த வடிவைய லால்வடி வுளதாமோ

கும்ப கர்ணனொடு மாருதி
மண்டு மமரிடை யேசிலை
கொண்டு தனியிள வீரனும் நிரைவாளி

கொண்ட லெனவிட வேயது
கண்டு விலகிமு னேவரு
குன்ற நிகர்கவி ராசனை துயிர்நாடி

வெம்பி விடுமொரு சூலம
தங்கை கொடுநெடு மாருதி
கிண்டு துளிபட மோதலும் அரிசேயை

வென்று சிறையிட வேகொடு
சென்ற பொழுதுசெ லாவகை
வெங்க ணையில்வழி மாறிய பெருமாளே.

உரை :—கும்பகருணனுடன் அனுமான் விரைந்து செய்த போரின் நடுவில், ஒப்பற்ற வீரனாகிய இளைய பெருமாள் வில்லைக் கையில் பிடித்துக் கொண்டு வரிசை வரிசையாகக் கார்முகில் மழை பொழிவது போல் அம்புகளைக் கும்பகருணன் மேல்விட, அவன் விலகி வந்து தன் முன்னே வரும் மலை போன்ற குரக்கரசாகிய சுக்கிரீவன் உயிரை வாங்க நினைத்து நெருப்புப்போற் கொதித்து விட்ட ஒப்பற்ற சூலத்தை நீண்ட அனுமான் தன் கைகளாற் பற்றி அது உடைந்து துண்டாகுமாறு அடிக்க, அப்போது கும்பகருணன் கிரணங்களையுடைய கதிரோன் மைந்தனாகிய சுக்கிரீவனை வென்று கையிற் பிடித்துச் சிறையிடச் சென்ற பொழுது, அவனைப் போக வொட்டாமல் கொடிய அம்புகளால் வழியை மறித்தருளிய பெருமாளே ; நீ கொடுமை மிக்க இரணியன் பொருட்டு நரசிங்க வடிவோடு அச்சபையில் வந்தாய் ; அதிதி வயிற்றில் வாமன வடிவாய்ப் பிறந்தாய் ; ஒரு மீன் ஆனாய்; மிக்க விரைவுடைய ஆமையானாய்; பன்றியின் வடிவெடுத்துத் திருவிளையாடல் புரிந்தாய் ; பெண் வடிவெடுத்து அமுதத்தைப் பங்கிடத் திரிந்தாய்; வீமனைக் கொல்லக் கருதி நீருக்குள் துரியோதனன் நிறுத்தி வைத்த கழுவின் நுனியில், வீமனைக் காக்க வண்டின் வடிவோடு அழகு மிக இருந்தாய் ; வேதாந்தங்களைக் கற்பிக்கக் கபிலனென்னும் அந்தணனானாய் ; நின் உந்தியிற் பிறந்தபோது ஒன்று மறியாதிருந்த பிரமனாகிய குழந்தைக்கு வேதங்களைக் கற்பிக்க அன்னத்தின் வடிவமானாய் ; இனிக் கலியூழியின் இறுதியில் உயர்ந்த குதிரை வடிவமாவாய் ; நீ எவ் வடிவந்தான் கொள்ளமாட்டாய் ; உன்னால் எடுத்தற்கரிய பெரு வடிவும் உண்டோ ? இல்லை ; 'எல்லாம் நீயே' 'சர்வம் விஷ்ணு மயம்' 'நின் வடிவமே யன்றிப் பிறிதொரு வடிவம் இல்லை' என்பது எனக்கு விளங்கிற்று.

தந்தன தந்தன தந்தன தந்தன
தந்தன தந்தன தந்தன தந்தன
தந்தன தந்தன தந்தன தந்தன தனதான

240. நின்றபெ ருப்புகழ் கொண்டிடு மின்பமும்
மைந்தர்செ றிந்திட வந்திடு கின்றது
நெஞ்சல லங்கள்க ளைந்திடு புந்தியும் நெடுவாழ்வும்

நிந்தையில் சுந்தர மும்பிரப லங்களும்
வண்டமிழ் கொண்டப யன்தெரி பண்பதும்
நின்சர ணென்றுல கஞ்சொல விஞ்சிய நிலைதானும்

இன்றிர தங்களி னின்புறு நெஞ்சமும்
அப்புவி மங்கைவி ரும்புறு துங்கமும்
இப்பரி விங்குள ருஞ்சர ணந்தொழு மவர்தாமே

என்றுதெ ளிந்துவ ணங்குத லின்றிய
கண்டகர் மிண்டக ருப்புற வஞ்சகர்
இங்கிவர் தங்களை நண்புபு ரிந்திடல் ஒழியாதோ

வென்றிகொள் செங்கதிர் மைந்தனை நெஞ்சிடை
கன்றவ மைறந்துக டுஞ்சிறை யின்புடை
வெம்பவி டும்படி சிந்தனை கொண்டிரு கையினூடே

வெங்கணி ரண்டுபி துங்கவு டன்கொடு
சென்றிடல் கண்டுதெ ளிந்தொரு துண்டமும் [வேருய்க்
வெம்பலு டன்கொடெ ழுந்தன னெந்தனன் முகம்

குன்றந டந்தென வந்துபு குந்தெதிர்
நின்றபெ ருங்கவி யின்கிளை கண்டுயிர்
குன்றிவி ழும்படி துன்றிய லைந்திடும் அமரூடே

கொண்டபெ ருந்தலை தெண்டிரை யின்புனல்
மண்டிய ழுந்தவ ரம்பெறு மன்பொடு
கும்பகர் ணன்பட வம்புது ரந்தருள் பெருமாளே.

உரை :—வெற்றி கொண்ட பகலவன் மகனாகிய சுக்கிரீவன் மார்பிலுள்ள எலும்பு நொறுங்க அறைந்து கடுஞ் சிறையில் அவன் வருந்துமாறு வைக்க நினைத்து, இரண்டு கைகளுக்குள் இறுக்கிக் கொடிய இரு கண்களும் பிதுங்கத் தன் உடலிற் சேர்த்துக் கொண்டு கும்பகருணன் போவதைச் சுக்கிரீவன் அறிந்து மனந் தெளிந்து அவன் மூக்கையும் ஒரு காதையும் தன் பொல்லாத பற்களாற் கடித்து அவன் கைகளினின்றும் விடுபட்டு நின்னிடம் வந்துவிட, கும்பகருணன் மூக்கும் காதும் போனமையால் மனம் நொந்து, மனம் வேறுபட்டு, மலை நடந்தாற்போல் திரும்பி வந்து போர்க்களத்திற் புகுந்து, முன்னே நின்ற வானரக் கூட்டங்களைக் கண்டு, அவர்கள் உயிர் குறைய நெருங்கிச் செய்யும் போரின் நடுவில், அவனுடலுக்கு மேலாகக் கொண்ட பெருந்தலை, தெளிந்த அலைகளையுடைய கடல் நீருள் அழுந்துமாறு பெற்ற வரத்திற் கேற்ப, அவன் தலை அறுபட்டுக் கடலில்

விழவும், நின் மேல் வைத்த அன்புடன் கும்பகருணன் இறக்கவும் அம் விட்டருளினை பெருமானே ; அழியாமல் நின்ற பெரும் புகழை உண்ட கிக் கொள்ளும் இன்பமும், மக்கள் நெருங்கி யிருக்க வாழ்ந்திருப்பது அவலங்களை வேரறுக்கும் நல்லறிவும், பெருஞ் செல்வமும், பழிக் படாத அழகும், பெருஞ் சிறப்புக்களும், வளமிக்க தமிழ்ப் பாடல்களி பொருளைத் தெரிந்து கொள்ளுதற்குரிய இலக்கணத் தெளிவும், உ தடைக்கலமென்று உலகத்துள்ள உயிர்கள் சொல்ல அவர்கள் அச் தைத் தீர்த்துக் காக்கும் மேலான நிலைமையான திறமையும், இன்சுவ களில் இன்பந் திளைக்கும் மனமும், அழகிய உலகிலுள்ள பெண்க விரும்புதற்குரிய மேன்மையும் இவ்வுலகில் பெற்றவர் யார்? என்னி நின் திருவடிகளை வணங்குகின்றவர்களே என்று நான் உறுதியாக தெளிந்து, நின் திருவடிகளை வணங்குத லில்லாதோரும், கொலை செ வோரும், தீயோரும், உள்ளும் புறமும் வஞ்சனையுடையோரும் ஆகியே ரிடம் நட்புக் கொள்ளுதலைத் தவிரோனோ ?

தானன தனத்த தானன தனத்த
தானன தனத்த தானன தனத்த
தானன தனத்த தானன தனத்த தனதா

241. காவிரி யொருத்தி மாமுடி விளக்கி
மாலையி டுகிற்பள் வானதி யொருத்தி
காலது துளக்கி மேன்மைபெறு கிற்பள் பிரியாதே
காசினி யொருத்தி தாளது பிடிப்பள்
பூமக ளொருத்தி மார்பினி லிருப்பள்
காவல னளித்த மாமயி லொருத்தி கலியாண
பாவையெ னநிற்பள் நீள்புது வையுற்ற
காரிகை யொருத்தி சூடியு மளிப்பள்
பாடியு நயப்பள் நாரியர் நலத்தை அகலாய்
தைய ரிடத்தில்
மன்ம தியற்ற
ணா கிலிட்டு விடலாமோ
நட்ட
ற துகட்டி
ார்களை நிறுத்தி அயர்போதில்

*ராசனை யெழுப்ப நாசிசெவிபற்றி*
*மீளவிடு வித்து மேலமர் விளைத்து*
*யானைமு தலுற்ற சேனையை யுழக்கி அவன்மீளத்*

*தாவிமு னெடுத்த வாளினை யறுத்து*
*நீள்புய மறுத்து வேகமொ டுழற்று*
*தாள்களை யறுத்து நீள்வலி தொலைந்து விளையாடித்*

*தாழ்வுறு மரக்கன் ஞானம துபெற்று*
*வீறுடு துதிக்க வாளிகொ டறுத்த*
*தாரணி சிரத்தை வேலையி னிலிட்ட பெருமாளே.*

உரை:—இராவணனுக்கு அடுத்த தம்பியான தீங்குள்ள கும்பகருணன், சுக்கிரீவனைப் பிடித்துக் கொண்டு ஓடும்போது, அம்புகளாற் கூடம் அமைத்துக் கும்பகருணன் நெற்றியின்மேல் தைக்குமாறு ஓரம்பினை நீ செலுத்தியதால் அவன் மயங்கிய போது, சுக்கிரீவனுக்கு எழும்படியான தன்மை உண்டானதால் அவன் கைகளின் பிடி தளர்ந்தமை கண்டு, அக் கும்பகருணன் மூக்கையும் ஒரு காதையும் கடித்துப் பற்களிற் பிடித்துக் கொண்டு திரும்பி வரச் செய்து, அதன் பின் இராவணன் அனுப்பிய சேனைகளோடு போர் புரிந்து, யானை முதலிய நாற்படைகளையும் சிதறும்படி கொல்ல, அக் கும்பகருணன் திரும்பத் தாவிச் சென்று முன் எடுத்த வாளைத் துண்டித்தும், நீண்ட தோள்களை அறுத்தும் குரங்குப்படைகளை யுழலச் செய்த கால்களை யறுத்தும், அவன் ஆற்றலைக் கெடச் செய்து விளையாடித் திரிந்த நீ, இழிந்த தொழில்களையுடைய கும்பகருணனாகிய அரக்கன் ஞானம் பெற்று உன்னைப் புகழ ஓரம்பைக் கொண்டு தும்பைமாலையைத் தரித்த அவன் தலையை அறுத்துக் கடலில் விழச் செய்தருளின பெருமாளே; திருக் காவிரியாறாகிய வொருத்தி நின் திருமுடியை விளக்கி மாலை புனைவாள்; வானாறாகிய கங்கை யென்பாள் நின் திருவடிகளைக் கழுவி மேன்மை பெறுவாள்; என்றும் பிரியாத நிலமகள் திருவடிகளைப் பிடிப்பாள்; பூமகளாகிய பெரிய பிராட்டி நின் திருமார்பில் இருப்பாள்; சனகன் மகளாகிய மயில்போலும் சாயலையுடைய சீதா பிராட்டி, மணமகளென வந்து நிற்பாள்; சிறந்த வில்லிபுத்தூரில் மலரில் தோன்றிய சூடிக் கொடுத்த சுடர்க்கொடியாகிய ஆண்டாள், பெரியாழ்வார் நினக்குக் கட்டி வைத்த மாலையைத் தான் சூடிக் கொடுப்பாள்; திருப்பாவை முதலியவற்றைப் பாடியும் மகிழ்வாள்; இவ்வாறு நீ பெண்களின் இன்பத்தினின்றும் பிரியாமலிருப்பாய். இத்தகைய நீ உலகத்திலுள்ள பெண்கள்பால் மயங்கும் என்னை வியந்து பாராட்டாமல், அறிவற்ற பாவியென்று பேரிட்டு, நீண்ட நரகத்தில் அழுத்தி விடுவது தகுமா? சொல்லுக.

தந்தன தத்தன தானு தானந்
தந்தன தத்தன தானு தானந்
தந்தன தத்தன தானு தானந் தனதான

242. சந்தன பொற்கிரி தானோ வீறும்
துங்கம ணிக்குட மேயோ வீசுந்
தந்திநெ ருக்கிய கோடோ யாதுன் தனபாரம்
சந்தய மற்றிட வோதாய் மாரன்
சிங்கிப டைத்திடு பாவாய் நானுன்
தஞ்சமெ னச்சொலி வீணே மாமங் கையர்மேலே
சிந்தையை வைத்துவி டாதே மால்கொண்
டங்கவ ரெச்சில ருநீர் வாயின்
சிந்துது ளிக்கில்வி டாயே போமென் றயராதே
சிந்தனை விட்டுல கீரே ழாளும்
தொண்டர டிப்பொடி யாயே யானுன்
செங்கண ருட்கட லூடோர் காலம் படிவேனோ
துந்துமி மத்தளம் வீறே யாயும்
சங்கமு டுக்கையி னூடே டுடுண்
டுண்டுடு டுட்டுடு டுடு டுடென் றதிர்போதில்
துண்டமு மற்றுவ்ரு தாவா நீடும்
கும்பக னப்பெயர் மாறு வீரன்
தொந்தம றத்தெளி வாயே பாதந் தொழுவேகண்
டந்தவ ரக்கர்கள் காணு தேவந்
தும்பர்ந கைத்துரை யாடா தேயென்
றம்பொன்மு டித்தலை பாரா வாரம் தனில்வீழ
அஞ்சன வெற்பது போலே வீரன்
துன்றுக ளத்திடை வீழா தேகின்
றம்புமு டுக்கிய சீரா மாநம் பெருமாளே.

உரை:—வானவர் துந்துமியும் அரக்கருடைய மத்தளமும் ஒன்றை யொன்று விஞ்சி யொலிக்கவும், வலம்புரிச் சங்குகளும், நடுச் சுருங்கி இரு புறமும் பருத்து அகலமான உடுக்கையாகிய சிறு பறைகளின் ஓசையி னூடே டுடுண்டுண்டு டுடுடென்று முழங்கவும் நின்ற போதில் மூக்குங் காதும் அறுபட்டு வீணாய் நீண்ட உடலுடைய கும்பகருண னென்னும்

பெயர் நீங்காத வீரன், பழைமையாகத் தொடர்ந்து வந்துள்ள பாவங்கள் அற, ஞானம் பெற்றுத் தெளிவடைந்து, நின் திருவடிகளை வணங்கி, 'மூக்கில்லா முகமென்று எவரும் நகையாதிருக்க என் தலையைக் கடலில் அழுத்த வேண்டு'மென்று வேண்டிக் கொண்டதை நீ கண்டருளி, அவ் வரக்கர் கண்ணுக்குத் தெரியாமலும், அருகே தேவர்கள் வந்து பார்த்து எள்ளி நகைத்துத் தருக்கி, 'நம்மை வருத்திய வீரன் முகத்தின் அழகைக் காண்மின்' என்று பேச வொட்டாமலும், நீலமலை போன்ற நிறமுடைய அவ் வீரனது பொன்முடி தரித்த தலை பிளந்து நெருங்கிய போர்க்களத்தில் விழாமல் கடலில் விழுந்து முழுகுமாறும் அம்பை விரைந்து செலுத்திய இராமா, திருவரங்கா; பெண்களிடம் சென்று, "உங்கள் கொங்கைகள், சந்தனம் பூசிய பொன் மலைகளோ? மிக வுயர்ந்த முத்து வடந்தரித்த பொற்குடமோ? எதிர்த்து வீசும் நெருங்கிய யானைக் கொம்போ? இவைகளில் எதுவோ? என்று கருதும் ஐயத்தைப் போக்குவீர்; மன்மதனது கலவிக் கூத்தைப் பெற்ற பொற்பாவையரே, நான் உம் அடைக்கலம்; மன்மதனுக்கு நான் எளியவன்;" என்று சொல்லிச் சிறந்த பெண்கள் மேல் வீணில் உள்ளத்தைச் செலுத்தி விடாமல், அன்பு கொண்டு அப் பெண்களின் வாயில் ஒழுகும் உமிழ் நீரில் ஒரு துளி எனக்குத் துளித்தால் என் விடாய் போகுமென்று மயங்கி விழாமல், அந் நினைவை விட்டுப் பதினான்கு உலகங்களையும் ஆளும் நின்னடியார் திருவடித் தூளாகி, நின் சிவந்த கண்ணினின்றும் பெருகும் அருளாகிய கடலின் நடுவில் ஒரு காலத்திலேனும் மூழ்குவேனோ?

தானன தத்த தானன
தானன தத்த தானன
தானன தத்த தானன தனதான

243. பூனையு மாக்கி னார்கிழு
காகமு மாக்கி னார்முது
பூசுர ராக்கி னாருயிர் அதுமாளப்
பூசலு மாக்கி னாரொரு
நான்முக மாக்கி னார்கலை
போன்முக மாக்கி னார்கடை யுறுமாறு
மேனிபு னைக்கி னாருடல்
பாதிய தாக்கி னார்மா
வேடமு மாக்கி னார்முதல் இமையோரை

வீறுள வாட்க ளூரிடு
மோகன வாழ்க்கை யானது
மேதினி யோர்க்கெ லாம்விட வசமாமோ

சானகி பார்க்க வேயொரு
பாவியை யேற்க வேயவள்
தாதையி னுக்கி மோதரன் விரகாலே

தானெதிர் காட்டி மாமயில்
சோர்வுற வீழ்த்தி வேதனை
சார்வுள வார்த்தை யேகொள உயிர்வாடி

மானினி நோக்கி யேயழு
நோவொடு மூர்ச்சை போயிட
மாயவி ராக்க தேசுரன் இளையோன்முன்

வானுறல் கேட்டு வாய்விட
மேலவர் போற்றி யேதொழ
வானரர் பார்க்க வேமகிழ் பெருமாளே.

உரை :—போர்க்களத்தில் போர் நிகழ்ந்து கொண்டிருக்க, (இலங்கையில் பிராட்டியார் பார்க்குமாறு) அரக்கர்களுள் ஒரு பாவியை மாயையால், சானகியின் தந்தை போலாக்கி மகோதரன், தன் மாயையின் சூழ்ச்சியால் சீதா பிராட்டியின் எதிரில் காட்டி, மயில் போலும் சாயலையுடைய அவள் சோர்ந்து விழவும், அவள் காதுகளில் விழுமாறு துன்பச் சார்பான சொற்களை அம்மாயா சனகனைச் சொல்விக்கவும், பிராட்டியார் அவனைக் கண்டு அழுது மயங்கி விழத் திரிசடை தெளிவித்துத் தேற்றி யிருக்கவும் ஆகிய இச் செயல்கள் அசோகவனத்தில் நிகழ்ந்தன ; அப்போது இராவணன் முன், தூதுவர் வந்து கும்பகருணனாகிய தம்பி யிறந்து விண்ணுலகடைந்த செய்தியைச் சொல்ல, அவன் வாய்விட்டலறவும், மேலான விண்ணிலுள்ளோர் கும்பகர்ணனை வணங்கிப் புகழவும், குரங்குகள் மகிழ்ச்சியோடு பார்க்கவும் திருவுள்ளம் மகிழ்ந்தருளிய பெருமாளே : (பெண்ணால் தேவர்கள் பட்டபாடு கூறுகின்றது) அகலிகை இந்திரனைப் பூனை உருக்கொண்டோடச் செய்தாள் ; கௌதமனை நீராட அனுப்புவதற்காகக் காகமாய்க் கூவவும் செய்தாள்; வள்ளி முருகனைக் கிழவனாக்கினாள்; தேவ குருவின் மனைவியாகிய தாரை சந்திரனோடு கலந்து இமையவரை இரு கூறாக்கிப் போர் புரிந்து மடியச் செய்தாள் ; ஐந்து முகங்களோடிருந்த பிரமனைப் பார்வதி நான்கு முகனாக்கினாள் ; உரோகிணி, மற்றைய பெண்களோடு சந்திரனைக் கூடியிருக்க வொட்டாமற் செய்து

அவனுக்குக் கலை மான் முகம் உண்டாகச் செய்தாள்; இழிந்தவர்களினும் இழிவாகி இந்திரன் தன் உடல் ஆயிரம் பெண் குறிகளைக் கொள்ளுமாறு செய்வித்தனள் அகலிகை ; உமாதேவி, சிவபெருமான் உடலைப் பாதியாக்கினுள் ; வள்ளி, முருகனை வேங்கை மரமாக்கினுள் ; எல்லா உயிர்கட்கும் முதன்மையுள்ள தேவர்களையே பெண்கள் பங்கமடையச் செய்தனர் என்றால், பெருமையுள்ள வாள் போலுங் கண்களையுடைய பெண்களால் உண்டாக்கப்படும் மயக்கமுள்ள வாழ்க்கையை உலகிலுள்ள உயிர்களுக் கெல்லாம் விட முடியுமோ ?

தந்தன தந்த தானன
தந்தன தந்த தானன
தந்தன தந்த தானன தனதான

244. அம்பில ணந்தல் கூர்வைவை
குந்தமி ருந்து வாழுவை
அண்டரி லிந்திர னுகிவின் முழுதாள்வை
அம்புலி யின்கண் மேதகு
தொண்டரி றைஞ்ச வாழிய
ரங்கபு யங்க மேவுவை உலகேழும்
பம்புநெ டுஞ்ச ராசரம்
எங்கும்நி றைந்து லாவுவை
பஞ்சவி தங்கொள் பேதமை வடிவாகிப்
பண்பொடு நின்றி லாயெனில்
எண்படு கின்ற நீளுயிர்
பண்புதொ டங்கி நீதியின் நடவாதே
தம்பியி ழந்த ராவணன்
வெம்புதல் கண்டு வீறொடு
தன்சிறு மைந்த னுகிய அதிகாயன்
தந்தரு ளெந்தை போரெனு
அன்றுபொ ருந்த வாயிர
சங்கது ரங்க மாரத மிசையேறி
வெம்புநி கும்ப னேடும
கம்பன்ம ருங்கு சூழ்வர
வெங்களம் வந்து சேருமுன் அவனுண்மை

வெந்திற லெந்தை கூறலின்
இன்றுயி லின்றி வாழ்பவன்
வென்றியை நின்று கூறிய பெருமாளே.

உரை:—தம்பியை யிழந்த விராவணன் நின்று மனம் வருந்திச் சினந்தபோது, அவனுடைய இளைய மைந்தனாகிய வலிமை படைத்த அதிகாயன், 'ஐயா, போர்புரிய எனக்கு விடை தருக,' வென்று கேட்க, இராவணன் உடன்பட்டதனால், கூட்டமாக ஆயிரங் குதிரைகள் பூட்டிய தேரின் மேல் அதிகாயன் ஏறி, கொதிக்கும் மனமுடைய நிகும்பனோடு அகம்பனும் இருபுறங்களிலும் சுற்றி வரக் கொடிய போர்க்களத்தில் வந்து சேரும் முன், அவனுடைய ஆண்மையைக் கொடிய வலிமையுள்ள எங்கள் தலைவனான விபீடணன் சொல்ல, இன்பமான தூக்கத்தை யொழித்து வாழும் இளைய பெருமாளின் வெற்றியை விபீடணனுக்கு வாயினால் அருளிச் செய்த பெருமாளே; நீ திருவம்பில் என்னும் திருப்பதியில் திருவனந்தல் செய்தருள்வாய்; திரு வைகுந்தத்திலிருந்து வாழ்வாய்; விண்ணவருள் இந்திரனாகி விண்முழுதும் ஆளுவாய்; உலகில், திருவுள்ளம் பொருந்தத் தக்கதும், நின் அடியார்கள் வணங்கி வாழ்த்தத் தக்கதுமாகிய திருவரங்கத்தில் அரவணையிற் பள்ளிகொண்டருள்வாய்; ஏழுலகங்களிலும் உள்ள இயங்கு திணை, நிலைத்திணை ஆகிய உயிர்களிலெல்லாம் நிறைந்து உலாவுவாய்; பரம், விபவம், வியூகம், அந்தர்யாமித்துவம், அர்ச்சை யென்னும் ஐவகை வடிவுகளில் அவ்வவ் வியற்கையோடு நீ நின்றிலையாயின், பலவாறு எண்ணப்படுகின்ற நீண்ட உயிர்கள் அனைத்தும், நற்பண்புகளோடு நீதியாகிய வழியில் நடக்கமாட்டா; பாவஞ் செய்து கெட்டு நரகில் வீழும் என்க.

('பஞ்ச விதங்கள் பேதமை' எனவும் பாடம்.)

தனதான தான தந்த
தனதான தான தந்த
தனதான தான தந்த தனதான

245. நிதிதேடி னானு யர்ந்த
மனைகோலி னானி ருந்து
நிலைகூடி னான்ம யங்கி மடவார்மேல்

நினைவாகி னான்ம ணந்து
பரிவார மாகு தந்தி
நிரைசூழ மேவி யிந்த உலகாளும்

பதியாகி னானு வந்து
முடிசூடி னான்முன் வந்த
படியேயெ லாமி றங்கி அவமானன்
படுபாடு பாரு மென்று
கதையாகி யேகு கின்ற
படிமீதில் வாழ்வை நம்பி அழிவேனோ

அதுசாப மேரு விஞ்சும்
அதுவாளி வேத மந்த்ரம்
அதுநீதி யோக முந்தில் எழுபாரும்
அடியோடு சாயு மந்த
முறைபேணி வீரி யங்கொ
டதிகாய னாவி கொண்டு வருவாயிங்

கிதுகால மாகு மென்று
மதிகூறி வாலி மைந்தன்
இருதோளின் மீது செம்பொன் மலைபோலே
இகல்வீட ணாதி விஞ்சு
கவிராசர் சூழ வென்றி
இளையோனை மேவி நின்ற பெருமாளே.

உரை :—நீ இளைய பெருமாளின் திறமையை விபீடணனுக்குச் சொல்லி, இளையவன் திருக் கைகளில் வில்லையும், அம்பறாத் தூணியையும் கொடுத்து, அவற்றைச் சுட்டி, 'அது வில்லின் வடிவத்தில் வந்த மகா மேரு ; மேம்பட்ட அம்பின் வடிவத்தில் வந்த அது வேத மந்திரம் ; அவ் வில் நீதி போல்வது; அவ் வம்பு நீதியில் வளர்ந்த யோகம் போல்வது; அளவற்றுப் பரப்புக் காண அரியனவாக அவை இருக்கும் ; ஆதலின், இவ் வில்லில் இவ் வம்புகளைப் பூட்டி யெய்தால் எழுலகும் சாய்ந்து அழியும் ; (எழுலக மென்றது எழு தீவுகளை ; 'எழு பெருந் தீவும் எழுல கெனப் படும்' திவா. 12 ந் தொகுதி). இவ் வரிசையை நினைத்து ஆண்மையோடு போர்புரிந்து அதிகாயன் உயிரைக் கவர்ந்து வருவாய் ; அவனைக் கொல்ல இதுவே தக்க காலம் ;' என்று அறிவுரை கூறி, வாலியின் மைந்தனாகிய அங்கதனுடைய இரு தோளின் மேலும் சிவந்த பொன் மலையாகிய மகா மேரு அமர்ந்துள்ளது போல் ஏற்றி, போரில் வல்ல விபீடணனும் சிறந்த குரங்குப் படைத் தலைவரும் சூழ, வெற்றி பொருந்திய இளைய பெருமாளை அனுப்பிய பெருமாளே; 'மனிதன் பொருள் தேடினான் ; உயர்ந்த வீட்டை வளைத்துக் கட்டினான் ; இருந்து நிலையான பேறுகளையுடைய இடத்திற்

சேர்ந்தான் ; காமத்தால் மயங்கிப் பெண்கள் மேல் நினைவு கொண்டான் ; அவர்களை மணந்து கூடி, யானை, குதிரை, முதலிய பரிவாரங்கள் வரிசையாகச் சுற்ற இவ் வுலகையாளும் அரசானான் ; மகிழ்ந்து முடியைத் தலையிற் சூடினான் ; பின்னர், முன் ஏறிவந்தபடியே கீழிறங்கி ஒன்றுமில்லாமல் வீணன் ஆனான் ; இப்போது அவன் படும் பாட்டைக் காண்மின்' என்று எவருங் கூறுங் கதையை யுடையதாகி, நிலையின்றிக் கெடும் இவ் வுலக வாழ்வு அழியாதென்று நம்பி, நின்னை நினையாது ஒழிவேனோ ? சொல்லுக.

தான தந்தன தத்தன தானன
தான தந்தன தத்தன தானன
தான தந்தன தத்தன தானன தனதான

246. பாலி ருந்துகு டிக்கையி லேயொரு
மாது கண்டுபி டித்துர லோடிரு
பாணி கொண்டுபி ணித்துவை யாவதுன் ஒருதாய்முன்
பால னெங்கள்ம னைக்குளு ளானினி
நீவி ளங்கென வக்கண மேயிவள்
பார கொங்கையு மொக்கலை யானதும் அகலாதே

நீல மஞ்சுபு றப்படு மாறென
ஆய்ம டந்தைமுன் மெத்தென வேவரு
நீர்மை கண்டவள் வெட்கிய சோதைமுன் நகுமாறு
நீடு வஞ்சவு ருக்கொளு வாயுனை
யாவர் கண்டுபி டிக்கவ லார்மன
நேச ரன்புபி டிப்பத லாதுபின் வசமாமோ

கால சங்கன்ம ருத்துவன் மாலியன்
காலன் வெங்குலி சப்பெய ரோனதி
காயன் முன்புச மர்க்குமு னேவரும் அவர்மாயக்
காய்ச ரங்கள்வி லக்கிய டாவரு
தாரு கன்றலை யைக்கொடு மோகர
கான தந்தியொ ரெட்டினெண் ணுயிர நொடிமீதில்

வாலி ழுந்துபு ழக்கைய ருமுது
கால ழிந்துவெ ளுத்திடு கோடுகள்
மாறி ழுந்துவி ழப்பொரு தேயடர் களமீதே

மாரு தந்தரு வித்தக ஞரிடை
யேபு குந்துக ரித்திரள் மேல்விழ
வாகை கொண்டவி லக்குவ ஞர்தொழு பெருமாளே.

உரை :—இளைய பெருமாள் போர்க்களத்துக்கு வந்தவுடன் அவர் அம்புகளால் காலசங்கன், மருத்தன், திண்மையுள்ள மாலி, காலன், சுடும் வெம்மையை யுடைய வச்சிர குலிசன்; ஆகிய ஐவரும் அதிகாயன் வரும் முன் எதிர்த்து இறக்க, அரக்கர்களைக் கொல்லுகின்ற அம்புகளை விலக்கி யடுத்துப் போர் செய்து வரும் தாருகனுடைய தலையை வெட்டி வாங்கிக் கொண்டு காட்டில் திரியும்—பேரொலி செய்யும் அறுபத்து நாலாயிரம் யானைகள் ஒரு நொடிக்குள் வால்கள் போய்த் தொளையை யுடைய கைகள் அறுந்து, முதிர்ந்த கால்கள் அழிந்து வெண்ணிற முடைய கொம்புள் மாறுபட இழந்து இறந்து விழப் பொருது நிற்கையில் பிணம் நெருங்கிய போர்க்களத்தில் வாயு மகனுகிய திறமையுள்ள அனுமான், அவ் யானைப் போருக்கு நடுவில் வந்து புகுந்து அவற்றின் மேல் விழுந்து பின்னர் வந்த ஒரு கோடியே ஒரு லட்சத்து அறுபத்து நாலா யிரம் யானைகளையும் கொன்று வெற்றியுறச் செய்ய, இம்முறையில் வாகை சூடிய இளைய பெருமாள் வணங்கும் பெருமாளே ; நீ, கிருட்டிணுவதாரத் தில் இடையர் வீடுகளில் ஒளித்திருந்து பாலைக் குடிக்கும்போது, ஓரிடைப் பெண் உன்னைக் கண்டு பிடித்து, கயிற்றால் உன் இரண்டு கைகளையும் உர லோடு பிணித்து, ஒப்பற்ற உன் தாயாகிய யசோதையிடம் வந்து 'உன் மகன் கிருட்டினன் எங்கள் வீட்டில் இருக்கின்றான், நீ அவனை விசாரித்தல் வேண்டும்' என்று சொல்ல, அப்பொழுதே யசோதையின் கொங்கையில் வைத்த வாயும், மடியில் இருந்த இருப்பும் விலகாமல், நீலமுகில் புறப்படு தல் போல அவ்விடைப் பெண்ணின் முன் நீ மெத்தென வருதலைக் கண்டு கோள் சொல்லிய அப்பெண் வெட்கித் தலைகுனிய யசோதை சிரிக்குமாறு பெரிய வஞ்சகமுடைய மாய வடிவம் கொள்ளுவாய்; இத்தகைய உன்னைக் கண்டு பிடிக்க வல்லார் யார்? உன் அடியார்கள் கண்டு பிடித்தற்குரியவர் களே யன்றி மற்றையோர்க்கு இயலாது.

தானன தந்தன தத்த தந்தன
தானன தந்தன தத்த தந்தன
தானன தந்தன தத்த தந்தன தனதான

247. வேரிய லங்கலி ருத்து கொண்டையர்
தாசுகள் கொண்டும றைத்த கொங்கையர்
வேள்விழி கொண்டும யக்கு வம்பிகள் மதியாதே

மேல்விழ வந்துபி டித்தி ணங்கிகள்
காசுதொ லைந்தபின் விட்டி யம்பிகள்
மேனியின் மஞ்சள்மி னுக்கு தொண்டிகள் எவரோ(

சேருமு டம்பிகள் பட்ட றிந்தவர்
வீறுபெ ருங்கிழி யைச்சு மந்தவர்
சேலைபெ றும்பொழு திற்சி ணுங்கிகள் அநியாய

தீமைநி றைந்தவ ருட்ச வங்கிகள்
வேசிகள் தங்கள்ம யக்கை வென்றிரு
சீதள பங்கய பொற்ப தந்தனில் அடைவே(

வாரண பந்திதொ லைத்து வந்தொரு
தேவர்க ளந்தக னைக்க வர்ந்தபின்
மானமு றுந்த்ரிசி ரத்தன் விண்புக அமரா

மாருதி சென்றுகு டக்க டைந்தபின்
மேல்வரு கின்றஅ ரக்கர் தம்படை
மாளம லைந்துக ணக்கில் வெஞ்சர மழைதூ(

ஆரமு ழங்கவெ டுத்த சங்கமும்
மாரத முந்தறி யிட்டு வெஞ்சிலை
யானது முந்தவ றுத்து மந்திர நெறியாே(

ஆரண னம்புதொ டுத்து நின்றதி
காயனை வென்றுசி ரத்தை யுந்தளி
ஆருயிர் கொண்டவி லக்கு வன்தொழு பெருமாளே

உரை:—அனுமான் யானை வரிசைகளை அழித்து, எதிர்த்து வந்
இமையவர் காலனாகிய ஒப்பற்ற தேவாந்தகனை ஒரு குத்தினால் கொன்
பின், வலிமை பொருந்திய முத்தலைகளையுடைய திரிசிரனை நிலத்தி
போட்டுக் காலால் தேய்த்து அவனுயிர் வீர சுவர்க்கம் சேருமாறு பொருத
தனக்கு ஆணையிட்ட இடமாகிய மேலைக் கோட்டை வாயிலில் குரங்
களின் கூக்குரல் கேட்டதனால் அவ்விடம் சென்ற பிறகு, (இளைய பெரு
மாள்) தன்மேல் வரும் அரக்கர் கூட்டம் மாள அம்புகளை அளவின்றி மழை
போற் பொழிந்தும் திசைகள் முழுதும் நிறையுமாறு முழங்க வெடுத்த
அதிகாயனுடைய வலம்புரிச் சங்கும், பெரிய தேரும் துண்டாகத் தறித்
தும், கொல்லுந் தொழிலையுடைய அவன் வில்லை முற்பட அறுத்தும்,
மந்திர முறைப்படி பிரம்மாத்திரத்தைத் தொடுத்து அதிகாயன் தலையை
அறுத்துத் தள்ளியும் அவன் உயிரை வாங்கிக் கொண்ட இளைய பெரு

மாள் வணங்கும் பெருமாளே ; மணத்த பூ மாலைகளை யணிந்த குழலை யுடையவரும், (வேரி—தேன் என்றும் ஆம்) புடைவைகளைக் கொண்டு மறைத்த கொங்கைகளை யுடையவரும், வேல் போன்ற கண்களால் காமுகர் களை மயக்கும் வம்புடையவரும், மதியாமல் தம்மேற் காதலுள்ளோர் வந்து விழுமாறு பிடித்து இணக்கம் செய்பவரும், ஆடவர் கையிலிருந்த காசுகள் தொலைந்த பின் வெறுத்துப் பேசிக் கைவிடுபவரும், உடல் முழுதும் மஞ்சள் பூசி மினுக்கி ஏவல் செய்பவரும், பொருள் கிடைப்பதாயின் இழி குலத்தவரையும் உயர் குலத்தவரென்று நினைத்து எவரோடும் கூடும் உடம்புடையவரும், எல்லா அநுபவமும் நுகர்ந்தறிந்தவர்களும், சேலை களை வாங்கிக் காதலன் கொடுக்க 'இது வேண்டாம், நல்ல புடவைகள் வேண்டும்' என்று சொல்லிச் சிணுங்குகின்றவரும், அநியாய வடிவமான தீமை நிறைந்தவரும், மனத்தில் வெட்கங் கெட்டு மழுங்கினவரும் ஆகிய கணிகையரிடத்து வைத்த மயக்கத்தை வென்று, உன் குளிர்ந்த செந்தா மரை போன்ற அழகிய திருவடிகளில் உள்ளத்தைச் செலுத்தி நின்னை அடைவேனோ ?

தத்த தானன தத்தன
தத்த தானன தத்தன
தத்த தானன தத்தன தனதான

248. கற்றி லாதவன் வஞ்சகன்
முற்ற மூடன்ம மூங்குணி
கட்டன் மாவிர கன்பழி யுணராதான்
கத்து வோன்மதி கிஞ்சிலும்
அற்ற பாவிபி வன்கல
கத்த னுமென நின்றவர் அனைவோரும்
பெற்ற பாவியை நொந்திட
இற்றை நாளள வும்பல
ப்ரட்ட ரோடுதி ரிந்தனன் அதுபோதும்
ப்ரக்ஞை யானது தந்தினி
அற்ப மாகினு நின்பத
ப்ரத்தி வாழ்சம யம்பெற வருவாயே
வெற்றி மானுட னந்தகன்
உட்க வாலிம கன்பொர
வெற்பு நேரென கும்பனை அரிராசன்

மெத்த மோதிய றைந்திட
மத்த ராயிர் செங்கனல்
மிக்க சேயிட பன்கொள — வரதூதன்

குற்ற மேவுநி கும்பனை
உற்று நீடுக ரங்கொடு
குத்தி யாருயிர் கொண்டிட — நிருதேசன்

கொட்டம் யாவும ழிந்திட
மட்டி லாதபெ ரும்படை
கொற்ற மேவர வின்புறு — பெருமாளே.

உரை :—வெற்றி பொருந்திய நராந்தகன் இறக்குமாறு வாலி மைந்தனாகிய அங்கதன் சண்டை செய்து அவன் கத்தியைப் பறித்து வெட்டிக் கொல்லவும், மலை போன்ற வுடலையுடைய கும்பனை குரக்கரசாகிய சுக்கிரீவன் மிகவும் அடித் தறைந்து அவன் நாக்கைப் பிடுங்கிக் கொல்லவும், மத்தனைச் செந்நிறமுடைய அக்கினி தேவன் மகனாகிய நீலன் குத்திக் கொல்லவும், வயமத்தனுடைய உயிரை, இடபன் கட்டி யிறுக்கிக் கொல்லவும், வரம் பெற்ற தூதனாகிய அனுமான், அங்கதனைக் கொல்லச் சூலமெடுக்கும் குற்றம் பொருந்திய நிகும்பனைச் சேர்ந்து, நீண்ட கையால் குத்தி அவனுயிரை வாங்கவும், அரக்கர்க் கரசனான இராவணன் அனுப்பிய பொல்லாங்கு செய்யும் சேனைகளெல்லாம் அழியவும், அப்போது குரங்குப் படைகள் அளவில்லாத வெற்றியைப் பெறவும், இன்பம் பொருந்திய பெருமாளே ; உலகத்தவர் என்னைப் பார்த்து, கல்வி கற்றும் அறிவில்லாதவன், வஞ்சகன், முழு மூடன், நாணமின்றி மழுங்கியவன், பார்க்கவும் முடியாத விகாரமுள்ளவன், பெரிய சூழ்ச்சியுடையவன், வரும் பழியை யறியாதவன், கழுதைபோல் கத்துகிறவன், சிறிதும் அறிவில்லாப் பாவி, கலகக்காரன் என்று பழித்து என்னைப் பெற்ற பாவியின் மனம் வருந்தப் பேசவும், இன்று பல பிரட்டரோடு கூடத் திரிந்தேன். அங்ஙனம் திரிந்தது போதும்; இனியேனும் நல்லறிவாகிய ஞானத்தைத் தந்து, நின் திருவடியே கதியெனா வாழும் அடியார் குழுவில் நானும் ஒருவன் என்னுமாறு வைத்துச் சிறிதேனும் வைணவ சமயத் தொடர்பு பற்றுதற்கு அருள் செய்வாயாக.

('மத்தர் என்று பொதுப்படப் பன்மையிற் கூறியதனால் இடபன் கொன்றது மத்தனை எனவும் நீலன் கொன்றது வயமத்தனை எனவும் பொருளுரைக்கப்பட்டது.)

('நின்பத ப்ரத்திவாழ் சமயம் அற்பமாகினும் பெற' எனக் கூட்டுக.)

தத்தந்தன தத்தன
தத்தந்தன தத்தன
தத்தந்தன தந்தன — தனதான

249. நற்பங்கய மொப்பது
முற்றும்பணி யிற்றிரு
நட்டம்புரி கிற்பது — கழுநீரை

நக்கன்சடை விட்டது
கத்தும்பர தற்குமுன்
நட்பின்சிரம் வைத்தது — மயில்போலக்

கற்பன்றெழு வித்தது
விற்கண்டுமி தித்தது
கைக்கொண்டவ ருக்குள — வினைசேரக்

கைக்கும்ப்ரப லத்தது
சிக்கென்றொரு மைத்துனர்
கட்டும்பத மெப்பொழு — தருள்வாயே

வெற்பின்கன பொற்புய
நற்றம்பி டத்துயர்
மெய்க்கிந்திர சித்தனும் — ஒருபாசம்

விட்டெங்குமழித்திட
உட்கொண்டிர தத்திரள்
மெத்துஞ்சத பத்தொடும் — இமையோரே

நிற்பந்தம்வி ளைப்பவர்
எட்டஞ்சுவெ ளத்தொடு
நெய்த்தங்குகொ லைப்படை — யதனோடு

நிற்கின்றக ளத்தொரு
விற்கொண்டுவி லக்குவன்
நித்தம்பரவித்தொழு — பெருமாளே.

உரை :—மலைபோலப் பருமையும் பொலிவும் பொருந்திய தோள்களை யுடைய நல்ல தம்பியாகிய அதிகாயன் இறந்ததனால், ஊரெங்கும் அழும் துயர் கேட்டுத் தன் தம்பி யிறந்தது உண்மை யென்று அறிந்து இந்திர சித்தன், ஒப்பற்ற நாகபாசத்தை விட்டு எங்குமுள்ள பகைஞர்களை அழித்

தல் வேண்டுமென்று மனத்தில் நினைத்து, நடத்தும் தேர்க் கூட்டங்கள் ஆயிரத்தோடும், இமையவர் நிற்பந்தம் செய்யும் நாற்பது வெள்ளம் அரக்கர் படையோடும், பகைவர் தம் பிணந் தங்கிய கொல்லுந் தொழிலை யுடைய படைக்கலங்களோடும் வந்து நிற்கும் போர்க்களத்தில், ஒப்பற்ற வில்லைத் திருக் கையில் பிடித்து ஒப்பற்ற இளைய பெருமாள் நாள்தோறும் போற்றிப் புகழ்ந்து வணங்கும் பெருமானே ; நின் திருவடித் தாமரைகள், அழகிய செந்தாமரை மலரை யொத்தவை; முற்றிய பல தலைகளையுடைய காளிங்கன் என்னும் பாம்பின் படங்கள் எல்லாவற்றிலும் நடனம் செய்தவை ; பிரமன் கழுவிய நீராகிய கங்கையைச் சிவபெருமான் தலையின் மேல் தரிக்க விட்டவை ; உன்முன் அழுத பரதனுக்கு அன்பினால் முடியில் வைக்கப்பட்டவை; முன்னாளில் கல்லை மயில்போன்ற சாயலையுடைய பெண்ணாக்கி எழச் செய்தவை ; மிதிலையிலே வில்லைக் கண்டு மிதித்தவை ; கையால் பிடித்துக் கொண்ட பரம பாகவதருக்குள்ள பாவங்களை யெல்லாம் கழித்து ஓடச் செய்யும் பெருமையுள்ளவை; ஒரு மைத்துனனாகிய சகாதேவன் அழுத்தமாகப் பிடித்துக் கொள்ளப்பட்டவை ; இங்ஙனமெல்லாம் செய்த நின் திருவடிகளை எனக்கு எப்போது அருள்வாயோ ? இன்றே விரைந்து தந்தளிப்பாயாக.

(நிற்பந்தம்—கட்டுப்பாடுடைய காவல்.)

தான தந்தன தான தான தந்தன தான
தான தந்தன தான தான தந்தன தான
தான தந்தன தான தான தந்தன தான தனதான

250. பாய லென்றக லாத நாக புங்கவ னீடு
மாமு கந்தனி லாய வாயு விஞ்சிய போது
பார டங்கலு மோடி யேபு லர்ந்திட வீசும்
வலைமான

பாணி யங்கக லாத நேமி யன்பத னாடு
மேத கும்பரை யாகி மேலெ ழுந்தொளி வீசும்
பாவ கன்சுட வேவெண் ணீறெ ழுந்திடும் யாவும்
அதுபோனால்

தூய பங்கய பாத மீது துன்றலை மோது
வாரி னெடுந்திரை யாய வேலையும் படியோடு
சூழு மண்டமு மேக மாய்நி றைந்திடு மாய
படியானுன்

சோர்வ ரும்பெரு மாயை யார றிந்தவர் வேறி
யார்க டந்தவர் தேவர் தேவ ருந்தெளி யார்கள்
சோதி நின்குண வேலை யாடு வன்கணை யாற
அருள்கூராய்

ஆயி ரங்கணை கோடி சூல வெங்கணை கோடி
நாக வெங்கணை கோடி கோர வெங்கணை கோடி
ஆடு பங்கய ரூப தாய கம்பல கோடி
அமரேசன்

ஆடல் வெம்படை யான நீள்ச ரம்பல கோடி
தேவர் தம்படை கோடி காத கன்கடி தேவ
ஆய வெம்படை யேவி யாவை யுங்கொட நூறி
அனுமான்மே

லேயி ருந்தம ராடி நாணெ றந்திடு மோதை
வான கங்குலை வாக மாதி ரஞ்செவி டாக
யானை யுந்தலை சாய வாளி சென்றவன் மார்பு
தெரியாவா(று)

ஈட ழிந்திட மூழ்க ராவ ணன்சி றி யோனை
ஓட வென்றிடு சேடன் நாடொ றும்பிரி யாத
இராம சந்திர கோயில் மேவு புங்கவ தேவர்
பெருமானே.

உரை :—இளைய பெருமாள் மேல் இந்திர சித்தன், ஆயிரங்கோடி யம்புகளையும், சூலம்போல் மூன்று பிரிவாய் உள்ளே வெப்பம் உள்ள கோடி அம்புகளையும், கொடிய கோடி பாம்புக்கணைகளையும், கொடுமை மிக்க பிற வேறு கோடி யம்புகளையும், ஆடும் தாமரைப் பூப்போன்ற வடிவுடைய பல கோடி அம்புகளையும், தேவர்க்கரசான இந்திரன் பெற்றுள்ள வச்சிரப் படை போன்று கொடுமையும் வலிமையுமுள்ள நீண்ட பல கோடி அம்புகளையும், வாயுக்கணை, அக்கினிக்கணை முதலிய தேவர்களின் கணைகளில் வகைக்கொரு கோடியாக அமைந்த அம்புகளையும், கொலை செய்யும் தொழிலையுடைய அவன் மிக்க விரைவுடன் செலுத்த, இலக்குவன் முறைப்படி அந்தந்த அம்புக்கு அந்தந்த அம்புகளை அவன் விட்ட அளவின் படியே விட்டு, எல்லாவற்றையும் பொடியாக்கி, அனுமான் மேலிருந்து போர்புரிந்து வில் நாணைத் தெரித்து ஓசையை உண்டாக்க, அவ்வோசை யினால் விண்ணுலகு நடுங்கவும், எட்டுத் திசைகளும் செவிடாகவும், பின்னர் அவ் வில்லினின்றும் தூரத்தப்பட்ட அம்பு, இந்திரசித்தினுடைய

மார்பு தெரியாமல் வலிமை யிழந்து போகுமாறு மார்பில் நுழையவும், இ வணன் மகனாகிய அவனை ஓடத் துரத்தி வென்ற ஆதிசேட மூர்த்தியா அவ் விளைய பெருமாள் என்றும் பிரியாத இராமசந்திரா ; திருக்கோ லாகிய திருவரங்கத்தில் அமர்ந்தருளிய தெய்வமே ; இமையவர் பெ மானே ; நீ பள்ளிகொள்வதற்குப் பாயல் என்று பிரியாது கிடந்த பாம்ப சான ஆதிசேடனுடைய நீண்ட பெரிய முகங்கள் உண்டாக்கிய காற் விஞ்சிய போது, நிலவுலகமெங்கும் உலர்ந்து போகுமாறு ஓடி வெயி வீசும்; நின் வலக்கையை விட்டுப் பிரியாத சக்கரப்படை தன் திருவுள்ள தில் அன்பு பொருந்தத்தக்க சோதியாகி மேல் எழும்; ஒளி வீசும் அக்கி தேவன் சுட அதனால் உலர்ந்த நிலவுலக மெங்கும் வெண்மை நிறமா சாம்பலாகி எல்லாப் பொருள்களும் எழும் ; உலகம் இவ்வாறு போகு னால், மீண்டும் தூய செந்தாமரை மலர் போன்ற நின் திருவடிகளின்மே நெருங்கிய அலை மோதிப் பிறந்த நீண்ட அலைகளையுடைய விண்ண யாகிய கடல் விண்முகடும் நிலமும் ஒன்றாகுமாறு கிளர்ந்து நிறையும் இங்ஙனம் முன் சாம்பலானபடி அவற்றை நீ மீண்டும் படைத்தமையா நினது மறப்பற்ற பெரு மாயையை அறிந்தவர் யார் ? நின்னை யன்றி அ மாயையைக் கடந்தவர் யார் ? தேவர்க்குந் தேவரான சிவபெருமான் மு லியோரும் இதனைத் தெளிய மாட்டார்கள் ; ஒளி வடிவாகிய நின் குண கடலில் என் களைப்புத்தீர மூழ்கிக் குளித்து ஆடத்தக்கதாகிய அரு எனக்குச் செய்ய வேண்டுகின்றேன்.

(ஊழியில் உலகங்கள் யாவும் அழியும் முறையை இப் பாட்டுக் கூ கின்றது.)

தந்தன தத்தன தத்தன
தந்தன தத்தன தத்தன
தந்தன தத்தன தத்தன தனதா

251. முந்துபு றக்கிரி சுற்றிதழ்
கன்னிகை பொற்கிரி யக்கடன்
மொண்டம துத்துளி மற்றடி கிரிதா
மொய்ம்புள மெய்ப்புலி மற்றுக
தண்டுப ணிக்கிறை சட்பத
முன்புமு ழக்கும றைப்பயன் எனவே
உந்திம லர்க்கம லத்தினை
இங்குவி ரிப்பைமு கிழ்த்துவை
உண்டுமிழ் கிற்பது பிப்படி ஒழியா

உன்றன்ம யக்கில கப்படும்
எங்கள்க ருத்தில கப்பட
ஒண்சொரு பத்தைநி றுத்தினை அமையாதோ

துந்துபி மத்தள மெத்திய
சங்கமு ழக்குக ளத்திடை
தொந்தமெ னப்பல கொட்டல கையுமாடத்

தொந்தமு றப்பல பட்சிகள்
கண்கள்ப றித்தும ணிக்குடர்
தொங்க விழுக்கந ரித்திரள் விளையாடத்

தந்திப டப்பரி பொட்டெழு
வந்தவ ரக்கர்வி ழப்பெறு
தன்கையி னுற்றப டைக்கல வகைமாளத்

தஞ்சம ரக்கர்க ளத்திடை
இந்திர சித்தைமு டுக்கிய
தம்பிக ருத்திலி ருத்திய பெருமாளே.

உரை :—தேவ துந்துமி, மத்தளம் முதலிய சிறு கொம்பால் அடிக்கப் படும் இயங்கள் முழங்கும் போர்க்களத்தில், தொந்தோமென்று பலவகை யாகக் கைகளைக் கொட்டிப் பேய்களும், தலைகுறைந்த பிணங்களும் ஆடவும், தொடர்ந்து தொடர்ந்து வரும் பல பறவைகள் பிணங்களின் கண்களைப் பறித்து, அழகிய குடர்களைத் தொங்கத் தொங்க இழுக்கவும், நரிக் கூட்டங்கள் தசைகளைத் தின்று கொழுத்து விளையாடவும், யானைகள் இறக்கவும், குதிரைகள் மடியவும், அவை நின்ற விடத்தில் புழுதி எழும்பித் தரை அழுத்தமாகவும், இந்திரசித்தனுடன் வந்த அரக்கர்கள் இறந்து விழவும், அவன் வரத்தாற் பெற்ற படைக்கலங்கள் எல்லாம் அழியவும், அப்பால் தன்னைக் காப்பாரின்மையால் அகன்ற விண்ணில் அஞ்சியோடி யொளிக்குமாறு அவ்விந்திரசித்தனை முடுக்கிய நின் திருத் தம்பியாகிய இளைய பெருமாளின் திருவுள்ளத்தில் அன்பினை இருத்தியருளிய பெரு மாளே ; நின் திருவுந்தித் தாமரையின் இலக்கணம் எது வென்னில், எல்லாவற்றிற்கும் முந்திய புறமலையாகிய சக்கரவாளமலை தாமரையைச் சுற்றியுள்ள இதழ் ; பொன் மலையான மகாமேரு இதழ்களுக்குள் இருக் கும் பூங்கொட்டை ; இவற்றில் நடுவிலுள்ள அக் கடல், மொண்டு கொள் ளும் தேன் துளி ; மற்றைய மலைகள் வல்லாம் பூம்பொடிகள் ; அழுத்த மாய் உண்மையாயுள்ள இவ்வுலகம் அப்பூவின் தாள் ; ஆதிசேடன் அதன் தண்டு ; முன்னே முழங்கும் வேதாந்த ஒசை ஆறுகாலாகிய வண்டின்

ஓசை ; இத்தகு சிறப்புக்களோடு நீ, நின் திருவுந்தித் தாமரையை இங்கே மலரச் செய்வாய் ; மீண்டும் மூடச் செய்வாய் ; இவற்றை உன் திருவ யால் உண்டும் உமிழ்ந்தும் செய்தலை யொழியாத நின் மயக்கத்தில் அக பட்ட எங்கள் நெஞ்சில், அகப்படுத்த வியலாத அழகிய நின் வடிவத்தை நிறுத்தினாய் ; இஃது எங்களுக்குப் போதாதோ ? போதும்.

(' அலகையும் ' என்ற உம்மையால் தலை குறைந்த பிணங்குகளு கொள்ளப்பட்டன. தொந்தோமென ஆடுவது துணங்கைக் கூத்து.)

தத்தன தனன தந்த
தத்தன தனன தந்த
தத்தன தனன தந்த தனதான

252. மித்தையா மூலைகை நம்பி
இற்றைநா ளளவும் வெம்பி
மிக்கபோ தமது வந்த பிறகா

வெட்கினே னழுது சிந்தை
மட்கினே னுரைய டங்கி
மெத்தவே யசைவில் கம்ப மௌனவானே

எத்தைநா னினிவி ரும்ப
எத்தைநா னினியி ணங்க
எத்தைநா னினிமு யங்க மகிழ்வோமே

எத்தைநா னினிய ருந்த
எத்தைநா னினிவ ணங்க
எத்தைநா னினிவி ளம்ப அறியேனே

சித்தமா னதுத ளர்ந்து
சுத்தவீ ரமுய ழிந்து
சித்ரமா ரதமி ழந்து படைசேர

தெற்குநா டதுபு குந்து
கெட்டபோர் மிசையி லிந்த்ர
சித்துவா னிடைம றைந்து விடுபோதி

பத்திவா னரர்ம யங்க
முற்றவீ டழிய வென்று
பட்டபா டுகளொ ழிந்த துயர்தீர

பற்றுகோ ளரவ டங்க
எற்றுதா ளொழமு னிந்த
பக்கிரா சனையு வந்த பெருமாளே.

உரை :—இந்திரசித்தனுடைய உறுதியான மனம் தளர்ந்து, களங்கமில்லாத (சுத்த வீரமும்) தனியாண்மையும் புகழும் அழிந்து, அழகிய பெரிய தேர்களும் அழிந்து, நாற்பது வெள்ளஞ் சேனையும் தென் திசையிலுள்ள எமலோகத்தில் சேர, அழிந்த போர்க்களத்தின் மேல் நின்றபடி அவன் விண்ணில் முகில்களூடே மறைந்து ஒளித்து நாகபாசத்தை விட அப்பொழுது போர்க்களத்தில் வரிசை வரிசையாக நின்ற குரங்குக் கூட்டங்கள், அப்பாசத்தினூற் கட்டுப்பட்டு மூர்ச்சித்து விழுந்து, வலிமை முழுதுங் கெட்டழிந்ததால், அதுவரை பட்டபாடுகளெல்லாம் ஒழிந்த துன் பந்தீர, கட்டப்பட்ட பெருந் திறலுடைய நாகபாசங்கள் தூற்றப்படும் துகளாய் எழும்புமாறு சினங் கொண்ட பறவைகட் கரசான கருடனை மகிழ்ந்து நின்ற பெருமாளே ; நின் திருவிளையாட்டாகிய பொய்யான இவ்வுலகை நம்பி இதுவரையில் சூடுண்டு, மிக்க பேரறிவாகிய ஞானம் வந்த பின், இதுவரை நான் இருந்த இருப்பைக் கண்டு வெட்கினேன் ; இது பொறுக்கமாட்டாமையின் அழுது நெஞ்சம் மழுங்கினேன் ; பேசுதற்கு ஒன்று மின்மையால் பேச்சடங்கிப் போக அசைவற்ற கம்பமானேன் ; இனி நான் எதனை விரும்புவேன் ; எதனை நட்புக் கொள்வேன் ; எதனோடு கூடிக் கலந்திருப்பேன் ; மகிழ்ச்சியுடன் எதனை உண்பேன் ; எதனை வணங்குவேன் ; எதனைச் சொல்லுவேன் ; ஒன்றுமறியேன்.

(இந்திரசித்தனுக்குத் தனியாண்மையாவது, இராவணனைப் போல் கார்த்தவீரியன் வாலி முதலியோரால் வீரமழிக்கப்பட்டு இழிவடையாமல் இருந்தமை என்க.)

தனதனனு தான தந்த
தனதனனு தான தந்த
தனதனனு தான தந்த தனதான

253. நினைவறவே மூவர் வந்து
கனையிருளா லேயொ டுங்கி
நெடுமழையா லேய டங்கி நிமிர்வாக
நிலையெனவே கூடி நின்று
வெளியிடவோர் தீப மின்றி
நிலமகலா நீர்நெய் விஞ்சு கதிர்தீபம்

எனுநெறியான் மூவர் தங்கள்
வகைகவினா லோது மந்த
இடைகழிமா டேபு ணர்ந்த திருவோடு

இருசுடரா மாழி சங்கும்
இறையொடுநீ கோயி னின்ற
இனியபொன்மா மேனி கண்டு தொழுவேனே

உனையறியே னுனி ருந்த
எனையறியாய் நீயு வந்த
உறவுடையார் போல வந்தெம் உயிர்வா

உரகமெலா மாள நின்ற
பெருமையையா ரோடி யம்ப
உதவிசெய்தா யேவி ளங்கு பெரியோனே

கனகவொரு பாவி ரிந்த
சிறையுடையா னேய ணிந்த
கணபணியா னேத்ரி யங்கொள் விழியானே

கடைவழிபே ரேதி யம்பு
நினைமறவேன் வாழி யென்று
கருடனைநே ரேபு கழ்ந்த பெருமாளே

உரை :—கருடனைப் பார்த்து இராமபிரான் சொன்னது :

"நான் உன்னை யறியேன்; இங்கே யிருந்த என்னை நீ யறியாய் முன்னே நெஞ்சுக் குகந்த உறவுடையார் போல வந்து எங்கள் உயி போகாமல் இருந்து வாழுமாறும், எங்களைக் கட்டி நின்ற பாம்புக ளெல்லா அழியுமாறும் எதிர் நின்ற உன் பெருமையை நான் யாரோடு சொல் வேண்டி இவ் வுதவி செய்தாய்; உலகமெங்கும் விளங்கும் பெருமை யுடையவனே, ஆணிப் பொன் நிறம் பெற்ற வடிவுடையானே, விரிந் பரந்த சிறகுடையவனே, பருமையுள்ள பல பாம்புகளை யணிந்தவனே முக்கண்களை யுடையவனே, நீ வேறொன்றையும் சொல்லாவிட்டாலு இறுதியாக உன் பேரென்ன வென்றுவது சொல்லுவாய்? உன்னை நா மறவேன்; நீ வாழ்க" என்று கூறிக் கருடனை அருள் உடன்பாடாக புகழ்ந்தருளிய பெருமாளே; திருக்கோவல் இடைகழி என்று சொல்ல படும் திருப்பதியில் மழையும் இருட்டும் மிக்கிருந்தமையால் துன்புற்ற நினைக்கும் நிலையுமற்றுப் பொய்கையாழ்வார் மழையில் நனைந்து ஒருவ படுத்தற்கு மட்டும் வேண்டிய இடமிருந்த ஓரிடத்தில் வந்து படுத்திருக்

பிறகு, பூதத்தாழ்வார் மழையில் நனைந்து நடுக்கெடுத்து, வழி தெரியாமல் தடுமாறிப் பொய்கை யாழ்வாரிடத்துக்கு வந்து இடங் கேட்க, அவர் இவரை உள்ளே அழைத்து, இருவரும் படுக்க இடமின்மையால் இவரை இருக்கச் செய்து தாமும் இருக்க, பின்னர்ப் பேயாழ்வார் இங்ஙனமே அலைந்து வருந்தி அங்கு வந்து இடங் கேட்க, அவரை யுள்ளே யழைத்து மூவருக்கும் இருக்க இடம் போதாமையால், மூவரும் எழுந்து நிற்க, அவர்களிடையே பிறரொருவர் வந்து எவர்க்கும் தெரியாமல் நெருக்க, அதனைக் காண்பதற்கு விளக்கின்மையால், உலகமே அகலாகவும், நீரே அன்புமிக்க ஒளியுள்ள விளக்காகவும் கொண்டு போற்றிப் பரவி நிற்கும்போது, நீ ஒரு கிழ மறையோனாகி நடுக்கெடுத்து வந்து அவர்களை இடங் கேட்க, உன்னையும் அழைத்து நால்வர் நிற்கவும் இடம் போதாமையால், அம்மூவரும் தங்கள் தலைமேல் உன்னைத் தூக்கி வைத்துக் கொண்டு நிற்கையில், வீணில் போது போகாதிருப்பதற்காக நால்வரும் பேசிக் கொண்டு, பொய்கையாழ்வார் ஓரடி சொல்ல, பூதத்தாழ்வார் ஓரடி சொல்ல, பின் பேயாழ்வார் ஓரடி சொல்ல இம்மூவடிகளையுந் தொகைப்படுத்தி, நீ ஒரு (பாதம்) அடி சொல்லி முடிக்க, இக்காரணத்தால் அந்நூலுக்குத் திரிகடகமென்று பெயரிட்டு நூறு பாட்டுக்களால் சொல்லப்பட்ட அவ்விடைகழி யென்னும் திருப்பதியில், நின் திருமார்பில் பொருந்திய பெரிய பிராட்டியாரோடும், இரு சுடராகிய ஞாயிற்றையும் திங்களையும் ஒத்த திருவாழி திருச்சங்குகளோடும் நீ திருக்கோயிலில் நின்றருளிய இன்பமான அழகிய நீல நிறமுள்ள நின் திருமேனியை வணங்கித் தொழுவேனோ? சொல்லுவாய்;

தனன தான தனன தான
தனன தான தனன தான
தன்ன தான தனன தான தனதான

254. கடிய நீடு புரவி யேறி
அரசு நீழல் மறைவி னூடு
களவு காணும் நினைவி னோடு நனிமேவு

கலியர் காண வுயர்கல் யாண
வடிவி னோடு மறுவி லாத
கமலை யோடு மணுகு போது பறியாடுங்

கொடிய நேர மதனுள் மாயை
தெரியு மாறு புனலின் மூழ்கு
குணிய பாவொர் செவியி லேயொள் ளணிவோதிக்

குறைசெய் வாளின் குறைகள் தீர
உரைசெய் தானும் இறையு ஞான
குருவு மான வுனது பாதம் அடைவேனே

அடியு மாகி நடுவு மாகி
முடியு மாகி முதலு மாகி
அறிவு மாகி நெறியு மாகி அறியா

அருவ மாகி யுருவ மாகி
வெகுவி னோத மூளநின் மாயை
அறியொ ணாது னடிமை நானும் வருவேன்மே

இடரி லாத ரகுகு லேச
சரணம் வாழி யெனவு லாவி
இறுகு நாக முறிய வீசு களமீதே

எதிரி லாத கருட ராசன்
உரிமை யோடு தொழுதுபோக
இளவல் மார்பு தழுவி மேவு பெருமாளே.

உரை :—கருடன் புகழ்ந்து தொழுவது :

"எல்லாவற்றிற்கும் முற்பட்ட அடியுமாகி நடுவுமாகி முடிவுமாகி, எல்லாப் பொருள்களும் உண்டாகின்ற முதலுமாகி அறிவுமாகி அறிவிலுள்ள வழியுமாகி ஆரும் அறியாத அருவமாகிக் காண்கின்ற உருவமாகிப் பல வகைப்பட்ட வியல்புடைய நின் மாயை அறியக் கூடாதது; நின் அடிமை யாகிய நானும் இனிமேல் போய் வருவேன்; துன்பமில்லாத ரகு மரபிற் குத் தலைவனே, நின் திருவடிக்கு வெற்றி;" என்று சொல்லிக் கொண்டு திரிந்து இறுகக் கட்டிய பாம்புகளெல்லாம் முறிய வீசி அப்போர்க்களத் தின் மேல் புள்ளரசாகிய பெரிய திருவடி தனதாகிய அன்போடு வணங் கிப் போக, அதன் பின் இளைய பெருமாளுடைய மார்பைத் தழுவிக் கொண்டு பாசறையை அடைந்தருளிய பெருமாளே; திருவரங்கத்தில் திருக்கோயில் கட்டுவதற்காகக் கடும்பரியேறி அரசமரத்தின் நிழல் மறைப் பிலே இருடக்காணும் நினைவோடு தங்கியிருந்த மிக்க திறலுடைய கலியர் என்னும் திருமங்கையாழ்வாருடைய கண்களுக்குத் தெரியுமாறு சிறந்த மணக் கோலத்துடன் குற்றமில்லாத பெரிய பிராட்டியாரோடு நீ நெருங்கி வரும் போது, ஆழ்வார் வந்து உங்களை வளைத்துக் கொண்டு உங்கள் அணி களைப் பறிக்கும் கொடிய வேளையில் நின் மாயை தெரியுமாறு நீ தண்ணீரில் அஞ்சினாய் போல் மூழ்க ஆழ்வாருந் தூரத்திவந்து குனிய அப்போது அவருண்ட்டிய ஒப்பற்ற வலக்காதில் 'இப்பாட்டைக் கேள்' என்று உப

தேசம் செய்து, முன் ஆழ்வார் பறித்தபோது கையால் வெட்டிய—வாளி ஞல் வந்த பாவங்களாகிய குறைகள் தீர அடிமை கொண்டு ஆளும் ஆண் டவனும், ஞான குருவுமான நின் திருவடியை நான் அடைவேனே ? அன்றி அடையேனே ? சொல்லுக.

தானத்த தான தான தான
தானத்த தான தான தான
தானத்த தான தான தான தனதான

255. காலிப்பி னேகி நீடு லாவு
தாரிக்குள் மேவு தூளி யாதல்
காணுற்ற தூறும் யாவு மாதல் உனைநாளும்

காமுற்ற வாயர் மாத ராதல்
ஆகப்பெ ருது நீடு மேனி
காணப்பெ ருது வாடு வேனை ஒருகாலம்

பாவிப்பை யோகெ டாத வாறு
வாழ்விப்பை யோகெ டாத தேசு
பாரிப்பை யோக்ரு பாலு வாயென் அறிவாகப்

பாவிப்பை யோவு னேய ரோடு
சேர்விப்பை யோவி சார மேது
பாவிக்கு நீசொ லாய லாது தெளியேனே

மாலிக்கு நீல னீல ஞக
வேள்வித்து ரோகி யாவி சேடன்
வாளிக்கு மேவ வீறு தூம விழியானை

மாசற்ற தூதன் மோதி யேக
ஓர்சுக்கி ரீபர் சூரி யாவி
வாடக்க டாவ வாடல் சேர்ப னசனுவே

நீலப்பி சாச னுவி போக
மாபக்கன் வாலி சேய்முன் வீழ
நீள்வச்ர மாப லாளன் மேலி டபனேக

நீதிச்சு ருவி லோச நீசர்
சோரிக்க ளுளர் சீவன் மான
நேருக்ர மான வாளி யேவு பெருமானே.

உரை :—பின்னர் மாலி, வேள்விப் பகைஞன், புகைக் கண்ணை சூரிய சத்துரு, பிசாசன், மாபெரும் பக்கன், வச்சிரப் பல்லன், ஆகி படைத் தலைவர் எழுவரும் போர்புரியும் போது மாலிக்கு நீலன் கருதி முன்னை எமனாகிக் கொன்றான் ; வேள்விப் பகைஞனுடைய உயிர் ஆ சேடனாகிய இளைய பெருமானின் அம்பினால் நீங்கியது ; வெற்றயி விஞ்சிய புகைக் கண்ணனைக் குற்றமற்ற தூதனாகிய அனுமான் அடித்து தலையைத் திருகி எறிந்தான் ; ஒப்பற்ற சுக்கிரீவன், சூரிய சத்துருவி உயிர் போய் வாட மலைகளை வீசிக் கொன்றான் ; வலிமை மிக்க பன னாலே பிசாசனுடைய உயிர் நீங்கிற்று ; மாபெரும் பக்கன் வாலி மைந் னாகிய அங்கதன் கிழித்ததால் இறந்து விழுந்தான்; நீண்ட பெரிய வச்சிர பல்லனாகிய ஆண்மையுடையவன் தன் மேல் இடபன் எதிர்த்துப் பொரு பொழுது அனுமான் வந்து குத்தியதால் இறந்தான் ; இங்ஙனம் படை தலைவர் எழுவரும் மடிந்த செய்தியைத் தூதுவர் சொல்லக் கேட்ட இரா வணன் கரனுடைய மகனாகிய மகரக் கண்ணனையும், சோரிக் கண்ணனை யும், சிங்கனையும், அனுப்ப அவர்கள் வந்து பொரும் போழ்தில், 'தந்தை யாகிய கரனைக் கொன்ற பழியைவாங்க வேண்டு' மென்று வீரவுரை கூறிய மகரக் கண்ணனாகிய நீசன் செய்த மாயங்களை ஒழித்து நீ நின் அம்பினால் அழிக்கவும், சோரிக் கண்ணனாகிய ஆண்மையுடையவன் தலையின்மேல் நளன் குதித்து உதைத்துக் கொல்லவும், சிங்கனைத் தேரோடு பனசன் எடுத்த போது சிங்கன் குதிக்கவே பனசன் அவனை உதைத்துக் கொல் லவும், அவர்கள் இறக்கச் செம்மையும் கடுமையும் உடைய அம்புகளை யேவினை பெருமானே ; நீ கிருட்டிணாவதாரத்திலே பசுக் கூட்டங்களின் பிறகேபோய் உலவிய இடங்களுக்குள் கிளம்பிய தூளாகவாவது, அல்லது காண்பதற் கினிமையான புதர்களாகவாவது அன்றி உன்பால் என்றும் காதல் கொண்டிருந்த இடைப் பெண்களாகவாவது பிறக்கப் பெறாமலும் நின் நீலமேனியை வணங்கப் பெறாமலும் வாடும் என்னைக் கெடாமல் ஒரு காலம் காத்து நான் விரும்பும் பேற்றினை அருள்வாயோ ? கெடாதவாறு நல் வாழ்வு தருவாயோ ? அழியாத சோதியாகக் காப்பாற்றுவாயோ ? அருள் வடிவாகி என் அறிவாகக் கருதுவாயோ ? நின்மேல் அன்புள்ள சிறந்த அடியார்களோடு சேரப்பண்ணுவாயோ ? நின் திருவுள்ளக் கருத் தெதுவோ ? பாவியாகிய எனக்கு நீ சொல்லுவாய் ; நீ சொல்லின் அன் றித் தெளியேன்.

(நீலன் ஆக என்றது நீல நிறமுறைய எமனாக என்னும் பொருள் குறித்து நின்றது. சூரி என்பவன். சூரியப் பகைவன். நீதிச் சுருவிலோச நீசர் என்றது நீதியுடையவன் போலப் பழிவாங்க வேண்டுமென்று வீர மொழி பேசிய மகரமீன் போன்ற கண்களையுடைய மகரக் கண்ணனை.

இவன் கரன் மைந்தன். இப் பாட்டின் உரை விளக்கம் சிறப்புடையதாதலை யறிக.)

தனத்தனன தானன தந்தன
தனத்தனன தானன தந்தன
தனத்தனன தானன தந்தன தனதான

256. வடித்தசட கோபர்மொ ழிந்திடு
தமிழ்ச்சுருதி பேணிய தொண்டனை
மதித்தமது ராம்ருத வின்கவி புனைவோனை
மதித்தகவி ராசனை முந்தவுன்
அடித்துணைகள் மேவவு வந்துநின்
வகைப்பதின்ம ரோடுபு ரந்தனை அதனாலிங்
கடுத்துனைவி டாதுப ணிந்தவர்
தமக்குமடி யேனவர் தொண்டர்கள்
அவர்க்குமடி யேனவ ரன்பர்கள் அடியோமென்
பவர்க்குமடி யேனவர் தங்கிளை
தமக்குமடி யேனவர் பின்செலு
மவர்க்குமடி யேனவர் நண்பர்தம் அடியேனே
படைத்தலைவர் சேரம டிந்தபின்
அரக்கர்பதி வாடுதல் கண்டெதிர்
பகைத்தவரை நானினி நுங்குவன் எனவேகிப்
பகுத்தறுப தானவெ ளம்படை
மிகுத்தரத மாயிர முங்கொடு
பழிப்பறுகு மாரனெ திர்ந்திடும் அமருடே
எடுத்தசிலை நாணொலி கண்டுதன்
வடிக்கணைக ளானிரு தன்படை
இமைப்பளவின் மாளநி ணங்குடர் கரையாக
இரத்தநதி யோடம லைந்திடல்
சிலைக்கையெதி ராளிம கிழ்ந்துசொல்
இலக்குமண னும்வ ணங்கிய பெருமாளே.

உரை:—படைத் தலைவர்கள் எல்லாரும் மடிந்த பின் அரக்கர் தலைவனான இராவணன் துன்பமுற்று வாடுவதை இந்திரசித்து கண்டு, 'எனக்

செதிராகப் பகைத்தவர்களை நான் இனி விழுங்குவேன்' என்று போய நான்கு வகையாகப் பகுக்கப்பட்ட அறுபது வெள்ளஞ் சேனைகளு பருத்த ஆயிரம் தேர்களுங் கொண்டு பழிக்கப்படும் தோல்வியற்ற வெற்ற பொருந்திய அரக்கர் தலைவனின் மகனாகிய அவன் எதிர்த்த போர்க்கள த்தில், நாமொலி செய்து கூரிய அம்புகளால் அவன் படைகள் அறுபது வெள்ளமும் கண்ணை மூடும் நேரத்திற்குள் இறக்க, பிணமும் குடலுங் கரையாக, குருதியாறு அக்கரைக்குள் ஓட இவ்வாறு இமைக்குமளவிற் குள் போர் செய்து கொன்றமையை, வில்லைக் கையில் தாங்கிய பகைவனாகிய அவ்விந்திரசித்து புகழ்ந்து கொண்டாடப் பெற்ற இளைய பெருமாள் எந்நாளும் வணங்கப் பெற்ற பெருமாளே ; ஞானத்தில் வடித்தெடுத்த சடகோபரென்னும் திருப்பேருடைய நம்மாழ்வார் திருவாக்காற் பாடி யரு ளிய தமிழ் மறையை ஆதரித்த அடியவரை—உலகத்தடியார் மதித்த இனி மையுள்ள அமுதமாகிய வளமையுற்ற பாட்டுக்களை யுனக்குத் தரித்த வரை—எண்ணப்படும் கவிக்கரசாகிய புலவரை—முன்னே நின் திருவடி களிற் சேர்க்க வுடன்பட்டு மகிழ்ந்து, நின் அடியவர் வகையான பத்தாழ் வார்களோடு பதினோராவதாழ்வாராகிய மதுரகவியாரெனத் திருப்பெயர் கொடுத்தருளிக் காத்தனை; அதனால், இவ்வுலகில் நின் இரு திருவடிகளை யும் இடைவிடாது வணங்கியோர் தமக்கும் நான் அடியேன் ; அவர்கட்கு அடிமையானவர்கட்கும் நான் அடியேன் ; அவர் தம் அன்பர்களின் அடியார் என்று சொல்வோர்க்கும் நான் அடியேன் ; அவர் தம்மோடு நட்புக் கொண்டோருக்கும் நான் அடியேன்.

தானன தனன
தானன தனன
தானன தனன தனதான

257. போனது மிளமை
ஆனது முதுமை
போய்வரு மறலி உயிர்காணுட
போவது நிலைபொய்
சாவது மினிமெய்
போது மினமது சடகோபர்
ஆனவர் தமிழை
ஓதுமி னெனவும்
ஆயது கருது மவர்மீளார்

ஓரொரு வரையும்
ஊழ்வினை வழியி
லாதொரு வழியில் விடலாமோ

வானவர் வெருவ
மாதிர மசைய
வானரர் மடிய ஒருசாபம்

வானிடு சிலையி
னேயொரு கடிகை
மாறிட வளைய உலகேழும்

தானெரி கணையின்
வேவுற முடுகு
சாதனை நிருதன் மகனேடிச்

சாலவின் மறைய
நேர்பொரு மிளைய
தாணுவை யுடைய பெருமாளே.

உரை :—இவ்வாறு விண்ணவர் அஞ்சவும், திக்குகள் சுழலவும், நரங்குகள் இறக்கவும், முகிலின்கண் இட்ட வான வில்லைப்போன்ற ஒரு வில்லைக் கொண்டு ஒரு நாழிகை நேரம் பகைத்து வளைத்து எழுலகமும் அனற் கணைகளால் வேகுமாறு மிக விரைந்து போர் செய்கின்றவனும், கெடாத சண்டையை யுடையவனும், இராவணன் மகனுமாகி மகிழ்ந்த இந்திரசித்து, ஓடிச் சென்று முகிலின்கண் மிகவும் மறைய, அவனுக் கெதிர் நின்று போர்புரியும் இளைய பெருமாளைத் தம்பியாகவுடைய பெருமாளே.

மக்களுக்குச் சொல்லுவது :

"போனதும் இளமை; வந்ததும் கிழப்பருவம்; போய் வருவதும் யமனே; இனிப் போவதும் உயிரே; உயிர் இருப்பது பொய்; இறப்பது மெய்; இதனை விட்டுத் திருவரங்கஞ் சென்மின்; நம் ஆசாரியரென்னும் நம்மாழ்வார் பாடியருளிய தமிழ் மறையை யோதுங்கள்;" என்று சொல்லுகின்ற அறிவுரையை உண்மையென நினைப்போர் திருவைகுந்தத்தை யடைந்து திரும்பாமல் இருப்பர்; இவ் வறிவுரையை உண்மையென நினையாதார் எவரையும் பழவினை கொண்டு செலுத்தும் நெறியிலல்லாமல் ஒப்பற்ற வைகுந்தத்திற்குச் செல்லும் நெறியில் விட இயலுமோ? இயலாது என்க.

12.

தானன தானன தந்த
தானன தானன தந்த
தானன தானன தந்த தனதான

258. சீதள் தாமரை யுந்தி
மாமலர் போத விருந்து
சேர்பதி ஞலை கெங்கும் முதலினும்
சேரநி லாமலொ டுங்க
ஏடுக ளோடுகு விந்து
தீதற வேயொரு செம்பொன் முகையாகும்
ஈதல தேதுமொர் கிஞ்சில்
நீடிய பாரத ரென்னு
மியாவரு மாறிட வென்றும் அறியாய்நீ
ஈறுப டாமனு யர்ந்த
மூலம தாமுனே நெஞ்சில்
யானறி வோடுவி ளங்க எளிதாமோ
பாதக ராவணி சென்று
தாதையொ டேபடு கின்ற
பாடுகள் கூறியி ரங்கி அயனர்தம்
பாணம லாதினி யொன்றும்
வேறிலை காணென வந்து
பாழ்படு வேள்விதொ டங்க அதுகாண
ஆதவன் மேருவை யண்ட
வீரரொ டேயிள மைந்தன்
ஆகவ பூமியி னின்று நிலைகோல
ஆய்கனி காய்தர வென்று
வீடணர் காணிடை தங்க
ஆயுத பூசைபு ரிந்த பெருமாளே.

உரை :—முகிலினூடொளித்த பாதகனாகிய இந்திரசித்து இலங்கை நகர்க்குள் சென்று, தான்படும் பாடுகளைத் தன் தந்தையிடம் சொல்லி வருந்தி, 'பிரமாத்திரத்தை யன்றி இனி அவர்களை வெல்ல வேறொரு வழியுமில்லை' என்று சொல்லிவிட்டு வந்து, பாழ்பட்ட நிகும்பலை வேள்வியைச்செய்ய, அதனைக் கண்ட கதிரவன் மேரு மலையை யடைந்து மறை

யவும், வானர வீரர்களோடு இளைய பெருமாள் போர்க்களத்தினின்று இந்திரசித்தன் முகிலிடை யொளித்தபோது, அவன் போய்விட்டானென்று கருதியிராமல் அவன் இனியும் வஞ்சத்தால் தீங்கியற்றுவா னென்று விழிப்புடனிருந்து அவன் போயொளித்த நிலையைச் சுற்றிப் பார்த்துக் கொண்டிருக்கவும், ஆராய்ந்தெடுத்த காய் கனிகளைக் கொண்டு வருவதற்காக விபீடணன் காட்டிலே தங்கியிருக்கவும், படைக்கலங்களுக்குப் பூசனை செய்த பெருமாளே ; குளிர்ந்து சிறந்த தாமரையாகிய நின் உந்தி மலர், நன்றாகத் தங்கியிருந்து முறையாகச் சேர்ந்துள்ள பதினான் குலகங்களையும் முதலில் தோற்றுவிக்கும் ; பின்னர் அவை சேர நில்லாதவாறு இதழ்களோடு குவிந்து குற்றமற விள்ங்கும் ஒப்பற்ற செம்பொன் அரும்பாக விருக்கும்; இவற்றை யன்றி ஒரு சிறிதளவேனும் நீ யறிந்ததில்லை ; புகழாலுயர்ந்த பாண்டவர் கௌரவர் ஆகிய அரசர்கள் எல்லோரும் பகைத்து வென்றதனையும் நீ அறியாய் ; அழிவின்றி எல்லாப் பொருள்களுக்கும் மூல காரணமான உன்னை, மனத்தில் உள்ள அறிவினோடு என்னால் விளக்கமாக அறிந்து கொள்ளுதல் எளிய செயலாகுமோ ? ஆகாது.

தனந்தனன தந்த தான
தனந்தனன தந்த தான
தனந்தனன தந்த தான தனதான

259. அருந்துயர்தொ டங்கு நோயும்
மருந்துமென நின்று வாழ்வை
அறம்பொருளு மின்ப வீடு முழுதான(து)
அறிந்தவர்க ளன்ப ராவர்
மருண்டவர்கள் வஞ்ச ராவர்
அறிந்துமகிழ் கின்றி லாத கொடியேன்யான்
பரந்துதிரி கின்ற தேது
குவிந்துவரு கின்ற தேது
படர்ந்துசெலு கின்ற தேது நெறிகூடிப்
பணிந்துதொழு கின்ற தேது
பெரும்பதவி யென்ப தேது
பரிந்துவெளி நின்று கூறி யருள்வாயே
இருந்துநிரு தன்கு மாரன்
அயன்படைவ ரும்ப்ர காரம்
எரிந்துகனல் மண்டு வேள்வி நெறிபோக

எழுந்தடொரு வஞ்ச மாமன்
இரும்படைவெ ளங்க ளூடெ
டெதிர்ந்துபொரு கங்குல் மீதில் — எதிர்தாவ

பொருந்துகரு ணன்கை யோடு
விழுந்தடொரு தண்டி னோடு
புகுந்துபொரு தந்தி கோடி — விழ நாம

புரண்டுடல்கு ழம்ப தாக
நிகும்பனுயிர் கொண்டு வாகை
புனைந்தவனு மன்ப ராவு — பெருமாளே

உரை :—அரக்கன் மகனுமன இந்திரசித்து வேள்விச் சாலையிலிருந், பிரமாத்திரம் பெறுகைக்காக வேள்விக்கனல் எரிந்து நெருங்கியுள்ள அ வேள்விச் சடங்கின் வழியே நிற்க, அப்போது போர்க்கெழுந்த மாமல இய மகோதரன், பெரிய நூறு வெள்ளம் படைகளோடு போர்க்களத்தி வந்து பொருகின்ற அந்நள்ளிரவில், அவ் வரக்கர்க்கெதிரே அனுமான தாவி, முன்னே கும்பகருணன் கையறுந்து விழுந்தபோது உடன் விழுந், வொரு தடியோடு உள்ளே புகுந்து ஒரு கோடி யானை விழ நொறுக்கி உடல் புரண்டு குழம்பாகுமாறு நிகும்பன் உயிரை வாங்கி வெற்றி மாலை சூடினன் ; அத்தகைய அனுமன் வணங்க நின்றருளிய பெருமாளே தீர்த்தற்கு அரிய துன்பம் தொடங்கப் பெற்றுள்ள இடர் செய்யும் நோயு அது தீர்க்கும் மருந்தும்போல், நீ நின்று அழியாம லிருப்பாய் ; அறம் பொருள், இன்பம், வீடென்னும் நான்கினையும் அளந்தறிந்தோர் நின் அன்பராவர் ; இது பொய் யென்று மயங்கியோர் வஞ்சராவர் ; இவற்றை யறிந்து மகிழ்ச்சி கொள்ளும் அறிவில்லாது, கொடுமை செய்யும் பாவியா கிய நான், இப் பிறவி தொலைந்து, மீளாதபதவியில் எப்படிச் சேர்வதென் றும், பாந்து அலைந்து திரிவது ஏன் ? என்றும், பரப்பில் அலையாமல் குவிந்து வருவதெது ? என்றும், அப்படி வராமல் எங்கும் பரந்து நடப்ப தெது ? என்றும், நன்னெறியிற் கூடி உன்னை வணங்கி, எழுந்து நின்று கும்பிட்டு நிற்பதெப்படி ? என்றும், இதனாற் பெறும் பெரிய பரமபத மென்று சொல்வதெது ? என்றும் அறியேன் ; எனக்கு இவற்றைத் தெரி விக்கக் கருதி அருள் கூர்ந்து, வெளியின் கண் காண நின்று இவற்றை வகை வகையாகப் பிரித்துச் சொல்லியருள்வாய்.

" அருந்துயர் தொடங்கு நோயும்
மருந்துமென நின்று வாழ்வை " — என்பது,

" வைப்பாம் மருந்தாம் அடியவரை வல்வினைத் துப்பாம் "

என்னும் திருவாய்மொழியின் கருத்தினை உட்கொண்டுளது.

தானதன தான தானன
தானதன தான தானன
தானதன தான தானன — தனதான

260. வேலைகளு நீடு பூமியும்
மாதிரமு மேலை வானமும்
மேருமுத லாக யாவையும் — அடைவாக
வீறுகுலை யாம லேதரு
சாதுரிய கார னாகிய
வேதமுனி யாயு ளாறெனும் — யுகம்யாவும்
மூலமுத லாக நீவரும்
ஓர்சிறு சுவாச மானது
மூதறிவி னாலு னாயுவை — அறிவார்யார்
மூலைகளின் மேவு தேவரும்
நீயுநிக ராக வேசொலு
மூடர்நர கூடு வீழ்வது — நெறியாமே
வாலிமக னேழு யோசனை
தாதையிரு கூறு யோசனை
மாருதிய நேக யோசனை — பலகோடி
வானரரும் வேறு யோசனை
போரினடு வேகி யேதிரள்
மாநிருதர் சாய மோதுமவ் — விரவூடே
ஆலமென லாய மோதரன்
வானின்மறை வாகி யேகிட
ஆனவெழு நாலு யோசனை — கடிதேகி
யானைதலை கால்கை தோளுடல்
வேறுபட வாளி யேவிய
ஆடவிள வீர னார்தொழு — பெருமாளே.

உரை:—அவ்விரவில் அரக்கர் சேனையினுள் வாலி மைந்தனாகிய அங்கதன் எழு யோசனையும், அவன் தந்தையாகிய சுக்கிரீவன் பதினான்கு யோசனையும், அனுமான் பல யோசனையும், மற்றைய வானரர்கள் வேறு வேறு யோசனையுமான தொலைவு சென்று போர்க்களத்தினுள் புகுந்து ..ட்டமாகிய பேருடல் கொண்ட அரக்கர் மடிந்து விழ அடித்த கோத்

தில், ஆலகால நஞ்சினை யொத்த மகோதரன் விண்ணில் ஓடி மறைய இருபத்தெட்டு யோசனை தூரம் விரைவில் நடந்து போய், ஆனைகளின் தலை, கால், துதிக்கை, தோல், உடல் ஆகியவை வேறுபட்டுத் துண்டாகு மாறு அம்புகளை விட்டு அறுத்த வலிமை மிக்க இளவீரனாகிய இலக்குவன் தொழ நின்ற பெருமாளே ; கடல்களும், நீண்ட உலகமும், திக்குகளும் மேலே நின்ற விண்ணும், மகாமேரு மலையும் பிறவும் பெருமை குறையா மல் முறையாக விருக்குமாறு உண்டாக்கும் திறமையுள்ள நான்முகனா ஆயுள் நூறு வருடமெனச் சொல்லப்படும். அதற்குக் கூடிய ஊழி எ கோடியே இருபது லட்சம் ; இவ்வூழிகள் அனைத்தினுக்கும் முற்பட்ட மூலகாரணமாக வுள்ள நீ விடும் ஒரு சிறு மூச்சுக் காற்றின் நேரமே இ ஆழிகளின் காலம் ; இங்ஙனம் நின் ஒரு மூச்சினுக்கு அத்துணை ஊழி ளாயின், இம் முதிர்ந்த அறிவினால் நின் ஆயுளை அறிவோர் யார் ? எவ மிலர். ஆதலால் சிறு தேவரையும் நின்னையும் ஒப்பாகக் கூறுபவர் நரகில் வீழ்வார்கள்.

தனன தான தத்த
தனன தான தத்த
தனன தான தத்த தனதான

261. கடலெ ழாது நிற்கை
பவன னேர்ந டத்தல்
கனலி காயி யற்கை கடையூழி
கனல்சு டாநி றுத்தல்
முகிலெ லாமி குத்த
கடுமை நேர்வி டுத்தல் இவையாவு
அடியி னீயொ ருத்தன்
நிலையி லேநி றுத்தி
அளவு கூறி யிட்ட திருவாணை
அல்து தானி தற்குள்
ஒருசொ ரூப மெத்தில்
அகில பூமி வட்ட மழியாதே
நெடும கோத ரத்தன்
இரவு போர்தொ டக்க
நிருதர் மேலு டற்று கவிவீர

நிமிட மாம தற்குள்
ஒருவர் போன திக்கு
நிருமி யாவி டத்தில் அனுமான்வந்
திடரெ லாம கற்ற
மனது தேறி மற்றை
இகலு வோர்து திக்து வரமேவார்
எவரு மாளு கைக்கொர்
கடவுள் வாளி விட்ட
இளவ லாத ரித்த பெருமாளே.

உரை:—நெடிய மகோதரன், இங்ஙனம் போரைச் செய்ய, அரக்கரோடு பெரும் வானர வீரர்கள், உள்ளக் கிளர்ச்சியோடு அடர்க்கும் அப் படைக்குள் ஒருவர் போன திசை ஒருவர்க்குத் தெரியாமலும் குறித்தறிவிப்பாரில்லாமலும் கலங்கிய அவ்விடத்தில், அனுமான், அவரவரிடத்தைச் சுட்டிக் கூறி அவர்களை ஒன்று சேர்க்கவும், அரக்கர் சேனை அழியவும் பாசுபதக் கணையை விட வேண்டுமென்றும் சொல்லி, ஒருவரும் அங்கில்லாமையால் வருந்திய இளைய பெருமாளின் வருத்த மெல்லாந் தீர்க்க, அதனால் உளந்தேறிய இலக்குவன், மற்றைய அரக்கர் படையோடு போர் செய்யும் வானரர்கள் போற்றி யென்று சொல்லிக் கொண்டு வர, பகைஞர் இறப்பதற்கு ஒப்பற்ற தெய்வீகமான பாசுபதக் கணையைச் செலுத்தி அரக்கர் படையை நீறாக்கினான். அத்தகையோன் ஆதரித்த பெருமாளே; கடல் பொங்கி யெழாமல் நிற்றலும், காற்றுக் கடுமையாக வீசாமல் செவ்வையாய் அடித்தலும், பகலவன் கொடுமையாகச் சுடாமல் அமைதியாகக் காயும் இயல்பும், ஊழித்தீ சுட்டெரித்து நிற்கும் இயல்பன்றி மிகுதியாகச் சுடாதிருக்கும் தன்மையும், முகில் கடுமையாகப் பொழியாமல் அளவிற் பொழிதலும், இவற்றிற்கு முதலில் நின்ற நீ யொருவன், ஒவ்வொன்றையும் ஒவ்வொரு நிலையில் நிறுத்தி அவற்றிற்கு இட்ட கட்டளையே யன்றிக் கடல், காற்று, கதிரவன், நெருப்பு, முகில் என்னும் இவ்வைந்தனுள் ஒன்றின் வடிவம் மிக்கு மோதுமாயினும் உலக வட்டம் முழுதும் அழியாதோ? அழியும்; உலகத்தில் சிறு பகுதியும் எஞ்சாது. ஆதலின், யாவும் நின் ஆணையின்படி நடக்கின்றன என்பது தெளிவு.

(சிதறிய குரங்குப் படைகள் வருவதற்காகப் பாசுபதக் கணையை விட வேண்டுமென்று அனுமான் இலக்குவனுக்குச் சொல்ல அவன் அவ்வாறே அப்படையை மந்திரத்தோடு தொடுத்து விட்டான். அப்போது மகோதரன் விண்ணில் மறைந்தான். வானர வீரர்கள் அனைவரும் இலக்குவனை வந்தடைந்தனர். இந் நிகழ்ச்சிகள் இப்பாட்டில் விளக்கமாகக் கூறப்படவில்லை.)

தானதன தந்த தானன
தானதன தந்த தானன
தானதன தந்த தானன தனதான

262. பானறுநெய் கண்டு சோருவை
பாறிருடி யுண்டு லாவுவை
பானுததி யின்கண் வாழ்குவை குறளாகிப்
பாரினையி ரந்து போதுவை
பாரினையி டந்து போடுவை
பார்முழுது முண்டு காலுவை ஒருகாலம்
ஆனையையி டந்து சாடுவை
ஆனையமி கிழ்ந்து பேணுவை
ஆருனது வஞ்ச மாயையை அறிவார்கள்
யானுனைவ ணங்கி னேனெனை
நீமுனிவை யன்பு கூருவை
யாதுசெயி னும்பொ றுமையென் வசமோதான்
வானிடைம றைந்த மோதரன்
மீளவொரு வஞ்ச மாயையின்
வாசவனு மந்த யானையும் இமையோரும்
மாறுபெற வந்து ளாரென
வீதியெதிர் நின்று போர்செய
மாயமிவை யென்றெ ணுமலுண் மிகநாடி
யானைகளை யுந்தொ டாதுநல்
வார்சிலைமெ யுங்கொ டாதுமுன்
ஆகுதுயர் வந்து லாவிட இளவீரன்
ஆரமர்ம றந்த போதெதிர்
போவனென வந்த மாருதி
ஆர்வமொடி றைஞ்சி யேதொழு பெருமாளே.

உரை :—முகிலிடை யொளித்த மகோதரன், மீண்டும் ஒரு வஞ்சமான மாயையால் இந்திரனும், அயிராவதமென்னும் அந்த வெள்ளானையும், இறையவரும் பகைத்துப் போர் செய்ய வந்துள்ளனரென்று கருதுமாறு விண் வீதியில் இலக்குவனுக் கெதிராக நின்று சண்டை செய்ய, இது மாயமென எண்ணாமல் அவன், இமையவர் நம்மோ டெதிர்க்குமாறு

நாம் என்ன குற்றம் செய்தோமென்று மிகவும் ஆராய்ந்து பார்த்து, சிறந்த அம்புகளையுந் தொடுக்காமல், மிக நீண்ட வில்லின் உடம்பையும் வளைக்காமல் தன் உளத்தில் வருத்தம் வந்தடைதலால், நிறைந்த போரினை மறந்திருந்த போதில், 'நான் எதிர்த்துப் போவே'னென வந்த அநுமான், அன்புடன் வணங்கித் தொழ நின்ற பெருமாளே ; நீ, பாலையும் நறுமண மிக்க நெய்யையும் கண்டு மயங்கிடுவாய் ; பாலைத் திருடிக் குடித்துத் திரிவாய் ; திருப்பாற்கடலில் திருக்கண் வளருவாய் ; வாமனனாகி உலகை யிரந்து அளந்து போவாய் ; உலகைப் பிடுங்கிப் போடுவாய் ; உலக முழுதையும் உண்டு உமிழ்வாய், யானையின் கொம்பைப் பிடுங்கி அடித்துக் கொல்லுவாய் : யானையை மகிழ்ந்து காப்பாய் ; இவ்வாறு ஒவ்வொரு காலத்தில் ஒவ்வொன்றை ஒவ்வொரு பொருளின்கண்ணும் செய்வாய் ; இங்ஙனம் செய்யும் நின் வஞ்ச மாயையை அறிவார் யார் ? எவருமிலர். இத்தகைய நின்னை நான் வணங்கினேன். நீ என்னைச் சினப்பாயோ ? அன்பு கொண்டு காப்பாயோ ? நீ என்ன செயினும் பொறுத்துக் கொள்ளாமல், அதனைத் தள்ளிவிடுவதற்கு என்வசமாமோ? அஃதில்லை யாதலின், நினது திருவுள்ளத்திற் கேற்றவாறு செய்வாயாக.

தனத்தனன தந்தனன தந்த
தனத்தனன தந்தனன தந்த
தனத்தனன தந்தனன தந்த தனதான

263. நெருக்கிவளர் கொங்கைகள்கு லுங்க
அறச்சிறும ருங்குலும லுங்க
நிலைக்கயல்ம ருண்டெதிர்பு ரண்டு குழைகால
நிலத்திடை யணங்கெனந டந்து
தலைக்கடையி னின்றுமன இன்கண்
நினைத்தபடி வந்தவர்கு யங்கள் அருகாகி
உருக்கிநகை கொண்டுதனி நெஞ்சு
கலக்கிமனை வந்துடன்மு யங்கி
உறைப்பனம ருந்துகொடு பந்தி அநியாயம்
உறப்பொருள்க வர்ந்துபிணி கழ்ந்து
துரத்துமவர் சிங்கியுள்ம யங்கி
உடுத்ததும றந்துனது தொண்டன் அயர்வேனோ
அரக்கர்பதி மைந்தன்மறை நின்று
விடுத்தபிர மன்படைவி ரைந்து
அடுத்ததுபு குந்துயிர டங்க நுகர்போதில்

அடைக்கலமு றுந்தலைவன் வந்து
நறைக்கனிகி ழங்குபல சிந்தி
அரற்றினன்வி ழுந்தெதிர்பு லம்பி — ரகுநா;

வரந்தினைய றிந்ததிலை யிந்த்ர
சயித்தினமர் கண்டுமெனை யந்த
வனத்திடைது ரந்தபிழை வந்த — தெனும்வே

மதித்தகவி யின்கடலொ டெந்தை
இலக்குவனெ ழுந்தெதிர் விளங்க
மருந்துமலை தந்தவன்வ ணங்கு — பெருமாளே

உரை:—இங்ஙனம் இலக்குவன் மயங்கி நின்ற போதில் அரக்க தலைவன் மகனாகிய இந்திரசித்து மறைந்துநின்று விட்ட பிரம்மாத்திர நெருங்கி வந்து, குரங்குப் படையினுள் புகுந்து அவற்றின் உயிர்களை யெல்லாம் குடித்துக் கொண்டிருந்த போது, அடைக்கலம் புகுந்த அரக்க கோனாகிய விபீடணன் வந்து, தான் கொணர்ந்த மணமுள்ள பழ கிழங்கு முதலியவற்றை எறிந்துவிட்டு அரற்றினான்; மீண்டும் இளை பெருமாள் மேல் விழுந்தும், உனக்கெதிரே அழுதும், 'இரகுகுலம் விள வந்த தலைவா, இந்திரசித்துப் பெற்ற வரம் உள்ளதென நீங்கள் அறிந் தில்லை; அவன் போர்த் திறத்தை முன்னரே கண்டிருந்தும், காய் கனி களுக்காக அக்காட்டில் என்னைத் துரத்தியதனால் இக் குற்றம் வந்தது' என்று சொல்லி யழும் வேளையில், சிறப்பித்து மதிக்கப்படும் குரங்கு படைக் கடலோடு எங்கள் தெய்வமாகிய இளைய பெருமாளும் எழுந்து நின் முன் விளங்குமாறு, மருந்து மலையைக் கொணர்ந்து உயிரளித்த அனுமன் னால் வணங்கப் பெற்ற பெருமாளே; ஒன்றை யொன்று நெருக்கி வளரு நகில்கள் குலுங்கவும், அவற்றின் கனத்தால் மிகச் சிறுத்த இடை துவள வும், போர் செய்வது போல் எதிர்த்து நின்ற இரண்டு சேல்களை யொத்த கண்கள் மயக்கி எதிரே சுழன்று காதணியோடு எதிர்த்துப் பாய்ந்து நடக் கவும், உலகத்தில் தெய்வப் பெண்போல நடந்து முதல் வாயிலாகிய தெரு வாயிற்படியில் நின்று, மனத்தில் நினைத்தபடியே தம்மிடம் வந்தவரை தம் நகில்கள் பட நெருக்கியும், அவர் தம் மனத்தை யுருக்கி இன்சொல் லால் நகைக்கச் செய்தும், ஒப்பற்ற துணிவுடைய மனத்தையும் கலங்கச் செய்தும், வீட்டினுள் அழைத்துச் சென்று உடம்போடு தழுவி, தங்கள் பால் விருப்பத்தை மிகுவிக்கும் மருந்தை யுட்கொள்ளக் கொடுத்தும், இவற்றை ஒன்றன்பின் னொருசெயலாகச் செய்து காமுகரை இங்கிதம் செய்யும் தீய நெறியில் அகப்படுத்தியும், அவர் பொருள்க ளெல்லாவற் றையும் கவர்ந்த பின்னர், பழித்துத் துரத்தும் பரத்தையர்களுடைய

பொய்க் கூத்தில் மயங்கி, அரையில் உடுத்த உடையையும் மறந்து நாண மற்று நின் அடிமையாகிய நான் இன்னும் நினைவு கெடுவேனோ? சொல்லுக.

தனதனன தான தான
தனதனன தான தான
தனதனன தான தான தனதான

264. நமனையறி யாத ஆவி
பிணியையறி யாத வாகம்
நவையையறி யாத வாய்மை அயலோர்கண்

நகுதலறி யாத ரூபம்
மிடியையறி யாத வாழ்வு
நடையையறி யாத கால்கள் இடுவார்தம்

சுமுகமறி யாத பார்வை
இரவையறி யாத பாணி
துயரையறி யாவி சாரம் வினையாறும்

தொடரவறி யாத ஞானம்
முழுதுமுடை யார்க ளாவர்
துளவுகமழ் பாத நாடும் அடியாரே

இமையகிரி யேம கூடம்
இமயமலை மேரு நீலம்
எழில்வரையெ லாமு லாச மொடுதாவி

இறைபெறினும் ரூப மாக
நுழைபடைக ளோடு வாகம்
இறினுமது கூட வேகும் உயிர்யாவும்

அமையவுறும் நாலு கோல
அவிழுதமு மேவி வாழும்
அணிவரையை வேரி னோடு பறியாநின்(று)

அவனிமிசை தாவி வீரர்
உயிருதவு தூத ஞவி
அயனளவு வாழ வோதும் பெருமாளே.

உரை :—விபீடணன் புலம்பி எழுந்து அநுமானைத் தேடிக் கண்ட பின் அவ் விருவரும் சாம்பவனைக் காண, அவன் சொன்னவாறே, இமய

மலை, ஏமகூடமலை, இடபமலை, மகாமேருமலை, நீலமலை முதலிய அழகிய மலைகளையெல்லாம் மகிழ்ச்சியோடு அனுமான் தாவி அம்புகள் தைத்துச் சிறிதளவு உண்டான புண்களை யாற்றும் சல்லிய கரணியும், உடம்பில் அம்புகளால் அறுபட்டுத் துண்டான உறுப்புக்களைப் பழையபடியே பொருத்தி உருவமாக்கும் சந்தானகரணியும், அவ்வுடலிலுள்ள புண்ணையும் தழும்பையும் ஆற்றி நல்லுடலாக்கும் சவுரளக்கரணியும், அதன் பின் அவ்வுடலுக்கு உயிரைத் தரும் அமுத சஞ்சீவியும் ஆகிய நான்கு வகை மருந்துகளும் சேர்ந்து வாழும் அழகிய மருத்து மலையை வேருடன் பறித்து எடுத்து நின்று விண்ணில் தாவி மீண்டும் போர்க்களத்துக்கு வந்து இறந்து கிடக்கும் வீரர்கட்கு உயிரைத்தந்த தூதனாகிய அவனது உயிர் நான்முகன் உள்ளளவும் அழியாமல் இன்பத்தோடிருக்க வரம் அருளிய பெருமாளே: எமனை யறியாத உயிரும், நோயை யறியாத உடலும், குற்றத்தை யறியாத சொற்களும், அயலவர் பழித்து நகைக்கப்படாத வடிவமும், வறுமையை யறியாத செல்வமும், இரத்தற்கு நடத்தலை யறியாத கால்களும், ஈவோர் தம் நன்முகத்தை யறியாத கண்களும், இரத்தலைச் செய்வதை யறியாத கைகளும், துன்பத்தை யறியாத ஆராய்ச்சியும், உட்பகைகள் ஆறினையும் அறியாத மெய்யறிவும் ஆகிய நலன்களை முற்றுமுடையவர் எனப்படுவோர் திருத்துழாய் மணக்கும் நின் திருவடிகளை உள்ளத்தில் என்றும் நினைத்துப் பரவும் அடியார்களே யாவர்.

தான தந்த தத்த தத்த
தான தந்த தத்த தத்த
தான தந்த தத்த தத்த — தனதான

265. பூம னென்றொ ருத்தன் மிக்க
காம னென்றொ ருத்தன் மற்ற
பூம னந்த னிற்ப டைத்த — சிறியோர்கள்
பூத லந்த னைப்ப டைப்பர்
மாதர் சிங்கி யிற்பி ணிப்பர்
போக வெம்பி றப்பி றப்பு — விடுமோதான்
நீம கிழ்ந்து பெற்ற புத்ரர்
வாரு மென்ற ழைத்தென் மட்டும்
நீதி யன்றெ னப்பி ரித்துன் — அடியார்தம்
நேரில் பந்தி யிற்பு குத்தி
வான கங்கை யுற்ப வித்த
நீள்பெ ரும்ப தத்தில் வைப்ப — தொருநாளே

ஆம ருந்து நிற்கும் வெற்பை
வானெ ழுந்து நிற்றல் பற்றும்
ஆதி யந்த லத்தி ருத்தி உடன்மீளா
ஆய ணங்கு ணர்ச்சி துற்றும்
மோக ரம்பை சுற்றி நிற்க
ஆடல் கண்டி ருக்கு மூக்ர அசுரேசன்

வாம முந்து டிக்க வெட்டு
யானை யும்ப தைக்க மிக்க
மாதி ரம்பி ளக்க வெற்றி இமையோர்பூ
மாரி சிந்த நற்கை கொட்டி
ஆடி நின்று கொக்க ரித்த
வான ரங்க ளைப்ப டைத்த பெருமாளே.

உரை :—இங்ஙனம், குரங்குப் படைகட்கு உயிருண்டாக்கிய சல்லிய கரணி, சந்தானகரணி, சவுர்ணகரணி, அமுத சஞ்சீவி யென்னும் நான்கு வகையான மருந்துகளும் நிலைத்திருக்கும் மலையை எடுத்துக் கொண்டு விண்ணிலெழுந்து மறப்பில்லாத அனுமான் பின்னும் சென்று அதனை முன் அஃதிருந்த விடத்தில் இருத்தி உடனே திரும்பி வர, அங்கே அரக்கர்கள் அறிவிழந்து போகுமாறு மையலைத் தரும் தெய்வப் பெண்கள் சுற்றி நிற்க, நடனத்தைப் பார்த்துக் கொண்டிருக்கும் சினமிக்க இராவணன் இடத்தோள் துடிக்கவும், (பிராட்டியின் இடத்தோள் துடிக்கவும் மண்டோதரிக்கு வலத்தோள் துடிக்கவும்) எட்டுத் திக்குகளிலுமுள்ள யானைகள் பதைக்கவும், மிக்க எட்டுத் திக்குகளும் பிளக்கவும், வெற்றி யென்று புகழ்ந்து இமையோர் பூமாரி பொழியவும், நல்ல கைகளைக் கொட்டி யாடி நின்று ஆரவாரஞ் செய்த வானரங்களைப் படைத் துணையாகப் பெற்றுள்ள பெருமாளே ; நான்முகனென் றொருவனும், மன்மதனென் றொருவனும் ஆகிய இருவரும் நின் உந்தித் தாமரையிலும் உள்ளத்திலும் பிறந்த பிள்ளைகள் ; அவர்களுள் ஒருவர் உலகைப் படைப்பர் ; ஒருவர் பெண்களின் பாசத்தில் கட்டுவர் ; இத்தகைய போகமுள்ள பிறப்பும் இறப்பும் என்னை விட்டுவிடுமோ ? இங்ஙனம், இவற்றைச் செய்தற்காக நீ மகிழ்ந்து பெற்ற அம் மக்கள், நான்மட்டும் பிறந்திறத்தல் நீதியன்றென நினைத்து, என்னை வாவென்றழைத்து, என் பிறப்புக்களை வேறுபடுத்திப் பிரித்து, நின் அடியார்களின் ஒப்பற்ற கூட்டத்துள் என்னைச் சேர்த்து, வான்நதி தோன்றிய நீளமும் பெருமையுமுள்ள பரமபாதத்தில் வைப்பது என்றேனும் ஒரு நாளில் உண்டாகுமோ ? இன்றே அஃது ஆகாதோ ? சொல்லுக.

தானத் தானன தானன
தானத் தானன தானன
தானத் தானன தானன தனதான

266. தாயத் தார்பெற வோவநி
யாயத் தார்பெற வோகொலை
சாதித் தார்பெற வோநெடு நிலமீதே
தாழத் தானுற வோபொருள்
சேமிப் பார்களு லோபிகள்
தானத் தூடுமி டார்குள மதுகாணூர்
கோயிற் கேயுத வார்விடு
பாழைக் கூறியெ ளுவது
கோதற் றேதமிழ் பாடிய பரகாலன்
கோடிப் பாகிய மாமதின்
வாயிற் கோபுர நீழயில்
கோலக் கோயிலுள் யாவையும் அறியாரோ
மாயத் தாலொரு சீதையை
மேலைக் கோபுர வாயிலின்
மாளத் தூதன்மு னேதலை யறவீசி
வாழிக் கோசல மீதுள
பேரைப் போயடு வேனென
வானுற் றேவட பாலெழ அனுமானும்
நேயத் தாலழு தேசொல
ஓடித் தாணெரு வீடணன்
நீலச் சோலையின் மாதையும் கனவேள்வி
நேர்தப் பாமையும் வீறொடு
காணுற் றேதெளி யாவரு
நீதிக் கேள்வியி னுன்மகிழ் பெருமாளே.

உரை :—அனுமான் மருத்து மலையைப் பழைய இடத்தில் வைத்துத் திரும்பி வருங்கால், இந்திரசித்து மாயத்தினல் ஒரு சீதையை யுண்டாக்கி, அவள் தலை மயிரைப் பிடித்து மேலைக் கோபுர வாயிலில், சீதைபால் பற்று மிகக் கொண்டுள்ள தூதனுகிய அவ் அனுமான் முன்னர், வாளால் அச் சீதையின் தலை யற்று விழுமாறு வீசி, 'வெற்றி பொருந்திய கோசல நாட்

டிஹுள்ள அயோத்தியில் உள்ளோரை நான் போய்ச் சொல்லுவே'னென்று சொல்லி, வடதிசை நோக்கி விண்ணில் எழுந்து போக, அது கண்ட அனுமான் அன்பினுல் அழுதுவந்து நின்பாற் கூற, அப்போதே ஒப்பற்ற விபீடணன் இலங்கையினுள் ஓடிச் சென்று, இருண்டு கறுத்த சோலையினுள் பிராட்டி யிருத்தலையும், இந்திரசித்தன் வேள்வியின் செவ்வை தவருது நடத்தலையும் அந்தச் சோலையில் தங்கி நன்கறிந்து வந்து சொன்ன நீதியுள்ள கேள்வியினுல் மகிழ்ச்சியடைந்தனை பெருமாளே ; தங்கள் குடியிற் பிறந்த தாயத்தார் கைக் கொள்ளவோ, நீதியில்லாதவர் கைக் கொள்ளவோ, கொலை செய்வோர் எடுத்துக் கொள்ளவோ, நெடிய மண்ணில் தாழ விருக்குமாறு செல்வத்தைப் புதைப்பார்கள் மூடர்கள் ; இத்தகைய உலோபிகள் அதனைத் தானம் செய்யத்தக்க விடங்களிலும் ஈயார்கள் ; குளம் தொட்டு நீரைக் காணச் செய்யார்கள் ; நின் கோயில் திருப்பணிக்கும் கொடார்கள் ; இவ்வாறு செய்யாது பயனின்றி விடப்படும் பாழான இவர் செயலைக் கூறியென் ஆவது ? குற்றமற்ற தமிழ் பாடிய பரகாலரென்னும் திருமங்கையாழ்வார் பிரபந்தத்தை யோதிச் சந்தமுண்டாக்கிய பெரிய மதிலிலுள்ள வாயிலையுடைய கோபுரத்தினுள் நீ திருக்கண் வளர்ந்தருளிய திருவடியின் அழகு பொலிந்துள்ள திருவரங்கமென்னும் திருக்கோயிலிலுள்ள எல்லாச் சிறப்புக்களையும் அறியமாட்டாதார், தானம் செய்யாமலும், குளம் வெட்டாமலும், கோயில் கட்டாமலும் தாயத்தார் முதலியோர் கொண்டு போகச் செல்வத்தை மண்ணில் புதைத்து வைப்பவர். இவர் தம் பாழ் நிலையைக் கூறி ஆவது ஒன்றுமில்லை ; என்பது கருத்து.

தனந்த தனன தனன
தனந்த தனன தனன
தனந்த தனன தனன தனதான

267. வரங்க ளுதவு மினது
பதங்கள் முதன்மை புகலின்
மரங்க ளுருகு மலைகள் முதல்யாவும்

மயங்கி யுருகு மிருபுள்
இனங்க ளுருகும் மிருகமுப்
வணங்கி யுருகு மரவு புழுவாகும்

தரங்க ளுருகு முடிவில்
இரும்பு முருகு மினிய
தலங்க ளுருகு முழுதும் இவைபோலே

சமைந்த வெருளி விரகொ
டிடும்பு நெடிய கவலை
தணிந்தென் மனமு முருகி நெகிழாதோ

உரங்கொள் பொருவில் கவசம்
வழங்கி விடையு மருளி
உவந்த பிறகு நெடிது கடிதேகி

உறைந்த வடமு மொடிய
நிகும்ப லையும வனலும்
உயர்ந்த மகமு மழிய நிருதேசர்

அரைந்து மடிய வருணை
விரிஞ்சர் விடையர் படையும்
அழிந்து வெருவி யுதவி அறவோடி

அலைந்து நிருத குமரன்
இலங்கை புகுத முடுகும்
அலங்க விளவல் பரவு பெருமாளே.

உரை :—விபீடணன் சொல்லியதைக் கேட்ட நீ, இலக்குவனது மார்பு கொள்ளுமாறு ஒப்பற்ற கவசத்தை அவனுக்குக் கொடுத்து விடையளித் தருளி மகிழ்ந்த பின், இலக்குவன் நீண்ட தொலைவு விரைந்து சென்று இந்திரசித்து வேள்வி செய்திருந்த ஆலமரமும் வேள்விக் கம்பமும் ஒடிய வும், நிகும்பலையாகிய காளி கோயிலும், அங்கு வளர்க்கப்படும் வேள்விக் கனலும் உயர்ந்த வேள்வியும் அழியவும், அரக்கர் படைத் தலைவர்கள் அரைபட்டு இறக்கவும், அவனோடு பலவகைப் போர்கள் செய்து, அவன் விட்ட கதிரோன் கணை, பிரமன் கணை, விடையேறும் பெருமான் கணை யான பாசுபதம் ஆகியவை அழிய, அவனுக்குத் துணையாக வந்த நால் வகைப் படைகளும் படைக்கலங்களும் அற்றுப் போனதால் அவன் அஞ்சி அலைந்து ஓடி இலங்கைக்குள்ளே புகுமாறு துரத்தித் தும்பை மாலை சூடி னன் ; அவ் விளைய பெருமாள் பூசை செய்யும் பெருமாளே ; வரங்களைத் தரும் நின் திருவடிகளின் தத்துவங்களின் பெருமையைச் சொல்லிப் பாடி னல் மரங்கள் உருகும் ; மலை முதலிய வெல்லாம் மயங்கி உருகும் ; மிக்க பறவைக் கூட்டங்களும் உருகும் ; கொடிய விலங்குகளும் வணங்கி யுருகி நிற்கும் ; பாம்புகளும் புழுக்களும் உருகும் ; முடிவில் நெருப்பாலு முரு காத இரும்பும் உருகும் ; எல்லா உயிர்கட்கும் நிலைக்களமும், இன்பமும், அவற்றிற்குரிய பொருள்களும் தரத்தக்க உலகத்தின் இடங்களும் உருகும்; இவற்றைப் போல், எனக்கென்றே பொருந்தியுள்ள சினம், சூழ்ச்சி,

கருக்கு, நீண்ட மனக் கவலை ஆகியவை ஒடுங்கி என் நெஞ்சம் இளகி உருகாதோ ? சொல்லுக.

தந்தன தானதன
தந்தன தானதன
தந்தன தானதன தனதான

268. குங்கும மேவியகில்
மென்பனி நீர்புழுகு
கொண்டுகு வாவிவளர் கிரிபோலும்
கொங்கையி லேகொடிய
செங்கையி லேகரிய
கொண்டையி லேகடிய சுழியூடே
மங்கைந லார்களிடு
சிங்கியி லேவதன
வந்தியி லேயடிமை யாகாமல்
வண்டுள வார்சரண
பங்கய மேகருதி
மங்கல மாயுதவி பெறுவேனோ
அங்கொரு தாதையடி
பண்புட னேபரவி
அம்புய மாதைவிடு அவனேவும்
அம்பினை நானறிவ
னென்றிடு போதுபொர
அஞ்சினை யோசிறுவ எனவேகி
எங்கணு மேநிறைய
வந்தொரு தேரின்மிசை
இந்திர ஞர்பகைஞன் அமராட
இங்கெதிர் காலமெனை
வந்தெதி ரேமுடுகும்
எம்பெரு மானுடைய பெருமானே.

உரை :—இலங்கைக்கு ஓடிய இந்திரசித்து, அங்கு ஒப்பற்ற தந்தையின் காலில் விழுந்து நன்முறையில் அடக்கமாகிய குணத்தோடு வணங்கிப்

புகழ்ந்து "தாமரை மலரில் வாழும் திருமகளாகிய சீதாபிராட்டியைச் சிறையினின்றும் விடுக; அம் மானிடன் எவும் அம்பினை நான் அறிவேன்", என்று சொல்லும் போது, இராவணன் "மகனே, நீ போர் செய்ய அஞ்சி ஞயோ?" என்று சினந்து கூறியதும் இந்திரசித்து மீண்டும் மேலைக் கோட்டை வாயிலுக்குப் போய், எங்கும் நிறைந்து பெரிதான ஒப்பற்ற தேரின்மேல் எறிவந்து இந்திரனுக்குப் பகைஞனாகிய அவன் போர்புரிய, இவ்விடமே எதிர்க்கத்தக்க காலமென்று கருதி அவனுக்கு முன்னே முடுகிச் சென்ற எங்கள் தலைவரான இளைய பெருமாளைத் தம்பியாகப் பெற்ற பெருமாளே; சிவந்த சந்தனக் குழம்பைப் பூசி, அகிற்புகை காட்டி, மெல்லிய பனி நீரைத் தெளித்து, புழுகு தடவியுள்ளதனால் நன்மணங் கமழுவனவாய் ஒன்றோடொன்று குலாவி வளரும் இரு மலைகள் போன்று அழகிய நகில்களிலும், வளைத்துத் தழுவிய சிவந்த கைகளிலும், கரிய கொண்டையிலும் கொடிய அல்குல் சுழியிலும், இளமங்கையருடைய கலவியிலும், முகத்திலுண்டாகும் கலவிக் குறிப்பிலும் உன் அடிமையாகிய நான் அழியாமல், வளப்பம் மிக்க திருத்துழாய் சூடியுள்ள நின் திருவடித் தாமரைகளையே என்றும் நினைத்து மங்களமாக நீ கொடுத்தருளுகின்ற பரமபதத்தைப் பெறுவேனோ? இன்னும் அப்பெண்களால் அழிவேனோ? சொல்லுக.

தானனா தத்தனத் தனதனந் தனதனன
தானனா தத்தனத் தனதனந் தனதனன
தானனா தத்தனத் தனதனந் தனதனன தனதான

269. வாணிலா நித்திலப் ரபையொழுங் கியகிரண
தாமமே கட்டறப் புளகருங் குமமுலைகள்
மார்பழுழ் கிக்குளித் திடநகம் புதையவிது வதுபோல

வாகுமூ லத்தினிற் பொலியவங் கிதமிடறு
காடையோ டெட்டெனக் குமுகுமுங் குமுகுமென
மாலையோ திச்செருக் கவிழவெங் கலகவிழி குழைதாவக்

கோணிலா வட்டமெத் தையிலிரண் டுடலுமவ
ணேகமா கித்தளைத் தழுதுசிந் தியகுமுத
கோவையூ றற்செருக் கினிலழுந் தியவவச அனுபோகக்

கோலகா லத்திறத் தினமடந் தையருறவின்
நாளுமே சிக்கியிப் படியழுந் துமெனதிருள் [தோ
கோதில்ஞா னப்ரபைச் சுடரெழுந் துதயமுற விடியா

காரெணு விதகப் பரிவிடுந் தனிவலவ
னோடுதேர் கட்டழித் தடல்பொருந் தியநிருதர்
கால்கள்தோள் மெய்கழுத் தொடுசிரந் துணியமுதிர் [கணையேவிக்

காவடா வித்தனிப் பகழியென் றெதிர்முடுகி
ராவணி விட்டொளித் தகனும்வஞ் சனையைவிடு
காதகா மற்றுனக் கிறுதியென் றிளவலொரு கரம்வீழப் [மீளாப்

பாணமே விட்டறுத் துடல்பிளந் துயிரைவரு
காலதூ தர்க்களித் தனுமனென் பவனுடைய
பாரமே ருப்பொருப் பனையதிண் புயமிசையில் உடன்

பாகசா தப்பெயர்க் குரிசில்கண் டுளமகிழ
மேகநா தப்பெயர்க் கொடியவன் கடியதலை
பாதகா ணிக்கையிட் டிளையவன் பரவமகிழ் பெருமாளே.

உரை :—இந்திரசித்தன் தேரிற் கட்டியுள்ள—பாயும் கதியினைக் கண்ணால் காண முடியாத திறமையுள்ள குதிரைகளைக் கயிற்றைத் தளரவிட்டு நடத்தும் ஒப்பற்ற பாகனோடு தேரையும் கட்டோடழித்து, வலிமை மிக்க அரக்கர் தம் கால்கள், தோள்கள், உடம்புகள், கழுத்துகள், தலைகள் ஆகியவை துண்டாகி அறுபட முதிர்ந்த ஆற்றல் படைத்த அம்புகளை யேவி, "இந்த ஒப்பற்ற அம்பு உன்மேல் படாதவாறு காத்துக்கொள்" என்று சொல்லி இந்திரசித்தன் எதிரே முடுகி நின்று, 'அடா, நீ இந்தப் போரினைக் கைவிட்டு ஒளித்துப் பொரும் வஞ்சனையை இனி விட்டுவிட்டுப் பொருது வாய்; உனக்கு அழிவு உறுதி' என்று இலக்குவன் சொல்லி அவனுடைய இடக்கையை அம்பினால் அறுத்து வீழ்த்தி, உடலைப் பிளந்து அவன் உயிரைத் தேடிவரும் எமதூதர்க்களித்து, அனுமானென்னும் பெயருடையவன் பருத்த மேருமலை போன்ற உறுதியான தோளின்மேல் அவ் விறந்தவன் தலையைத் தாங்கிவரச் செய்து, இந்திரன் என்னும் பெயருடைய தேவர் தலைவன் வந்து கண்டு உளமகிழ்ந்து புகழ, மேகநாதனென்னும் இந்திரசித்தனுடைய கொடிய தலையை நின் திருவடிக் காணிக்கையாக வைத்து வணங்க அவ்விளவலை வாழ்த்தி மகிழ்ந்தனை பெருமாளே; ஒளி மிக்க இங்களையொத்த ஒளி வரிசை வரிசையாகப் பாய்ந்து ஒழுங்காக விளங்கும் தன்மையில் மேற்பட்டு நிற்கும் முத்து மாலைகள் கட்டறுந்து சிதறவும், பருத்துச் செஞ்சாந்து பூசப்பெற்ற நகில்கள் என் மார்பில் முழுகிப் புதையவும், நகம் புதைய அது புதைந்த பள்ளம் முதற் பிறைபோல் தோன் மூலத்திற் பொலிவு பெறவும்,

*குறிப்புடன் கழுத்துக்குள் காடை, புறா, மயில், கோழி, அன்றில், அன்னம், வண்டு, கிளி என்னும் எட்டுப் பறவைகள் போலக் குமுகுமு குமுகு மென்று ஒலியுண்டாக்கவும், பூ மாலை முடித்த கொண்டைச் சொருகு அவிழவும், கொடிய கலகத்தை விளைவிக்கும் கண்கள் காதணியைக் கடக்கவும், கோணுதலின்றி வட்டமாயுள்ள மெத்தையிலே ஆண் பெண் என்னும் இருவருடலும் ஒன்றுபட்டழுந்தவும், செவ்வல்லி மலரையும் கொவ்வைப் பழத்தையும் நிகர்த்ததும் அமுத மொழுகுவதுமான இதழில் ஊறிய ஊறலைக் குடித்தும், அச்செருக்கினில் அழுந்தித் தம்வயமற்றுப் பரவசமான இன்பக் கலவி செய்யும் அழகிய செயற் திறமுடைய இனிய பெண்களின் உறவில் எந்நாளும் அகப்பட்டு அழியும் என் அறியாமையாகிய இருள், களங்கமற்ற ஞானமாகிய கதிரவன் தோன்றுதலால் விடிந்து பகலாகாதோ?*

*(தோள் மூலமாவது கடகம்).*

தந்தா தானன தனதன
தந்தா தானன தனதன
தந்தா தானன தனதன தனதான

270. *என்போ தாவிரு வினைவழி*
*முன்போய் வீவதும் வருவதும்*
*என்றே வேதனை படுவது முயிர்போவ*

*தின்றோ நாழிகை யொருகலை*
*சென்றோ நாளையு மலதினி*
*என்றோ நானறி குவதிலை அதுவானல்*

*பொன்போல் மேனியொ டெதிர்வர*
*இன்றே கூறினன் விழுமுடல்*
*புண்போ லேபடும் வசமறும் மயர்வாகும்*

*பொன்றா நீடிய புலன்வகை*
*நின்றே பேதுறும் வழுவுறும்*
*புன்சீ ராகிய மொழிகளும் உதவாதே*

*வன்போ ராடிய வொருதனி*
*நம்பீ போயினை யெதுகுறை*
*மைந்தா வாவென துயிர்பொரு மகனேயோ*

வந்தே னுனினி யிமையவர்
உய்ந்தா ரோமொழி தனிசிலே
வன்பே றேயென மயன்மக ளுடனேவந்(து)

பூன்போ டேமக னுடலது
கண்டே நீடிய களமிசை
அந்தார் மார்பொடு தழுவினன் நகர்மேவி

அங்கே ராவண னழுதெழ
இங்கே வீடணர் தமையும
தன்றோ வீரிய மென்றருள் பெருமாளே.

ரை :—இந்திரசித்து இறந்த செய்தியைத் தூதுவர் சொல்லக் இராவணன் மண்டோதரியுடன் போர்க்களத்திற்கு வந்து மகனுட டிக் கொண்டு, "திறமையோடு போர்புரிந்த ஒப்பற்ற சிறந்த நம்பி, விட்டுப் பிரிந்து போனாய்; நான் உனக்குச் செய்த குறை என்ன? னா! என் உயிர் போன்ற மகனே, நான் உன்னைப் பிரிந்து தனித் பனோ? நானும் இதோ வந்தேன்; உன் அச்சம் தீர்ந்தமையால் னோர் பிழைத்தனரோ? சொல்வாய்; எவர்க்குங் கிடைக்காத வலிய சிலையையுடைய வலிமை மிக்க ஏறு போன்றவனே;" அரற்றி யழுது, மயன் மகளாகிய மண்டோதரியுடன், நீண்ட களத்தில் அழகிய மாலைதரித்த மார்போடணைத் தெடுத்துக் இலக்கைக்குச் சென்று, அவ்வுடலை எண்ணெய்க் குடத்திலிட்டு அங்கு அவனழ, இங்கே வீடணனையும் புகழ்ந்து, அதுவன்றோ மத்திறம், என்று கூறியருளிய பெருமாளே; என்னோடு என்றுங் ந்துவரும் நல்வினை தீவினையாகிய இரண்டின் வழியில் முன் இறத்தலும் மீண்டும் பிறத்தலும், இவையே தொழிலெனக் ஓயாமல் துன்பப்படுகிறதும் ஆகிய என்னுயிர் நீங்குவது ? ஒரு நாழிகைக்குள்ளோ? ஒரு நிமிடத்துக்குள்ளோ? இவை பின்னரோ? நாளையோ? அன்றி என்றோ? இதனை நான் அறிய து; அப்படி உயிர் நீங்கும்போது பொன் போன்ற உருவோடு நீ ண்டு மென்று இப்போதே சொன்னேன்; (எமதூதர் என்னைக் போகையில் நீ எதிர்வந்து விடுவிப்பாயென்று இன்றே சொன் என்றும் ஆம்.) இப்போதே சொல்வானேன்? அப்போதே சொல்ல தா வெனின், உயிர் நீங்கும் காலம் அறியக்கூடாமையானும், உடல் து புண்போல் நொந்து வருந்துவதனால் உயிர் தன் வசமற்று எம பசமாகையானும், மறப்பு உண்மையானும், அழியாமல் நீண்டுள்ள ர்களும் கலங்கி மயங்குகையானும், உடற்கட்டு நழுவிவிடுதலானும்,

உண்மையான சிறப்பினையுடைய சொற்களும் பயன்படாமையானும் எவ்வகையிலும் கூற வியலாதாகையால் இப்போதே சொன்னேன்.

தானன தத்தன தான
தானன தத்தன தான
தானன தத்தன தான தனதான

71. பூமிய ளித்தவ டேவி
பூமியு மற்றொரு தேவி
போகந லத்தினின் மூழ்கல் முறையாமே
போதனு னக்கொரு சூனு
வாயவ னுக்குவெண் ணீறு
பூசிய நக்கர்கு மாரர் அவர்தாமுன்
தோமறு மைத்துன ராவர்
நீமுறை கட்டிய வாறு
சூழ்புவி யிற்சொலொ ணாது பெரியோர்கள்
சோர்வுப டைத்தன ராகில்
யாவர்ந கைப்பவர் யாவர்
தூடணை செப்பவ லார்கள் உரையாடாய்
மாமக னுக்கழு போதில்
மூலப லப்படை மேவ
மானிட ரைப்பொரு வீர்கள் எனவேவி
வானர ரைப்பொரு போது
வீடண னெத்துரை யாட
மார்பு குறித்தொரு வேலை விடவேலோடும்
ஆமுனி லக்குவ னோடி
மார்புகொ டுத்துடன் வீழ
ஆடல ரக்கனு மேக மலைதாரா
ஆனம ருத்துவர் போல
ஓடியெ ழுப்பனு மானை
ஆளுடை வித்தக தேவர் பெருமாளே.

(பி - ம்) னேதம ராட.

உரை :—மூத்த மகனாகிய இந்திரசித்துக்காக இராவணன் அழும் போது, மூலபல சேனை வந்து சேர அவன் "அம் மனிதரோடு போர்புரிவீர்" என்று அவர்களை அனுப்பி, தான் வந்து, தொலைவில் நிற்கும் குரங்குகளோடு சண்டை செய்யும் போது, விபீடணன் வந்து, பொருந்தி நின்று அவனிடம் சில சொற்களைச் சொல்ல, "இவனாலே நமக்கித்தனை கேடுகளும் வந்தன; இனி நாம் இவனைக் கொல்ல வேண்டும்" என்று கருதி அவ் விபீடணன் மார்பிற் குறி வைத்து ஒப்பற்ற வேற்படை ஒன்றை விட, அடைக்கலம் புகுந்தோனைக் காட்டிக் கொடுத்த லாகாதென, அவ் வேலின் முன் இலக்குவன் ஓடித் தன் மார்பைக் கொடுத்து உடனே கீழே விழ, இராவணன் இலங்கைக்குப் போக, மருத்து மலையை எடுத்து வந்து அசுவனி தேவர்களாகிய விண்ணவர் மருத்துவர் போல ஓடிவந்து உயிர் கொடுத்து இளைய பெருமானை எழுப்பிய அனுமானை அடிமையாகவுடைய திறமையுள்ளவனே, விண்ணவர் தம் பெருமாளே; நிலமா மகளாகிய நின் சிறிய பிராட்டியார் பெற்ற சீதா பிராட்டியார் நினக்கு ஒரு மனைவி; அந்நில மகளும் மனைவி; இவ்விருவர் தம் இன்பத்திலும் மூழ்குதல் நினக்கு முறையாகுமா? அன்றியும், பிரமன் நினக்கொரு மகன்; அந் நான்முகன் மகன் வெண்ணீறு பூசிய ஆடையில்லாத சிவபெருமான்; அவன் நின் மைத்துனன்; மகளை மனைவியாகவும் பேரனை மைத்துனனாகவும் கொண்டு நீ முறை கட்டிய வழியைக் கடல் சூழ்ந்த உலகிற் சொல்லலாகாது; ஏனெனில், பெரியோர் குற்றம் செய்வார்களாயின் யார் எள்ளி நகைப்பர்? அதனை எனக்குச் சொல்லுக.

தந்தன தான தந்தன தந்தன
தந்தன தான தந்தன தந்தன
தந்தன தான தந்தன தந்தன தனதான

272. கொங்கைகள் வீறு மந்தர மந்தரம்
வஞ்சக பார்வை மென்கயல் மென்கயல்
கொந்தள பார மஞ்சுகள் மஞ்சுகள் உரையாடிக்

கொஞ்சிய தோக ரும்புக ரும்பவர்
செங்கனி வாய்ம ருந்தும ருந்துயிர்
கொண்டபு ரூரு வெஞ்சிலை வெஞ்சிலை மலராயும்

செங்கைகள் காணு முண்டகம் முண்டகம்
அங்கிடை யோவெ றும்பொய்வெ றும்பொய்கள்
செழுந் துடை யோவ ரம்பைய ரம்பையிம் மடவார்வேள்

சிங்கிக ளேய றிந்தத றிந்தது
பின்செல வேணு மென்றும யங்குறு
சிந்தையு மோக முந்தெளி யும்படி அருள்வாடே

வெங்கர மாயி ரஞ்சிர பந்திகள்
அஞ்சிறு நூறு கொண்டவெ ளம்படை
மின்பிடி வீசு பின்பிடி தண்டொரு கணையாடே
வெம்புவி சாடு குந்தமெ றிந்திடு
துன்றிடு வேழ முந்தவ ளைந்துகொள்
விண்பட மூடு நுங்கென வன்களம் உறுபோரிலெ

இங்குமி ராம னிங்கும வன்சரம்
அங்குமி ராம னங்கும வன்சரம்
எங்குமி ராம னெங்கும வன்சரம் எனவேசெல
றெண்படு சாப கிண்கிணி துன்றிட
அங்கொரு யாம நின்றுகி ணின்கிணி
னென்றிட மோதி வென்றுதி ரும்பிய பெருமாளே

உரை :—கொடுமையான ஆயிரங் கைகளும், வரிசையாக நின், பல தலைகளும் கொண்டு உலகங் கொள்ளும் ஆயிர வெள்ளஞ் சேனை களும் ஒளி மிக்க படைகளை வீசுகின்ற பின்னுற் பிடித்த வில்லுடனே தொடுத்த அம்பினுல் வெப்பம் மிக்க உலகத்தை அழிக்கும் வேற்படையை எறியும் நெருங்கிய ஆனைகள் முன்னே வளைத்துக் கொள்ள, ஆகாயந் தெரி யாமல் மூடப்பட்டு விழுங்கியுளது என்று சொல்ல வன்மையான போர்க் களத்தில் உண்டாகிய மூலபலப் படைகளின் போரில் 'இங்கு இராமன் இங்கும் அவன் அம்பு ; அங்கும் இராமன் ; அங்கும் அவன் அம்பு; எங்கும் இராமன் ; எங்கும் அவன் அம்பு' என்று சொல்லுமாறு இடம் வலமாகத் திரிந்து மூவுலகிலும் எண்ணத்தக்க நின் வில்லிற் கட்டிய சிறு மணி இசை யுண்டாக்கி அப்போரில் ஒரு சாமம் நின்று கிணின் கிணினென்று ஒலிக்க நூறாயிரம் வெள்ளம் சேனையையும் கொன்று வெற்றி பெற்றுத் தம்பி யிருக்கும் இடத்திற்குத் திரும்பிவந்த பெருமாளே; இப் பெண்ணினுடைய நகில்கள் விஞ்சிய மந்திர மலை; வஞ்சகமுள்ள கண்கள் மெல்லியகெண்டை மீன்கள் ; கூந்தலின் கூட்டம் மேகம் ; கொஞ்சும் மொழியோ கரும்பு ; கொவ்வைக் கனியை யொத்த வாயோ அமுத சஞ்சீவி ; என் உயிரைப் பறித்துக் கொண்ட புருவமோ, கொடிய வில் ; பூக்களை ஆய்ந்தெடுக்கும் கைகளோ செந்தாமரை மலர்கள் ; இடையோ வெறும் பொய் ; செழித்த துடையோ வாழைத் தண்டு ; அறியாமை யென்னும் அழகிய குணத்தை

டைய இப் பெண்களின் மன்மத நடனத்தைக் கண்டு அழிந்தது என் நெஞ்சு ; இவர் பின் போக வேண்டுமென்று பூஞ்சோலையில் இருக்கும் பெண்ணைப் பார்த்துக் காதல் கொண்டு தோழியுடன் இவ்வாறு கூறி மயங்கும் என் மனமயக்கம் தெளியத்தக்க நெறியினை அருள்வாய்.

தான தந்த தனன தந்த
தான தந்த தனன தந்த
தான தந்த தனன தந்த தனதான

273. ஆல மர்ந்து புனல்க ரந்து
மானி டங்கொ ளெழில்வி ரும்பி
யானை கொன்று பதுமை முன்பு நடமாடி
ஆறு கந்து பரசு கொண்டு
சீர்மி குந்த வரைபொ ருந்தி
ஆன பெண்க ளிருவர் தங்கள் பதியாகி
மாலை வென்ற வொளிய மைந்து
வேலை மைந்த னெனம கிழ்ந்து
மானை மூந்த வுயிர்க வர்ந்து முனிவோடே
மானி கஞ்சன் முடிபி டுங்கி
ஈடு கம்ப மிசைவி ளங்கி
வாழ்சி லம்பு குனிய நின்று சிவனை
மூல வஞ்சர் படைய டங்க
வான டைந்த பிறகு வந்து
மோது கின்ற மருகன் முன்பு நடவாவென்
மூரி வஞ்ச வலியை யின்று
பாரி தென்று பொருமு னங்கம்
மூடு கின்ற கவச மம்பு சிலைவீழக்
காலொ ரம்பு காமொ ரம்பு
தோளொ ரம்பு சிரமொ ரம்பு
காதொ ரம்பு விழியொ ரம்பு கடிதேவிக்
கால னஞ்ச முடுகி வந்த
மோத ரன்ற னுயிரை யுண்டு
காணு மண்டர் பரவ நின்ற பெருமானே.

உரை :—மூலபலமான வஞ்சமுள்ள படைகள் முழுதும் விண்ணுலகடைந்த பின், குரங்குப் படைகளுடன் மோதுகின்ற மருமகனாகிய இராவணன் முன் மாமனாகிய மகோதரன் வந்து "என்னுடைய பெரிய வஞ்சகமுள்ள வலிமையை நீ, இன்று இதோ பார்" என்று சொல்லி உன்னோடு போர் செய்யு முன்பு அவனுடலை மூடியுள்ள கவசம் ஓரம்பினாலும், அம்புக்கூடு ஓரம்பினாலும், கையில் ஓரம்பினாலும், கால் ஓரம்பினாலும், கை ஓரம்பினாலும், தோள் ஓரம்பினாலும், காது ஓரம்பினாலும், கண் ஓரம்பினாலும் கீழே விழுமாறு அம்புகளை விரைந்தேவி அவற்றை யறுத்து எமனஞ்சுமாறு முடுகி அம் மகோதரன் உயிரை அம்புக் கிரையாக்கிப் பார்க்கும் விண்ணவர் பரவ நின்றருளிய பெருமாளே; கல்லாலின் கீழ் தட்சிணாமூர்த்தியாய அமர்ந்தும், சடையில் கங்கை நீரை யொளித்தும், தாருகாவனத்து முனிவர்கள் அனுப்பிய மானை இடக்கையில் பிடித்துக் கொள்ளும் அழகை விரும்பியும், கயமுகாசுரனைக் கொன்று அவன் தோலை யுரித்துப் போர்த்தும், காளியின் முன் கூத்தாடியும், ஆனேற்றினை மகிழ்ந்தூர்ந்தும், மழுப்படையைத் தரித்தும், சிறப்பு மிக்க கைலை மலையில் பொருந்தியிருந்தும், இனிமை யுடையவர்களாகிய மலைமகள் கங்கை என்னும் இரு பெண்கட்கும் கணவனாகியும்,மாலைப் பொழுதை வென்ற செந்நிற மேனியுற்று, முருகப் பெருமானை மகனாய்ப் பெற்றும், முன் தாருக வனத்து முனிவர் அனுப்பிய புலியின் உயிரை வாங்கி அதன் தோலை உடுத்தியும், சினத்தோடு பெருமை பொருந்திய பிரமனுடைய நடுத் தலையைக் கிள்ளியும், திருக்கச்சி மாநகரில் ஏகம்பமென்று விளங்கியும் (கம்பை யாற்றங்கரையில் கம்பமாகியும்) நிலவுலகுக் காதாரமான வருத்தமற்ற மகாமேரு வில்லின் தலைகுனிய வளைத்தும், முப்புரங்களை யெரித்தும் நின்ற சிவபெருமான் போல் நீயும், ஊழி வெள்ளத்தில் ஆலிலைமேல் பள்ளிகொண்டும், அவ் வெள்ளத்தை ஒளித்து உலகை யுண்டாக்கியும், அவ்வுலகில் மனிதனாக அவதரிக்க மிக விரும்பியும், கஞ்சன் விட்ட குவலயாபீடமென்னும் யானையைக் கொன்றும், சிவபெருமானுடைய தங்கையாகிய திருமாமகள் முன் கூத்தாடியும், ஆனிரைகளை மேய்த்து மகிழ்ந்தும், சமதக்கினியினிடத்துப் பரசுராமராக அவதரித்த போது மழுப்படையைக் கையிற் கொண்டும், தாள வொத்தில் எழுகின்ற பண்கள் மிக்க மூங்கிற் குழலையூதியும், திருமகள் நிலமகள் என்னும் இரு பெண்கட்கும் கணவனாகியும், நீருண்ட கருமுகிலை வென்ற நீலச் சோதியாகத் திருவுருவமைந்தும், மன்மதனை மகனாகப் பெற்று மகிழ்ந்தும், மாரீசனாகிய மானை முன்பு கொன்றும், பெருமையுள்ள கஞ்சனது மணிமுடியைச் சினத்தோடு பிடுங்கியும், வலிமையுள்ள தூணுக்குள் நரசிங்கமாயும், வருத்தமற விருந்த கோவர்த்தன மலை தலைகீழாகக் குடையாகப் பிடித்து இடையரையும் பசுக் கூட்டங்களையும் கல் மழையினின்றும் காத்தும் செய்த விளையாட்டுக்களால் சிவபெருமானாய்.

இப் பாட்டில் சிவபெருமானுக்குக் கூறிய அடைகளைக் கொண்டே திருமாலுக் கியைபுபடுத்தியுள்ளமை காண்க; இனி, நீயே சிவன் ஆறுய் ரன முடித்தலும் பொருந்தும் சிலேடை நயம் அமைந்துள்ளது நோக்குக.

தானத்தா தானன
தானத்தா தானன
தானத்தா தானன தனதான

274. ஆவத்தே யானது
கூடத்தான் வாவெனில்
ஆகெட்டே னேயென அயலேனி

யாருக்கா ரேதுணை
தீயிற்சா கேனெனும்
ஆனைக்கோ டாமுலை மடவாரைப்

மேவுற்றே விடது
கோவித்தே வாழ்வதின்
மேதக்கோர் சேர்வுறின் அதுபோதும்

வீழ்விப்பா யோவெனை
வாழ்விப்பா யோவினி
மேலைக்கே தோக்குநை அறியேனே

கோவத்தோ டோயொரு
தேரைத்தான் மேல்கொடு
கோடித்தே ராவணன் வருபோதில்

கோலத்தே வாதிபன்
காணுற்றே தேர்கொடு
கூடிக்காண் மாதலி எனலோடும்

தேவர்க்கே யாகிய
மானத்தேர் மானிடம்
தேறுற்றே யேறவும் எளிதாமோ

திதைப்பா ரீரென
ஓதித்தான் மேல்விடு
தேரிற்போ யேறிய பெருமாளே.

---

(பி - ம்) விடுபோரில் எனவும் பாடம்.

உரை :—மகோதரனாகிய அம் மாமனைக் கொன்றதனால் பிறந்த சின
தோடு ஒப்பற்ற தேரை அணி செய்து, தான் அதன் மேலேறி ஆரவார
செய்து கொண்டு இராவணன் வரும்போது அழகிய விண்ணவர் இன
யாகிய இந்திரன் கண்டு, 'நம் தேரைக் கொண்டு போய் இராமபிரானை
அதில் இருக்கச் செய்து நடத்து' என்று மாதலியிடம் கூறியவுடன
'விண்ணவர்க்கே தகுதியான வலிய தேரின்மேல் மானிடர் துணிந்
ஏறவும் நடத்தவும் எளிதாமோ? இவ் விமையோர் செய்யுஞ் செயலை
பாருங்கள்' என்று சொல்லி அம் மாதலி விட்ட தேரில் ஏறியருளி
பெருமானே; கணவனும் மனைவியும் இன்பமாய் இருக்கும் நாளிலெல்லாம
மனைவி 'நான் உன்னுடனே இறப்பேன்' என்று சொல்லி அவனை மயக்கி
கொண்டிருந்து வருகையில் கணவனுக்கு இறப்புக் காலம் வர அவன் தன
மனைவியை நோக்கி, "என் உயிர் போகும் பெருந் தீங்கு நேர்ந்தது;
முன் சொன்னபடி என்னுடனே வா" என்றான்; அவள், 'ஆ? கொ
டேன்;' என்று கையை முறித்து அப்பாற் சென்று, "உலகில் யாருக்
யார் துணையாவர்; நான் நெருப்பில் மூழ்கி இறவேன்" என்று சொ
னாள். ஆனைக்கோடு போன்ற நகில்களையுடைய அத்தகைய பெண்களை
கூடி வாழ்வதினும், பெரியோரைச் சேர்ந்திருத்தல் தக்கது; அதுவே
போதும்; இனி, என்னை நரகில் வீழ்த்துவையோ? சுவர்க்கத்தில் வாழ
விப்பையோ? நின் அருள் யாதோ? நானறியேன்.

தான தானன தத்தன தந்தன
தான தானன தத்தன தந்தன
தான தானன தத்தன தந்தன தனதான

275. சீறு கோபகு ணத்தவர் வஞ்சகர்
வேடர் பாதகர் செற்றமி குந்தவர்
தேடி யேபொருள் வைப்பவர் கிஞ்சினும் அருளாதார்
சீரி லாதவர் கெட்டவர் கண்டகர்
ஈன மானபி றப்பினர் மங்கையர்
சேர்வை யூடு மயக்குறு நெஞ்சினர் பழிநாணார்
சோறி டாதவர் கற்றறி வுஞ்சொலி
ஓடி யேநர கிற்புகு கின்றவர்
சூது காரரு லுத்தர்கள் வன்கவ றகலாதார்
சோர ராமிவ ரைத்தினமிந்திர
தாரு வேயென நிற்கைத விர்ந்தொரு
சோதி யானவு னைப்பா வுந்தவம் அடைவேனோ

ஏறு மாகரு டற்கது முன்[1]பொறி
வீர மாருதி வெற்றிநெ டும்புயம்
ஈறி லாதுத ழைத்திட வென்றெதிர் மலர்தூவி

ராம ராவண யுத்தமு மின்றிது
காண வேணுமெ னக்கக னஞ்செறி
ஈச னுன்முகன் மற்றுள வண்டர்கள் களிகூர

வீறு தேரின் விரற்பட வங்கது
பூமி யூடுசு ரித்தனு மிந்தவி
னோத மாரொடெ னக்ருபை வந்தபின் எழுவோடும்

மீது லாவிய சொற்கள்வி ரும்பிய
பாகன் மாதலி வெட்கிவ ணங்கவி
மான மேறிவெ ளிப்பட நின்றருள் பெருமாளே.

உரை :—நீ ஏறியவுடன் அத்தேர் புதைந்ததை இமையவர் கண்டு, "நீ ஏறும் பெரிய கருடனுக்கு உன்னைத் தாங்கும் ஆற்றல், முன்பு நீ அருளிய விதியாதலின் அஃது அதற்கு இயலுகின்றது இயல்பே ; இந் நாளில் நின்னைத் தாங்கிய வீரம் மிக்க அனுமானுடைய நெடுந் தோள்கள் அழிவின்றித் தழைத்து வளர்க" என்று கூறி நின் முன் பூமாரி பொழிந்து, 'இன்று இராம இராவணப் போர் ; இதனைப் பார்க்க வேண் டும்,' என்று, விண்ணகத்தே நெருங்கிய சிவபெருமான், நான்முகன் மற் றைய விண்ணவர் ஆகிய எல்லோரும் மகிழ, பெருமை மிக்க தேரில் நின் திருவடி விரல்பட்ட அப்போது, அத்தேர் தரைக்குள் சுரித்து அழுந்த, 'இவ் விளையாடல் யாரோ' டென்று நினக்கு அருள் வந்தபின், தேர் எழும் பியவுடன், மேலாக நடந்த சொற்களாகிய, அஃதாவது முன் இத்திரன் கொண்டு போவெனத் தெய்வத் தேரில் மக்கள் ஏறுதல் தகுமோ ? என்று இந் திரனை மேலாக்கிச் சொல்லிய கருத்துக்களால் தேர் வலவனை மாதலி நாணித் தலை குனிந்து வணங்க அவ் விமானத்தில் ஏறி வெளிப்பட நின்றரு ளினை பெருமாளே ; சீறுகின்ற சினமாகிய பொல்லாத குணமுடையவர் கள் ; வஞ்சக முள்ளவர்கள் ; வழிபறிக்கும் வேடர்கள் ; கொலை செய்யும் பாவிகள் ; நிலைத்த சினமிக்கவர்கள் ; வருந்திப் பொருள் தேடிப் புதைத்து வைப்பவர்கள்; சிறிதளவும் ஈயுந் தன்மை இல்லாதவர்கள்; சிறப்பில்லாப் பிறப்புடையவர்கள் ; பெண்களின் கூட்டுறவுக்குள் மயங்கும் மனமுடைய வர்கள்; பழி கூறுதற்கு நாணுதவர்; எவர்க்குஞ் சோறிடாதவர்கள்; கல்வி யைத் தாம் கற்றும் பிறர்க்கு அறிவு புகட்டியும், தாம் கற்றவாறொழு

1. பொறி—விதி.

காது சென்று நரகில் விழுபவர்கள் ; சூதாடுபவர்கள் ; இருடர்கள் ஆகி பேரை நாள்தோறும் 'இந்திரன் கற்பதருவே' என்று புகழுரை புகன், இரத்தலை விட்டு, ஒப்பற்ற மேலான சோதியாகிய நின்னைப் பரவி போற்றுந் தவத்தை நான் பெறுவேனோ? சொல்லுக.

தனதன தனன தனதன தனத்த
தனதன தனன தனதன தனத்த
தனதன தனன தனதன தனத்த தனதான

276. மருவிய கலைக ளூறுநடு விறக்க
இளைஞர்க ளுருகு மனமதி யிறக்க
வருசிலை மதனன் மணிமுடி யிறக்க இளநீரும்

மரைபயில் முகையு மழுகுக ளிறக்க
முனிவரர் துறவு நினைவற விறக்க
மடலுல வுகையின் வளர்பனை யிறக்க அதிபாரக்

கிரியென வளரு மிருதன மசைத்து
வருமட மகளிர் கலவியின் மிகுத்த
க்ரியையொடு கிரியு மறிவிலி பவத்தன் முழுமூடன்

கெடுதொழி லசடன் வருணச ரித்ர
விபரித மறவு னடியவர் நெருக்கு
கெழுதகு குழுவின் மருவுறு தவத்தை அருள்வாயே

அழகிய தரும மதுதலை யெடுக்க
மனுநெறி யுலகு தனியடி யெடுக்க [பால்
அயன்முக மினிய மறையொலி யெடுக்க மறையோர்

அவிபடு கனலு நெறியொலி யெடுக்க
உரிமையி னமர ரவியுண வெடுக்க
அழகிய சரித மகிலமு மெடுக்க வினையாளன்

இருபது புயமு மலகைக ளெடுக்க
ஒருபது சிரமு நரியின மெடுக்க
எரிவிழி மணிகள் கழுகுக ளெடுக்க எதிராரென்(று)

இமையவர் பதிதன் மலர்முக மெடுக்க
மயன்மக ளலறி யழுகுர லெடுக்க
இடதுகை பொலிய வொருசிலை யெடுத்த பெருமாளே.

உரை:—இங்ஙனம் திருத்தேரில் ஏறியருளி இராவணனாலே குறைந்த அறநெறி தலையெடுக்கவும், மனுநெறி உலகில் நடக்க வேண்டி அடியெடுக்கவும், நான்முகனது முகம் இனிய மறையொலி செய்யவும், அந்தணரில்லத்து அவி சொரியப்படும் வேள்விக் கனலும் நூன் முறைப்படி சடசடவென்று ஒலிக்கவும், உரிமையால் இமையோர், வேள்வியிற் கொடுக்கப்படும் அவியை உண்ணுதற்குக் கை யெடுக்கவும், அழகிய வரலாறுகளை உலகவர் எடுக்கவும், வஞ்சகனாகிய இராவணனுடைய இருபது தோள்களையும் பேய்கள் எடுக்கவும், அவனுடைய ஒப்பற்ற பத்துத் தலைகளையும் பத்து நரிகள் எடுக்கவும், எரியும் அவன் கண் மணிகளைக் கழுகுகள் எடுக்கவும், எனக்கினி எதிரார் என்று விண்ணோர் தலைவன் மலர்ந்த முகத்தை யெடுக்கவும், மயன்மகளான மண்டோதரி அலறி அலறி அழுகுரல் எடுக்கவும், இடக்கையில் விளங்குமாறு ஒப்பற்ற கோதண்டத்தை யெடுத்த பெருமாளே ; புடவைகளை யுடுத்த இடை, கொங்கைப் பொறை யாற்றாது ஒடியவும், இளைஞர்களுடைய உருகும் மனம் நல்லறிவு கெடவும், வரிந்து கட்டிய கரும்புவில்லையுடைய மன்மதனது மணிமுடி தோற்கவும்; இளநீரும் தாமரையில் உண்டான அரும்பும் அழகழியவும், துறவிகளின் துறவுள்ளங் கெடவும், மடலேறும் இளைஞர்களின் பரந்த கைகளிலுள்ள வளர்ந்த பனையோலை நழுவவும், துயர் செய்கின்ற மிக்க பருமையுடைய மலைகள் போல் வளரும் இரு நகில்களையும் அசைத்து வரும் மடப்பமுடைய பெண்களின் கலவியில் மிக ஈடுபட்டுத் திரியும் அறிவற்றவனும், பயனற்றவனும், முழு மூடனும், கெடுக்கும் தொழிலைச் செய்யும் [5]அசடனுமான என் பயனற்ற பண்புகளையுடைய சரித்திரமான விபரீதம் கெடுமாறு, நின் அடியார் நெருங்கும் பழக்கமுள்ள தகுதிவாய்ந்த கூட்டத்திற் கூடியிருக்குந் தவத்தை எனக்கருள்வாய்.

தனத்தா தனத்தன தனத்த
தனத்தா தனத்தன தனத்த
தனத்தா தனத்தன தனத்த தனதான

277. மருத்தா மரைத்திரு மனைக்குள்
இருப்பீர் புறப்பட நினைக்கின்
மகத்தா னகற்கச மடைத்த திருவாயில்

வலிக்கே திறக்கவ கைகற்ற
துமக்கே யினித்தகு நடக்கின்
மலர்த்தாள் பருக்கைக ளுறுத்து மெனவேதான்

இரப்பா னசொற்பல வுரைத்த
திணைக்காம் கருப்பொருள் கள்கற்றும்
இழுக்கா திருட்குறி நிலத்தை புடையோர்மேல்
எடுத்தே புலப்பட முடித்தென்
இளைப்போ டுநிற்பது தவிர்த்துன்
இணைப்பா தபத்மமி சைசெப்பும் மதிதாராய்

நிரைத்தே புறத்தம ரர்நிற்க
வெளிக்கே கண்வைத்தனு மன்மற்று
நிலத்தா டுநிற்கவிண் ணணைத்தும் உலகேழும்
நெடுக்கோ டிமுட்டியெ திரிட்டு
குறுக்கோ டிவட்டமொ டுசுற்றி
நிறைச்சூ லநெக்கிட வுயிர்த்து நிரையார்தோள்

சிரத்தோ டடிக்கடி யறுத்து
மயிர்க்கோ ரொரத்திர முகிர்க்கை
சிவப்பே றவெற்றிவில் பிடித்து மகவானூர்
திருத்தே ரினைக்கட வியுக்ர
மிகுத்தே தனித்தமர் விளைத்த
தசக்ரீ பனைப்பொரு தழித்த பெருமாளே.

உரை :—மறைவில் ஒழுங்காக இமையவர் நின்று காணவும், வெளியில் அனுமானும் மற்றையோரும் கண் வைத்துப் பார்த்துக் கொண்டு தரையில் நிற்கவும், விண்ணிலும் எழு தீவுகளான உலகங்களிலும் நெடுக ஓடி ஒரு தேரோடு ஒரு தேர் முட்டி எதிர்த்த பின் குறுக்கே யோடித் திரும்பி வட்டமாகச் சுற்றி வரவும் இராவணனது நிறைந்த சூலம் நெரிந்து பொடியாகவும், அவன் பெரு மூச்செறியவும், ஒழுங்காயுள்ள தோள்களைத் தலையோடு அடிக்கடி யறுத்தும் மயிர் ஒன்றுக்கு ஒவ்வோர் அம்பு தொடுத்தும், நகத்தையுடைய நின் கைகள் அம்புகளை இழுத்துத் தொடுத்தலால் ஒழுகும் குருதியால் செந்நிறமடையவும், வெற்றி மிக்க வில்லைப் பிடித்து வேள்வித் தலைவனை இந்திரனது அழகிய தேரை நடத்தியும் சினம் மிகுந்து தனித்து வந்து பொருத பத்துத் தலைகளையுடைய அவனைப் பொருது அழித்த பெருமாளே ; கோவைத் துறையாக, ஒரு தலைவியை ஒரு தலைவன் புகழ்ந்து, 'மணமுள்ள தாமரை மலராகிய வீட்டில் இருப்பீர் நீர் ; அவ் வீட்டினின்றும் வெளியே வர நினைத்தால் மிகப் பெரிய வருத்தம் ; அங்ஙனம் அமைக்கப்பட்ட வாயிலைப் பெற்றுத் திறக்கும் வகையைக் கற்றது உமக்கே தகும் ; இத்தகைய நீர், இனி நடந்தால் தாமரை மலர்

போன்ற நும் அடிகளில் பருக்கைக் கற்கள் உறுத்து மென்று நடவா திருக்க,' என்று வேண்டிக் கொள்வதாகிய சொற்களைமிகவும் சொல்லு கின்ற ஐந்திணை நிலங்களிலும் உண்டாகும் பொருள்களிடத்தில் பொய் யன்பு கொண்டு, தவறாது இருட்குறி முதலிய துறைகளைச் செல்வமுடை யோர் மேல் அமைத்து, புலன்களாலும் உணரத் தக்கவாறு பொருள்களை முடித்து இளைப்புடன் அவர்கள் முன்னே பாடி நிற்கும் தன்மையைப் போக்கி, நின் இரு தாமரை யடிகளின் மேலும் அக் கோவையைப் பாடத் தக்க அறிவினைத் தந்தருள்வாயாக. (கற்கசம்—அருமை.)

தனனதத் தனதனத்
தனனதத் தனதனத்
தனனதத் தனதனத் தனதான

278. புகையடைத் திருள்படைத்
தருளறத் தெருளறப்
புலையெடுத் தலைவுபட் டொருஞானப்
புகுதியற் றிடுமனக்
கவடனைத் திருடனைப்
பொறியனைச் சிறுகனைக் கொடியேனைச்
சுகமுறப் ரியமுறப்
பழியறப் பழுதறத்
துயரறத் துனியறக் க்ருபையாலே
தொழுவிருத் தியனென்னத்
தலைமிசைத் துளவுடைத்
துணையடிக் கமலம்வைத் தருள்வாயே
பகையெனக் கெவரெனக்
களமடுத் துயர்களிப்
படைஞரைப் பொருதுதிக் கிருநாலும்
பறபடச் சுரரொளித்
தகலமைக் கடனடுப்
படுகனற் கடையுகத் தெழுமாபோல்
தகையறக் ககனமுற்
றிரதம்விட் டுலகினைத்
தழல்கொளுத் தியசரத் தசுரேசன்

தனுவிழக் கரம்விழக்
கொடிவிழப் பலமுடித்
தலைவிழப் பொருகணைப் பெருமாளே.

உரை :—'எனக்குப் பகைவர் யார்' என்று தருக்கிப் போர்க்களத்திற்கு வந்து, உயர்ந்த குரங்குப் படைத் தலைவர்களை அடித்து எட்டுத் திசைகளிலும் ஓடத் துரத்தி, விண்ணவர் ஒளிக்கவும், கரிய கடலின் நடுவிலுள்ள வடவைக்கனல் பேரூழிக் காலத்தின் கடைசியில் தோன்றுவது போன்று, 'இவ் வுலகில் செல்லலாம், இங்குச் செல்லுதல் கூடாது' என்னும் கட்டளையின்றி விண்ணக முழுதும் தேரைச் செலுத்தி எல்லா உலகங்களையும் கொளுத்திய அம்புகளையுடைய அசுரர் கோவாகிய இராவணனுடைய வில் விழவும் கைகள் விழவும், வீணைக்கொடி விழவும், முடிகளை யணிந்த பத்துத் தலைகள் விழவும், அறுத்த அம்புகளையுடைய பெருமாளே ; செருக்கென்னும் புகை நெஞ்சை யடைக்க அதனால் அறியாமையாகிய இருளுண்டாகி மூடிய போழ்து, இரக்கமும் தெளிந்த அறிவும் கெடப் பொய்யான இழிதொழிலை மேற் கொண்டு அலைந்து, மெய்யறிவு புகுந்து அச்சந் தீர்த்துக் காக்குமிடமாகிய உள்ளத்தில் வஞ்சனையுடையவனும், திருடனும், கொடியோனும், கலகம் விளைவிப்பவனும் ஆகிய நான் நலமுறவும், அன்படையவும், பழிச் சொல்லின் நீங்கவும், குற்றமறவும், துன்பம் நீங்கவும், வருத்தம் அகலவும் செய்து, நின்னருளால் நின்னை வணங்குதலையே தொழிலாகக் கொண்டவனென்று உலகோர் சொல்லுமாறு, என் தலையின்மேல் திருத்துழாய் மாலையணிந்த இரண்டு திருவடி மலர்களையும் வைத்துக் காத்தருள்வாய்.

பறபட—விசைந்து செல்ல. சிலுகன்—கலகக்காரன்.
தகையற—தடுக்கும் தன்மை நீங்க.

தானன தந்த தந்த
தானன தந்த தந்த
தானன தந்த தந்த தனதான

279. நேயாத ரங்கொள் பெண்கள்
வாயூற லுண்டு கொண்டு
நீயாளு கின்ற தொண்டு நிகராகும்
நீநான துஞ்சு கங்கொள்
மாமோனம் வந்து சிந்தை
நேரேயொ ருங்கு மன்றி அயல்வேறுன்

றுயாறு பஞ்ச விந்திய
மாதினை மங்க டங்கும்
ஆருது விஞ்சு கின்ற — பகைதானும்

ஆதாளி குன்று நின்று
நாணாது விஞ்சு கின்ற
மாலோக மங்கு மின்பம் — ஒழியாதே

தீயாதி ரும்பு விஞ்சி
ஏகேகே லென்று சென்று
தேரோடு விண்ப டர்ந்து — வடமேரு

தீவேழொ ரண்ட ரண்ட
மூடேக வெஞ்சி னங்கள்
தீராது பின்தொ டர்ந்து — முதலேவும்

மாயாச ரங்க லங்க
ஞானோத யந்து ரந்து
மார்பூறு கண்டு மண்டு — கணையேவி

மாராவ ணன்சி ரங்கள்
நேரேய ரிந்த ரிந்து
வானோரை யஞ்ச லென்ற — பெருமாளே.

உரை:—தரையினின்றும் விண்ணில் எழும்பிய இராவணனைக் கண்டு, உன் தேரையும் மாதலியை விண்ணிற் செலுத்தச் செய்து, "தீயோனே, என்னை மீறிச் செல்லாமல் திரும்பு; பழியைக் கொள்ளாமல் புகழைக் கொள்" என்று சொல்லி, விண்ணில் அவன் செல்லும் வடதிசைக் கண்ணுள்ள மகாமேருவிலும், எழு தீவுகளிலும், விண்ணவர் உலகங்களிலும் அவனைத் தொடர்ந்து, அவன் முன்னர் ஏவிய மாயக்கணை கலங்கி யழியவும், ஞானம் உண்டாகி மயக்கந் தெளியவும் ஞானக் கணையை ஏவி, அவன் மார்பில் புண் உண்டாக்கியும், மிக விரைவுள்ள அம்புகளை விட்டுப் பெருமையுள்ள அவ் இராவணன் தலைகளை நேராக எளிதில் பலகால் அறுத்தும், இமையோரை அஞ்சற்க வென்றருளிய பெருமாளே; அன்போடு விருப்பங் கொண்ட பெண்களின் வாயில் ஊறிய நீரைக் குடித்து அவர்கட்கு ஏவல் செய்யும் அடிமையும், நின்னால் ஆட்கொள்ளப் பெறும் அடிமையும் ஒருபடித்தாய் நிகராகும்; எவ்வாறெனில், இரண்டு நிலையிலும் நீயென்றும் நானென்றும் வேறுபட்டிருத்தல் அறும்; இன்பத்தைத் தருகின்ற பெரிய பேச்சற்ற நிலை வருதலால் உள்ளம் செவ்வையுறாய் ஒடுங்கும்; இஃதன்றிப் புறத்தே வேறொன்றையும் ஆராயாது; ஐம்பொறிகளின் வாயி

லாக வரும் ஐம்புலன்களும் அங்கங்கே யொடுங்கும் ; காமம் முதலிய ட
கள் ஆறும் தம் ஆதாளி குறையும் ; நாடோறும் நாணமின்றி மேன் மே
நினைக்கப்படும் உலகச் செயல்கள் அழியும் ; ஆயின், மங்கை நல்லார்
கூட்டுறவில் இன்பம் மட்டும் ஒழியாது மற்றைய யாவும் ஒழிந்து நிற்

தனன தானா
தனன தானா
தனன தானா — தனத

280. தெரிய வாராய்
இனிது பாராய்
தெளிவு தாராய் — வினையாறி

சிலுகு தீராய்
புகழை யோராய்
செறிந்து சேராய் — அடியேனு

கொருசொல் கூறாய்
நரகை மாறாய்
உரியர் வேறார் — அதிவேறு

உபய தாளே
இனியெ நாளோ
உதவு நாளே — அருள்வாயே

கரவு றாதே
மிகைசொ லாதே
கதைவி டாமே — திருநேசன்

கலைதொ டாதே
சிலையெ டாதே
கதுமெ னாதே — இனிமேனும்

பொரவொ ணாதே
வலவன் மேலே
பொறிகள் போயே — தலைசாயப்

புதுமை யாயே
ககன மீதே
பொருத வானோர் — பெருமானே.

உரை :—பின்னர், அரக்கர் கோனாகிய இராவணன் ஒளிக்காமலும், குற்றமுடைய சொற்களைச் சொல்லாமலும், தண்டினைக் கையினின்றும் விடாமலும், அம்பு தொடுக்காமலும், வில்லை எடாமலும், விரையாமலும், இனிமேல் போர் செய்யக் கருதாமலும், ஐம்பொறிகளுங் கலங்கித் தேர்ப் பாகன் மேல் தன் தலையைச் சாய்த்து அறிவிழந்து விழுமாறு, காண்போர் வியக்க விண்ணில் நின்று போர்புரிந்த இமையவர் பெருமானே ; நீ என் கண்கள் காணுமாறு வருவாய் ; இனிய அருட் கண்ணால் பார்ப்பாய் ; மயக்கத்தைப் போக்கித் தெளிவைத் தருவாய் ; உட்பகைகளாகிய காமம் முதலிய ஆறன் கலகத்தையும் போக்குவாய் ; புகழை யறியாய் ; என்னை நெருங்கி வந்து சேர்வாய் ; அடியேற்கொரு சொல் அருளுவாய் ; நரகை விலக்குவாய் ; இவ்வாறு செய்தற்குரியர் வேறெவருளர் ? இவைகட்குக் காரணமான நின் திருவடிகளைத் தருவதற்கு நன்னாள் வேண்டுமோ ? இனி அவற்றை யருளும் நாள் எந்நாள் ? அருளிச் செய்க.

தனனா தனத்
தனனா தனத்
தனனா தனத் தனதான

281. பணியே னினைத்
அருகே னுனைப்
பரவே னெழுத் திருநாலும்
பகரே னெடுத்
தழுயேன் முதற்
பரவே னடிப் பொடியாகத்
துணியேன் அகத்
தடியார் தமைத்
துணையா மெனக் கருதேனென்
துயர்தீ ருமெப்
படியோ வினிச்
சொலவே னும்விட் டொளியாதே
அணியே கெடுத்
துடனே விடுத்
தணுகா வரக் கனைமீளென்
றழகா னபத்
திருதோ ளறுத்
தடா மறித் தவன்றீனக்

கணைமா ரிபட்
டுயிரோ தவிக்
கையிற விளைத் தயவேகிக்
களையா ரவிட்
டமரா டுநற்
கருணை காப் பெருமாளே.

உரை :—இராவணன் தன் அணி வகுப்பினை யழித்து உடனே அருகில் வர, அவனைத் திரும்பிப் போகென்று அழகிய இருபது கைகளையும் அறுத்து, உடல் முழுதும் அம்புகளால் துளைத்துப் பொருது அவன் மீண்டபோது தடுத்து அம்பு மழைகள் பட்டு அவன் உயிர் தவித்ததனால் இளைக்க, அப்பாற் சென்று இளைப்பாறவிட்டு, மீண்டும் போர் செய்த நல்ல அருளுக் கிருப்பிடமான பெருமாளே ; நான் நின்னை வணங்கேன் ; நின்னை நினைத்து மனம் உருகேன் ; நின் புகழ்களைச் சொல்லித் துதியேன் ; திருவெட்டெழுத்தையும் சொல்லேன் ; நின் திருப்பேர்களாகிய மற்றையவற்றையும் வேறு வேறெடுத்து வாய்விட்டு நின்னைக் கூப்பிடேன். பேரொளியாகி எதற்கும் மூலமான நின்னைப் பூசை செய்யேன் ; நின் அடியார்களின் திருத்தாள்களின் பொடியை நலமெனத் துணிந்து மேற் கொள்ளேன் ; உள்ளத்தில் அடியார்களை உற்ற துணையெனக் கருதேன் ; என் துயரம் தீர்வது எப்படியோ ? நானறியேன் ; அதனை ஒளியாமல் வெளிப்பட எனக் கறிவித்தல் வேண்டும்.

'துயர்தீர் தலெப் படியோ'

எனவும் பாடம்.

தந்தா தந்தன
தந்தா தந்தன
தந்தா தந்தன தனதான

282. இங்கோ வஞ்சக
வெங்கா லன்படை
எங்கே வந்திவன் விழுவானென்(று)
உன்கூ றென்பவர்
றென்கூ றென்பவ
என்றே னுந்தனி யுறுவார்பின்
அங்கே பங்கயன்
கண்கா ணும்பொழு
தந்தா வந்தனன் மறிவானென்

றன்றே வண்புலி
யின்பா லுந்துவர்
அந்தோ வெங்கினி நிலையாவென்

வெங்கோ பங்கொடி
லங்கே சண்படை
வென்றே னென்றெதிர் விடலோடும்

விண்போய் வெங்கடல்
மண்போய் அங்கையின்
மின்பா ணங்களும் அயனூர்கம்

செங்கோ லுஞ்சிவன்
வெங்கோ லுந்தனி
தின்றே வந்துடல் புகநாடும்

திண்சூ லந்தனை
யுங்கா ரங்கொடு
செந்தாள் கண்டருள் பெருமாளே.

உரை :—இலங்கை யரசனான இராவணன் மயக்கந் தெளிந்து கடுஞ் சினங் கொண்டு 'வெற்றி பெற்றேன்' என்று சூலப்படையை யுனக்கெதிரே விடலோடும் அது, விண்ணுலகைச் சுட்டுக் கொடிய கடல் சூழ்ந்த உலக முழுதும் சுட்டு, நின் அழகிய திருக் கைகளினின்று விடப்பட்ட ஒளி மிக்க அம்புகளையும், செம்மையான மலரோன் அம்பையும், சிவபெருமானது கொடிய பாசுபதத்தையும் நிகரின்றித் தின்று எரித்துவிட்டு, நின் திருவுரு வில் நுழைவதற்கு எண்ணி வர, அத் திண்ணிய சூலத்தை ஊங்காரம் செய்து செந்தூளாமாறு பார்த்தருளிய பெருமாளே; நான் அலையாமல் நிலைத்திருப்பது இவ்வுலகிலேயோ? அன்றெனில், வஞ்சகமும் கொடுமையு முள்ள எமதூதர், இவன் எங்கே வந்து விழுவானென்று பல நரகிற்கும், செல்ல அந்நரகங்களுக்குத் தலைவர்கள் என் பங்கென்போரும் உன் பங்கென் போரும் என்றேனும் என்னைத் தனியே கொண்டு செல்வர்; அவர்கள் கொண்டு செல்லும் நரகமோ ? கொடிது; அதுவும் நுகர்ந்து தீர்ந்த பின் நான்முகன் கண்களிற் காணும் போது அதோ வந்தானெனில், இவன் தடுமாறுவா னெனக் கருதி அக்கணமே வளப்பம் மிக்க நிலவுலகிற் போக விடுவர்; இவ்வாறு உலகத்திலிருந்து நரகிலும், நரகிலிருந்து உலகத்தி லும் மீண்டும் வந்து நான் அலைவதன்றி ஓரிடத்திலும் நிலைத்தேனல்லேன்; அந்தோ, இனி எங்கே நிலையாய் இருப்பேன் ; சொல்லுக.

இங்கோ நிலையாவேன்; எங்கு நிலையாவேன் என்று தனித் தனி கூட்டுக. நான்முகனைக் கண்டால் இவன் தடுமாறுவானென்று கருதி எமதூதுவர் மீண்டும் உலகில் எனை விடுவர் என்பது கருத்து.

தானன தனன தத்த
தானன தனன தத்த
தானன தனன தத்த தனதான

283. கோதைய ரளவில் வைத்த
காதலை யடுத லக்க
கோடிய தெனவு றுக்கி அதிலேயொர்

கூறினை நினது பத்ம
ஈரடி மருவு பத்தி
கூடினு மெழுபி றப்பில் விழுவேனோ

ஆதவ னுலகை விட்டு
வானவ னரசு தட்டி
ஆதியி லயனி ருக்கை கழியாநீ

ருடியி னிலைவெ றுத்து
மேலுயர் பதவி பெற்று
ஆசறு பரம முத்தி அடைவேனோ

சீதையை முதலெ டுத்த
சோரனை வெளியி லிட்ட
தேரோடு திரிய விட்டு விளையாடிச்

சீறிய கொடிய றுத்து
வீசிய கதையை மிக்க
தீயெழு துகள்ப டுத்தி அலையாத

மாதிர மலைய வெட்டு
வாரணை மிரிய விட்ட
வார்கணை பலவி லக்கி அனல்போலே

வாளியை முடுகி மெத்து
தோளிரு பதும றுத்து
வானவ ரிடர்கெ டுத்த பெருமாளே.

உரை :—பிராட்டியை முன்னெடுத்த கள்வனான இராவணன் ஒளித்திருந்த விடத்தை விட்டு வெளிப்பட்டு, நின்ற தேரோடு எல்லா உலகங்களிலும் திரியுமாறு அவனை விட்டு, நீயும் அவனோடெதிர்த்து விளையாடி, சிறந்த அவன் வீணைக் கொடியை யறுத்து, அவன் வீசிய தண்டினை, மிக்க நெருப்பில் எழும் சாம்பல் போலாக்கி முன் அலையாத எட்டுத் திசைகளும் அலையவும் திசை யானைகள் ஓடவும், அவன் செலுத்திய நீண்ட அம்புகள் நின் திருமேனியிற் படாமல் விலக்கி நெருப்புப் போல் எரியும் அம்புகளை அவன் மேல் விரைந்து செலுத்தித் திண்ணிய இருபது கைகளையும் அறுத்து விண்ணவர் துன்பத்தைக் கெடுத்தருளிய பெருமானே ; பெண்கள் மாட்டு வைத்த விருப்பத்தைப் பதினாயிரம், இலட்சம், கோடி யென்னும் எண்ணின் பகுதியாக நறுக்கி அவற்றில் ஒரு கூற்றை நின் செந்தாமரை போன்ற இணையடிகளில் வைத்து மிக்க பத்தி செய்யின், தேவர், மக்கள் முதலிய எழுவகைப் புறப்புக்களில் விழுந்து அழுங்குவேனோ? அவ்வாறு பிறக்காமல், இந் நிலவுலகை விட்டு, கதிரவன் மண்டலத்தைக் கடந்து, இந்திரன் உலகைப் பின்னிட்டு, உலகத்துக்கு முதல்வனாகிய நான்முகன் உலகையும் கழித்து, உடலெங்கும் திருநீறு பூசியுள்ள சிவபெருமான் உலகையும் வெறுத்துப் போய் எல்லாவற்றிற்கும் மேலாக உயர்ந்த பரமபதத்தைப் பிடித்து அழிவென்னுங் குற்றந் தீர்த்த வீடு பேற்றை அடைவேன்.

தந்தனத் தத்தனந்
தந்தனத் தத்தனந்
தந்தனத் தத்தனந் தனதான

184. தொங்கல்சுற் றிக்கருங்
கொண்டைபற் றிச்செழுந்
தொண்டைதுய்த் துக்கொழுஞ் சுழியூடே
தொந்தமிட் டுத்துளைந்
தங்கமொத் துப்பழந்
தொண்டுபட் டுத்தழும் புறமார்பில்
கொங்கைதைக் கக்கலந்
திங்கிதத் திட்டசெங்
குங்குமப் பொட்டழிந் திடமேளம்
கொண்டகர்ச் சிப்புடன்
பெண்களிற் பட்டிடும்
கொந்தளிப் பற்றுவந் தடைவேனோ

சங்கெடுத் துக்கொடண்
டம்பிளக் கப்பனுஞ்
சம்ப்ரமப் பத்திரண் டுயர்தோளான்

தண்டறுத் துக்கையம்
புந்துணித் தெத்தையுஞ்
சங்கரித் துக்கொடுந் தொழிலாளன்

பைங்கழுத் தற்றிடுஞ்
செஞ்சிரத் துக்கவந்
தங்களைக் கைத்தலங் கொடுபேய்கள்

பங்கமிட் டுப்பெரும்
பந்திகட் டிக்கடும்
பந்தடிக் கப்பொரும் பெருமாளே.

உரை :—சங்கைக் கையிலெடுத்தூதி, அவ்வொலியால் விண்முகட்டைப் பிளக்கச் செய்யும் நிறைந்த வலிமையையும் உயர்ந்த இருபது தோள்களையுமுடைய இராவணன் எறிந்த தண்டினைத் தூளாக்கியும், அவன் கையின் கண்ணுள்ள அம்புகளைத் தூள்களாக்கியும் மற்றும் அவன்பாலுள்ள படைக்கலங்கள் அனைத்தையும் அழித்தும், கொடிய கொலைத் தொழிலையுடைய அவனுடைய கழுத்தறுந்து விட்டதனால் உண்டாகிய—குருதியாற் சிவந்த தலைகளாகிய கவந்தங்களைப் பேய்கள் தங்கள் கைகளால் எடுத்து அவனுக்கு இழிவானதைக் காட்டி, பெரிய வரிசை வரிசையாக நின்று விரைந்து பந்தடிக்குமாறு அவன் தலைகளை யறுத்துப் போர் புரிந்த பெருமாளே ; பெண்கள் பூ மாலையை முடித்த கரிய கொண்டையைக் கையிற் பிடித்து, செழித்த கொவ்வைப் பழம்போற் சிவந்த இதழூறல் கொடுத்து, அங்குலில் இளைக்கச் செய்து, இருவருடலும் ஒருடல் போல இறுக அணைத்து, தங்களுக்குத் தலைமுறை தோறும் வெறுப்பில்லா அடிமை செய்யக் கொண்டு, மார்பில் நகில்கள் புதையக் கலந்து, குறிப்பினுல் வந்து வழியும் வியர்வையினுல் நெற்றிப் பொட்டழியக் கலவிப் போரைப் புரியும் தன்மையில் மயங்கும் நான், கலக்கந் தீர்ந்து கொந்தளிப் பொழிந்து எப்போது நின்னை வந்தடைவேனே ? சொல்லுக.

தனதன தனத்த
தனதன தனத்த
தனதன தனத்த தனதான

285. கலையது நெகிழ்த்துக்
குழலிணை யவிழ்த்துக்
கவரிதழ் பிடித்துச் சுகமோகக்

கலையைவ ருவித்துச்
சிறுகுர லெழும்பிக்
கரமிறு கவிட்டுத் தனமாகும்

கொலைமத களிற்றைக்
கனமணி நிறத்துக்
குழிபட நிறுத்தித் கொடுவாழும்

கொடியக லவிக்குத்
தெரிவைய ரைநத்திக்
குழைவுறு கருத்துத் தணியாதோ

பலதலை யரக்கப்
பயலையெ திரிட்டுப்
படையொட றுத்துத் தலைசேரப்

பவுரிகொ ளவிட்டுத்
திடுபொடெ னநட்டுப்
படுகள நிரைத்துத் தெளிவோடே

சிலதலை துடிக்கச்
சிலதலை பதைக்கச்
சிலதலை சிரிக்கச் சிலபேயின்

திரளது குவிக்கக்
கணைமுடு குசித்ர
சிலையுடை யசொக்கப் பெருமாளே.

உரை :—பத்துத் தலைகளையுடைய அரக்கப் பயலை நீ தக்கவாறு திர்த்துப் படைக்கலப் போர் புரிந்து அவன் தலைகளை யறுத்து அவை த்தாட விட்டும், திடுதிடென்றும் பொடுபொடென்றும் தரையில் வற்றை நட்டும், அவை மீண்டும் மீண்டும் முளைப்பதனால் அவற்றை வ்வப்போது அறுத்தும், அச்செயலால் உண்டான பலகோடி தலை ளையும் போர்க்களத்தில் வரிசை வரிசையாக நிறைத்தும், தெளிவோடு ல தலைகள் துடிக்கவும், சில சிரிக்கவும், சிலவற்றைப் பேய்க் கூட்டங் ள் குவிக்கவும் மிக விரைவுடன் அம்புகளைத்தூர்ந்து அறுத்த அழகிய காதண்டத்தையுடைய பேரழகு படைத்த பெருமாளே ; நான் பெண்க ளாடு கூடும்போது, புடைவையைத் தளர அவிழ்த்தும், கொண்டைச் சாருகைப் பிடித்தும், முருக்க மலர் போலச் சிவந்த உதடுகளைக் குவி ப் பிடித்தும், இன்பந்தரும் விருப்பத்தையுடைய மயக்கத்தை யுண்டாக்கி

யும், சிறிதளவு குரலை யெழும்பி எட்டுப் பறவைகள் போல் ஒலித்தும் கைகளால் இறுகப் பிடித்து நகில்களாகிய கொல்லுந் தொழிலையுடைய மதயானையைப் பொற்பணி யணிந்த மார்பில் அழுத்திக் குழியாக்கியும் வாழுங் கொடிய கலவிக்குரியவன். பெண்களை விரும்பி உருகிக் குழையும் என் மனம் தணிந்து அடங்காதோ? சொல்லுக.

தனத்தத் தனத்தத்
தனத்தத் தனத்தத்
தனத்தத் தனத்தத் தனதான

286. உளத்திற் கருப்பிற்
பரப்பைத் தவிர்ப்பித்
துருக்கித் திரித்துத் தனியேமீ
உதித்துக் கதித்துச்
செழித்துத் தொழிற்பட்
டுரைத்துப் ரபைக்குச் சுடராகித்
துளக்கற் றிருக்கப்
படைத்துக் கண்வைத்துச்
சுகித்துக் களித்திட் டமுதூறித்
துளிக்கப் புசித்துப்
பிறப்பற் றிறப்பைத்
தொலைத்துத் தலைப்பெற் றிடுவேனோ
களத்தைக் கடக்கப்
புறப்பட் டெதிர்த்துக்
கதித்திட் டரக்கர்க் கிறையோனைக்
கரத்தைச் சிரத்தைப்
பறித்துக் குவித்துக்
கணத்திற் பிணத்திற் றலைசேரத்
துளைத்துச் சிவிட்கிக்
கிளைக்கக் கிளைக்கச்
சுளித்துச் சலித்துக் கணைமீளத்
தொடுத்துத் தொடுத்துக்
கழித்துக் கழித்துத்
துளித்திட் டவெற்றிப் பெருமானே.

உரை :—போர்க்களத்தைக் கடக்கப் புறப்பட்டு நின்றேடெதிர்த்து ஆண்மை காட்டிய அரக்கர் கோனுகிய இராவணனை எதிர்த்து அவன் கைகளையும் தலைகளையும் அறுத்துக் குவித்து அக் குவியலிலுள்ள தலைகள் எல்லாவற்றையும் துளைத்தும், ஒடுங்கி யழிந்து அறுபட்ட தலைகள் மீண்டும் கிளைக்க அவற்றை அறுத்தெறிந்தும், சலித்து அம்புகளைத் தொடுத்துத் தலைகளையும் கைகளையும் சரிய வெட்டிக் கழித்துத் துண்டு துண்டாக்கியும் வெற்றி பொருந்திய பெருமாளே ; என் உள்ளத்தின் கண்ணுள்ள அறியாமையாகிய இருட் பரப்பைப் போக்கி, மெய்யறிவு தந்து உருகச் செய்தும், மாயையிற் செல்லும் மனத்தைத் திருப்பித் திருத்திக் களங்கமறச் செய்தும், அம்மனத்தில் நீ தனியாகத் தோன்றி வளர்ந்து செழித்தும், என் செயலன்றி நின் விளையாட்டைத் தொழிலுற நன்கு பதிய அமைத்துப் பேரொளிக்குள் பேரொளியாகியும், என் கலக்கத்தைத் தீர்த்தும், அலையாத மனவுறுதியை யுண்டாக்கியும், நின் அருட்கண் வைத்தும் நீ தரும் பேரின்பத்தை நான் நுகர்ந்து இன்புற்று உள்ளக் களிப்பைப் பெற்று, அமுதமூறித் துளிக்க அத்துளியை உண்டு இனிப் பிறப்பதில்லாமல் சஞ்சித, பிராரப்த, ஆகாமியமென்னும் மூவினைகளின் பொருட்டு அழிந் திறப்பதை ஒழித்து, எவற்றிற்கும் மேலாகிய பரமபதத்தை என்று பெறுவேனே ? சொல்லுக.

தானன தத்த தானன
தானன தத்த தானன
தானன தத்த தானன தனதான

287. நாடுகள் காட்டை நேர்தரும்
வாழ்வுகள் கேட்டை யேசரி
நாரியர் சேட்டை போனுவர் கலியாண
நாளிழ வேற்று நாணிகர்
பேரெழில் மூக்கி லாவுடல்
நாவினில் வாழ்த்தல் தூடணம் அவராடும்
ஓடைகள் மூத்ர மேபுனே
ஆடைகள் போட்ட தோல்சுவை
ஊண்விட மேற்ற நீர்சுரை உனைநாளும்
ஓதியு லாத்தி யேபணி
யாதவர் மாட்டின் மேவிய
ஓசைகொள் கீர்த்தி யானது மிகையாமே

கூடியொ ரோட்ட மாயொரு
தேரினை யோட்டி வானிடை
கோல்பல நீட்டி நீள்குரு திகள்சோரக்
கூர்வடு நாட்டி யேநிரை
தோள்களை வாட்டி வார்கணை
கோலமெ லாத்து மூழ்கிட எதிர்தூவி
ஈடழி வாக்கி யேதுமெ
டாவகை நீக்கி மார்பினை
யேதுளை போக்கி நீடிய வரமாக
ஈசுரர் பாட்டி லேபெறு
நாள்களை வீட்டி போகரா
ராவண வேட்டை யாடிய பெருமாளே.

உரை :—இராவணன் தேருடன் விண்ணில் எழும்பிய போது, நீ யேறிய வொப்பற்ற தேரை ஒரே ஓட்டமாக அங்குச் செலுத்திப் பல அம்புகளை அவன் மேல் தூரந்து, நீண்ட அருவிகளைப் போல் குருதி யோடு மாறு மிக்க வடுக்களை அவனுடலில் உண்டாக்கி, நிரை நிரையாகவுள்ள தோள்கள் வாட ஒடித்து, உடலெங்கும் மூழ்குமாறு பல கணைகளை ஏவி அவன் வலிமையை யழித்து, எவ்விதப் படைகளையும் எடுக்க வொட்டாமற் செய்து விலக்கி, மார்பைத் துளைத்துப் புறம்போகுமாறு அம்புகளை விடுத்து, மிக்க வரமாகச் சிவபிரானிடம் பெற்ற அவன் வாணாள்களை யழித்து, தருக்கு மிக்க இராவண வேட்டையாடின பெருமாளே; நின்னை நாடோறும் போற்றிப் புகழ்ந்து நின் திருக்கோயிலை வலம் வந்து கண்டுரு காதவர் இருக்கும் நாடுகள், காட்டுக்கு ஒப்பாகும்; அவர்கள் வாழ்வு, வறுமையை நிகர்க்கும், அவர் தம் மனைவியர், மூதேவி போல்வர்; அவர் மண நாள், இழவேறிய நாள் ஆகும்; பேரழகு, மூக்கில்லாத உடல் போலும்; அவர் நாவினால் வாழ்த்துதல் வசை மொழியாம்; அவர் நீராடும் ஓடை மூத்திரம், உடுக்கும் உடைகள், உரித்த தோல்; அறுசுவை உண்டி, நஞ்சம்; பானையில் எடுக்கும் நீர், கள்; அவர்களிடம் சேர்ந்துள்ள ஓசை யுள்ள புகழ்கள், வசையே யாம்.

தத்தன தத்தத் தனதத்
தத்தன தத்தத் தனதத்
தத்தன தத்தத் ததனத் தனதான

288. பட்டும ணிக்கச் சிறுகக்
கட்டிய விழ்த்துத் தரிகப்
பத்தியின் முற்றத் தெரியக் கொடுபோதும்

பற்பமு கைக்கொத் தமுலைத்
தத்தையர் கைப்புக் கவசப்
பட்டுரு கிக்கெட் டவினைத் தொழிலாலே

துட்டனெ னக்கட் டனெனப்
பித்தனெ னப்பாட் டனெனத்
துப்பறு சித்தத் தனெனத் திரிவேனைத்

துக்கம றுத்துக் கமலப்
பொற்பதம் வைத்துப் பொறியைச்
சுத்திப ணிப்பத் தருள்வைத் தருள்வாயே

சிட்டவு ருக்கட் டிவனத்
துற்றும லர்ப்பொற் றொடியைச்
சித்ரா தத்திற் கொடுபுட் படநூறித்

தெற்குந டத்திப் பதியுட்
புக்குந றைப்புட் பவனத்
திற்சிறை வைத்திட் டமுழுப் பகையாளன்

கொட்டம றப்பட் டமறச்
செற்றம றத்தாக் கமறக்
கொச்சைம னத்திச் சையறப் பலதோளின்

கொற்றம றச்சுற் றமறப்
பற்றும றப்பத் துமுடிக்
கொத்தும றத்தொட் டகணைப் பெருமாளே.

உரை :—முன், கோதாவரி யாற்றங்கரையில் பஞ்சவடிச் சோலையில் நீ யிருந்த போது, மாரீசன் பின் நீயும் நின் பின் இளையோனும் போனமை யின், பெருந் தவசியைப்போல் மாற்றுருக் கொண்டு, அக் காட்டுக்கு வந்து தாமரையில் வாழ்பவளும் பொன் வளைகளை யணிந்தவளுமாகிய சீதா பிராட்டியாரை அழகிய தேரில் ஏற்றிக் கொண்டு, தன்னை எதிர்த்த பற வைக் கரசாகிய சடாயுவைச் சிறகறுத்துக் கொன்று, தேரைத் தென் திசையிற் செலுத்தி இலங்கை நகர்க்குப் புகுந்து மணத்த பூக்களையுடைய சோலையில் சிறை வைத்த முற்றிய பகைஞனை இராவணனுடைய கொடுமை யொழியவும், அவன் அரசுப் பட்டம் அழியவும், சினம் நீங்க வும், செருக்கிய சொற்கள் அறவும், இழிந்த மனத்திலுள்ள பிராட்டியின் ஆசை கெடவும், இருபது கைகளின் வலிமையும் போகவும், சுற்றம் அழிய வும் அவனுடைய வயிரம் கெடவும், பத்து முடிகளோடு கொத்தாய் இருக்

கும் தலைகள் பத்தும் அறவும் தொடுத்த மலரோன் கணையையுடைய பெருமானே ; நான், பெண்களின் மணிகள் பதித்த பட்டுக் கச்சிறுகுமாறு அணைத்தும், அரையிலுடுத்த புடைவையை அவிழ்த்தும், மேலே யணிந்த முன்தானையின் பத்தியினுள் மாலை தெரியக் காணப்படும் தாமரை அரும்பை*யொத்த நகில்களையுடைய - கிளிபோற் கொஞ்சிப் பேசும் அவர்களுடைய கைக்குள் அகப்பட்டு வசமிழந்தும், உருகித் தீச்செயலைச் செய்யுந் தொழிலால் கொடியனென்றும், துன்புடையோ னென்றும், பித்தனென்றும், பிரட்ட னென்றும் சொல்லப்பட்டுத் திரிகின்றேன். என் துயரை யொழித்துச் செந்தாமரை போன்ற நின் திருவடிகளை வைத்து என் ஐம்பொறிகளையும் தூயனவாக்கி நின் அடியவர்களுள் என்னையும் ஒருவனாக வைத்தருள்வாய்.

தானன தானன தந்த
தானன தானன தந்த
தானன தானன தந்த தனதான

289. நூறுபி ராயமி ருந்தும்
வாழ்வுகள் சேரவ டைந்தும்
நூறுவ தேதிட மென்ப துணராதே
நூல்வழி சோரமு னிந்து
நீள்பெரி யோரையி கழ்ந்து
நூபுர மேவிய செம்பொன் அடிமானார்
சூறையி லேமன மண்டி
யாரோடு மேபகை கொண்டு
தூறுக ளேபடு கின்ற தமியேனும்
சூழுல கேழும ளந்த
பாதச ரோருகம் வந்து
சூடுநி ராசைபி றந்து விடுவேனோ
மாறுகொள் போரிலி றந்து
கீழ்முக மாகவி ழுந்த
மாயவி ராவண துங்கன் முதுகூடே
வாளம தானத ழும்பு
காணவு நாணியென் வென்றி
மாசுறு மேயென நொந்து தளர்போதில்

வீறிய வாரண தந்தம்
மார்புரு வாமுது கின்கண்
மேவிய தோர்வடு வன்றி வடுவாக

வேறிலை காணெனை வந்து
நீசவி யாதுகொ ளென்று
வீடணர் கூறம கிழ்ந்த பெருமானே.

உரை :—பகைமை கொண்ட போரில் இறந்து தேரினின்றும் கீழ் முகமாக விழுந்த மாயங்களைச் செய்த இராவணனாகிய உயர்ந்தவனுடைய முதுகினுள் ஒளியுள்ள தழும்பைக் கண்டு நீ நாணி, 'என் வெற்றி குற்ற மடையுமே' என்று உளம் நொந்து தளரும் போழ்து, விபீடணன் அக் குறிப்பை யறிந்து, "முன் இவன் திசைகளை வென்ற போது திசை யானை கள் எட்டும் பாய அவற்றின் முப்பத்திரண்டு கொம்புகளும் இவன் மார்பிற் புக, அவ் வியானைகள் தங்கள் கொம்புகளைப் பிடுங்கிக் கொள்ளும் ஆற்ற லின்றி இவன் மார்பில் தொங்க, அக் கொம்புகளை அரத்தால் அறுத்த பின்னர், யானைகள் விலகிப் போக, ஒடிந்த அக் கொம்புகள் இவன் மார்பி லேயே தங்கி யிருந்தன; முதனாட் போரில் அனுமான் இவன் மார்பில் குத்திய போது அக் கொம்புகள் மார்பினின்றும் உருவி முதுகினிடத்தே விழுந்துள்ளன; அதனா லுண்டானவையே இவ்வடுக்க ளன்றிப் புறங்காட்டி யோடிய வடுவல்ல" வென்று தெளிவித்து, "அருகில் அவற்றைக் கண்டு வெறுக்காமல் உடன்பட்டுக் கொள்க" என்று சொல்ல மகிழ்ந்தருளிய பெருமானே; நான், நூறாண்டுகளிருந்து வாழ்வுகளெல்லாம் அடைந்து நுகர்ந்தும், இறப்பதே உறுதி யென்பதை யறியாமல் என்றும் அழியா திருப்பேனென்று தருக்குற்றும், அற நூல்களின் நெறிக ளெல்லாவற்றை யும் சினந்து தள்ளியும், மிக்க பெருமையுடைய பெரியோர்களை இகழ்ந் தும், பலவகையான காற்சிலம்புகளை யணிந்த செம்பொன் நிறமான காலை யடைய பெண்களின் சூழலில் என் உள்ளத்தை ஓட்டிப் புகுத்தியும், பெரி யோர் சிறியோர் என்னும் எவரோடும் வேற்றுமையின்றிப் பகைத்தும், உலகவர் பழிக்கும் தூறுகளில் அழியும் தன்மையால் எவரும் துணையற்ற தமியன்; இத்தகைய நான் நின் அடியார்களைப் போல், வளைந்த எழுலக மும் அளந்த நின் திருவடித் தாமரைகளில் வந்து விழுந்து என் தலையில் அவற்றைச் சூட்டிக் கொண்டு பற்றற்று மெய்யறிவு பெற்று வாழ்வேனோ?

இராமபிரான் தனியாண்மை யுடையவராதலால்; இராவணன் முதுகி லிருந்த வடுக்களைக் கண்டு அவனைத் தாம் கொன்றது ஆண்மைக்கு இழுக் காகுமெனக் கருதி நாணினார்.

'ஏறுண்டவர் நிகராமெனிற் பிறர்மிச்சலென் றிசையான்' (சிந். 2261) எனக் கூறியிருத்தலுங் காண்க.

தான தந்தன தந்த
தான தந்தன தந்த
தான தந்தன தந்த தனதான

290. நேமி யுங்குளிர் சங்கு
மான தண்டமு மந்த
நீல மஞ்சினை வென்ற எழில்தானும்
நீயு மம்புய மங்கை
பேர்பெ றுஞ்சக மங்கை
நேரி லங்கிரு பெண்கள் புடைசூழச்
சாம ரங்களு நின்று
வீச ரம்பைய ரண்டர்
தாமி றைஞ்சிட வந்து தமியேனைச்
சாத னம்பெறு தொண்ட
னுமெ னும்படி கண்டு
தாளி ரண்டையு மென்று தருவாயோ
மாம யன்குல மங்கை
ராவ ணன்கிடை கண்டு
வான கம்புக முந்தி யவன்மேலே
வாய்தி றந்தழு தங்கி
மீத ணிந்தொரு தம்பி
வாழி லங்கையுள் வந்து முடிசூடித்
தூம மங்கல துங்க
வீட ணன்கவி நண்பர்
சூழ வந்திரு செம்பொன் அடிசூடத்
தூத னன்பொடு சென்று
சீதை தன்திரு முன்பு
சோப னஞ்சொல நின்ற பெருமாளே.

உரை :—இராவணன் இறந்தமை கேட்டு, பெருமை மிக்க மயன் மகளும் நல்ல குலப் பெண்ணுமாகிய மண்டோதரி வந்து இராவணன் கிடக்

கும் இடையைப் பார்த்துப் பெருந் துயரினுல் உயிரைவிட்டு விண்ணுலகடைய, அதற்கு முன் ஒப்பற்ற தம்பியாகிய வீடணன், மேல் விழுந்து வாய்விட்டழுது, அவனை ஈமத் தீயில் வைத்து உரிய கடன்களை முடித்துச் செல்வம் மிக்க இலங்கைக்குள் வந்து முடி சூடி, அகிற் புகை முதலிய மங்கலங்களோடு உயர்வுள்ள அவ் விபீடணன் சுராக்கினத்து நண்பர் சூழ வந்து பொன் நிறமான நின் சேவடிகளிரண்டையும் தன் தலையிற் சூட்டிக் கொள்ளவும், நின் தூதனுகிய அனுமான் அன்போடு இலங்கைக்குட் சென்று சீதா பிராட்டியாரின் அழகிய திருமுன் நின்று மங்கல மொழிகள் கூறவும் நின்றருளிய பெருமாளே : சக்கரமும், குளிர்ந்த சங்கும், நல்ல கதையும், அழகிய நீலமுகிலை வென்ற அழகும் கொண்ட நீ, தாமரை மலரில் வாழும் பெரிய பிராட்டியார், புகழ் மிக்க இளைய பிராட்டியார் ஆகிய ஒப்பற்ற இரு பெண்களும் நின்னிரு பக்கமும் சூழவும், வெண்சாமரை வீசும் அரம்பையரும் இமையவரும் வணங்கவும் வந்து, ஆருமற்ற வென்னைத் திருமண், திருத்துழாய் முதலிய குறிகளைத் தரிப்பித்து இவையே அடிமை முறியாகப் பெறும் அடிமைத் தன்மை யென்று சொல்லுமாறு செய்து நின் திருவடிகள் இரண்டையும் எனக்கு என்று தருவாயோ ?

மண்டோதரி தலைக் கற்புடையவளாதலின் தன் கணவன் இறந்தமையைக் கண்டவுடனே உயிர் நீத்தனள்.

தனதனன தத்தனன தந்த
தனதனன தத்தனன தந்த
தனதனன தத்தனன தந்த தனதான

291, மதியொடுது திக்கினுமி ருந்துன்
அழகியசு ரித்திரம டங்க
வளமுறவு ரைக்கினும் விளம்பு மதுகேளா
மனமுருகி நிற்கினுமு னன்பர்
உறவதுப டைக்கினு மிருந்த
வரிசையு மணத்தழகு நின்ற பெருவாழ்வும்
நிதியுமுயர் சத்தியுநி றைந்த
பலகலையு நட்புடைய மங்கை
நிலைபெறுமகிழ்ச்சியும்வி ளங்கு சிறுவோரும்
நிறைபொறையு முத்தமகு ணங்கள்
முழுதுமழி வற்றதொரு டம்பும்
நிலமிசைய ளித்துயர்வை குந்தம் அருள்வாயே

முதிர்சினநெ ருப்பெழவ ழன்று
கொடியதொரு சுக்கிரிப னன்று
முதல்வனைமு டித்திடவு வந்து பொருபோதும்

மூழுதுணர ரக்கர்பதி வந்து
தமையனைவெ றுத்தமர்க டந்து
முடியரசு பெற்றடிப ணிந்து வருபோதும்

பதியரசி ருப்பதுது றந்து
கொடியதொரு வற்கலைபு னைந்து
பரிவொடு நினைத்தழுத டங்கு துறவோடே

பழுதறுக னற்குள்முன்வி ளங்கி
ஒருதனியி ருப்பினிலி ருந்த
பரதனைநி னைத்துருகு மெங்கள் பெருமாளே.

உரை :—முன் முற்றிய சினத்தால் நெருப்புத் தோன்றுமாறு சுழன்று கொடியவனான ஒப்பற்ற சுக்கிரீவன், தன் தமையனாகிய வாலியைக் கொல்ல மகிழ்ந்து போர் செய்த போதும், எல்லாமறிந்த அரக்கர் கோனாகிய விபீடணன் தன் தமையனை வெறுத்துவந்து உம்மையடைந்து போரைக் கடந்து முடியும் அரசும் பெற்று நின்னை வணங்கவரும் இப் போதும், திருவயோத்தியில் அரசிருத்தலைத் தவிர்த்துக் கொடிய ஒரு மர வுரியை யுடுத்து உன்மேல் அன்பு கொண்டு நினைத்து நினைத்து அழுது அடங்கிய தவக்கோலத்தோடு, குற்றமற்ற நெருப்பில் விழுவேனென்று கருதி அந் நெருப்பின் முன் விளங்கி ஒருவனாக ஒப்பற்ற இருப்பில் இருந்த பரதனை நினைத்துத் திருவுள்ள மிரங்கிக் கரைந்துருகிய எங்கள் பெருமாளே ; நின்னை நல்லறிவோடு பரவினாலும், நின் அவதாரப் பெரு மைகளை யெல்லாம் வளப்பமுறக் கூறினாலும், அங்ஙனம் சொல்வதைக் கேட்டுக் கல்மனம் கரைந்து நின்றாலும், நின் அன்பர்களை யுறவு கொண்டா லும் எனக்கு மிக்க அழகும், நல்ல வரிசையும், அழியாமல் நின்ற பெரு வாழ்வும், செல்வமும், உயர் வலிமையும், நிறைந்த பல கலைகளும், நட் புள்ள பெண்ணாற் கெடாது நிலை பெறும் மகிழ்ச்சியும், நல்லவர் என்று எங்கும் விளங்கும் மக்களும், நிறைந்த பொறுமையும், நற்பண்புகள் பல வும், துன்பமற்ற ஒப்பில்லாத நல்லுடலும், இந் நிலவுலகில் தந்து அதன் மேல் உயர்ந்த வைகுந்தத்தை அருள்வாய்.

இராமன், பரதன் குண நலங்களைப் பெரிதும் பாராட்டுபவன். சுக்கிரீ வன், விபீடணன், ஆகியவர்களைவிடச் சகோதர வாஞ்சை மிக்கவன் என்று கருதி மேன்மைப் படுத்தியதனால்,

"பாதனை நினைந்துருகு மெங்கள் பெருமானே"

என்றார்.

தானதன தந்தன தானதந் தந்தனன
தானதன தந்தன தானதந் தந்தனன
தானதன தந்தன தானதந் தந்தனன தனதான

292. வீசுமிரு கண்களே வேல்களென் றுங்களப
வாசமுறு கொங்கையே மேருவென் றுந்தொடையல்
வேரியள கங்களே மேகமென் றுங்கரிய கொடிபோலே

மேவுபுரு வங்களே சாபமென் றுங்குருகின்
ஓசைதரு கண்டமே கோடதென் றும்புளகம் [பால்
வீறுகமை யங்கமே தோள்களென் றும்பரவி மடவார்

நேசமுறு தொண்டனு பாதன்வஞ் சன்கபடன்
மானமுறு பண்பிலான் மோகிவம் பன்கயவன் [யான்
நீசனச டன்பரா தீனநெஞ் சன்கொடிய வினையேன்

நீதிநிலை நின்றுஞா னேதயங் கண்டுனது
காவிரிய ரங்கமா கோவிலின் சந்ததமும்
நீதிருவ னந்தன்மே லேவிளங் கும்புதுமை நினைவேனோ

தேசுடையி லங்கையூர் வீடணன் சென்றுமுடி
சூடியுடன் வந்துதாள் மீதிறைஞ் சும்பொழுது
சீர்பெறந டந்துநீ ராவணன் பண்டுசிறை யிடவாடும்

சீதையையென் முன்கொடே போதியென் றங்கருள
வீறுடுகொ ணர்ந்ததோர் காலையின் பொங்கியெழு
தீமூழ்கி வந்துபா தாரவிந் தங்கள்பெறு திருநாளில்

கேசவமு குந்தசீ ராமவுன் சிந்தைமகிழ்
சானகியை யெங்கள்மா தாவையின் றன்பினொடு
கேண்மையுற முன்புபோல் மேவுகென் றண்டர்புகல்
சபையூடே

கேகயன்ம டந்தையே தேவியென் றும்பரதன்
நீடுகுல மைந்தனே யாகுமென் றும்பழைய
கேள்வியுறு தந்தைபால் நீள்வரங் கொண்டுவரு
பெருமாளே.

உரை :—ஒளி மிக்க இலங்கை மாநகரில் வீடணன் சென்று முடிசூடி வந்து நின் திருவடிகளை வணங்கும் போது, அவனை நோக்கி, "நீ சிறப் புண்டாகுமாறு இலங்கைக்குப் போய் இராவணன் முன்னர்ச் சிறைவைத்த தால் வாடிக் கிடக்கும் சீதையை என் முன் கொணர்க" என்று சொல்லி யருள, அங்ஙனமே வீடணன் சென்று பிராட்டியாரை அணி செய்வித்துப் புட்பகத்திலேற்றிப் பலவகைச் சிறப்புக்களோடும் கொணர்ந்த போது, நீ சினங் கொள்ள, அப்போது இளையவன் வளர்த்தலாற் பொங்கி யெழும் தீயில் பிராட்டியார் மூழ்கி நின்பால் வந்து, நின் திருவடிகளைப் பெற்ற நன் றுளில், விண்ணவர்கள், "கேசவா, முகுந்தா, இராமா என்றுன்னைப் புகழ்ந்து 'நின் உள்ளம் மகிழ் கொள்ளும் பிராட்டியாராகிய எங்கள் தாயை இப்போது அன்புடன் முன்போலவே நட்புப் பொருந்துமாறு கூடியிருப்பாய்', என்று கூற அவ்விண்ணோர் கூட்டத்தில் அமர்ந்திருந்த தசரத மன்னனை நீ வணங்கி, "கேகயன் மகளை நின் மனைவி யென்றும், பரதனை உயர்ந்து பழமை மிக்க மனுகுலத்துக்குரிய நின் மகனென்றும் ஏற்றுக் கொள்க" வென்று சொல்லி, (பழைய கேள்வியையுடைய நின் தாதையை) வேண்டி வரம் பெற்றுப் பிராட்டியாரை மனைவியாக ஏற்றுக் கொண்டு வரும் பெருமாளே; நான், பெண்களைக் கண்டு மயங்கி, சுழன்று வீசும் இரு கண்களே வேல்கள் என்றும், சந்தனக் குழம்பாகிய களபத் தால் மணம் வீசும் நகில்களே மகாமேரு மலைகளென்றும், பூமாலை யணிந்து மணமிக்க கூந்தலே முகிலென்றும், கருங் கொடிபோல் நிறமும் உருவும் அமைந்த புருவங்களே வில்லென்றும், எட்டுப் பறவைகளின் ஒலிபோன்ற ஓசையை யெழுப்பும் கழுத்தே சங்கென்றும், கரும்பின் உறுப்புக்களே புளகமிகும் தோள்களென்றும், புகழ்ந்து கூறி அவர்கள் பால் அன்பு கொண்டு அடிமையானவன்; எல்லோராலும் புறக்கணிக்கப்பட்டவன்; வஞ்சகன்; கபடன்; பெருமையில்லாதவன்; நற்குணமற்றவன்; ஆசை மிக்கவன்; தீச்சொற்களையே பேசுபவன்; கள்வன்; இழி செயல் புரிப வன்; அசடன்; பிறர் வயப்பட்டு நடக்கும் உள்ளமுடையவன்; இத் தகைய கொடிய பாவியாகிய நான் இப் பொல்லாங்கெல்லாம் நீங்கி, நூல் கள் கூறும் நெறியில் நிலைத்து, மெய்யறிவு பெற்றுத் திருக்காவிரி யாற் றின் நடுவிலுள்ள திருவரங்கமென்னும் பெரிய கோயிலுள் நீ என்றும் திருவனந்தாழ்வான் மேற் பள்ளிகொண்டருளி விளங்கும் புதுமையை நினைந்திருப்பேனோ?

தனந்தன தானன தத்த
தனந்தன தானன தத்த
தனந்தன தானன தத்த தனதான

293. நயந்தொரு கோவைவெ ளுக்க
அகன்றிடு பார்வை சிவக்க
நலம்பெறு மேனிது வட்சி வடிவாக
நறுங்குழல் சோரவ ணைத்து
முழங்குபு ளோசையெ ழுப்பி
நடுங்கிய நூலிடை யுற்ற துகின்மாற
முயங்குப டீரவி சித்ர
தனங்களின் மூழ்கிர மிக்க
முகங்களி லேமுகம் வைத்து நெடுபோகம்
முதிர்ந்திட வேசுர தத்தின்
மடந்தைந லார்வச முற்று
முரண்படு மாயமொ ழிப்ப தொருநாளோ
வியன்பகை சேரமு டித்து
நிறைந்திடு சேனைய னைத்தும்
விளங்கிய போதுநி னைத்து நமனார்மேல்
வெகுண்டனு மானைவி டுத்து
நடுங்கிவ லாரிய தைக்க
மெலிந்துச ரோருக னிற்க அனைவோரும்
மயங்கவு தாகிபி றக்க
எழுந்துழி யாதப தத்தின்
மகிழ்ந்துறை யாதியி டத்தின் உடன்வாழும்
வசந்தனை மீளவ ழைத்து
நெடுங்கவி ராசர்த மக்கு
வரும்படி வாழ்வுகொ டுத்த பெருமாளே.

உரை:—இவ்வாறு பெரிய பகை முழுதையும் முடித்து வந்து நிறைந்த குரங்குப் படைகள் எல்லாவற்றையும் கண்டு எல்லார் பேரும் விளங்க இருத்தலைத் தெரிந்து வரும்போது, ஒருவனைக் காணாமையால் அவன் வசந்தனென்று நினைத்து, நீ எமன் மேற் சினந்து அனுமானை

அனுப்பி, இந்திரன் நடுங்கிப் பதைக்கவும், தாமரை மலரில் வாழும் நா
முகன் அஞ்சி உள்ளம் சோர்ந்து நிற்கவும், மற்றையோர் எவரும் மயங்கவு
கெட்ட குறிகள் பிறக்கவும், பிறந்து இறத்தலில்லாத திருவைகுந்தத்தி
மகிழ்ச்சியோடிருக்கும் ஆதிமாயவனிடத் துள்ளவர்களோடு கூடி இன்ப
நுகர்ந்திருக்கும் அவ்வசந்தனை மீள அழைப்பித்து உயர்ந்த கவிக்கரசாகி
சுக்கிரீவனுக்கு வரத்தக்கதாகிய வாழ்வைக் கொடுத்தருளிய பெருமானே
நான் பெண்கள்பால் மயங்கி அவர் தம் ஒப்பற்ற கொவ்வைக் கனிபோ
சிவந்த உதடுகள் வெளுக்க வுமிழ் நீரைச் சுவைத்துண்டு, கண்கள் சிவக்
நுகரும் இன்ப நுகர்ச்சியால் உடல் துவளக் கட்டியணைத்து, மணமுள்
கொண்டையவிழ முத்தமிட்டு, எட்டுப் பறவைகளின் குரல் போன்
ஒலியை அவர்கள் கழுத்தினின் றெழுப்பி, துவளும் நூல் போலும் இடை
யிலுள்ள உடையை அவிழ்த்து, இறுகத் தழுவப்பட்ட சந்தனம் பூசி
பேரழகுடைய நகில்களில் மூழ்கிக் கூடியிருக்க முகத்தோடு முகம் வை
துப் பலவகைப்பட்ட கலவிகள் செய்தலினுல் அறியாமையையே இயல்ப
கக் கொண்டவன்; இத்தகைய நான் பெண்களின் வயப்பட்டு நிற்கு
வலிமை மிக்க மாயையைத் தொலைத்து வாழ்வது எந்நாளோ? அதனை
இப்போதே செய்தல் வேண்டும்.

படீரம்—சந்தனம். உதாகி—மேல் நோக்கி எரியும் கொள்
யாகிய கெட்ட குறி.

தந்தன தான தந்த
தந்தன தான தந்த
தந்தன தான தந்த தனதா

294. தந்தவ ரேப்ர தாபர்
நின்றவ ரேவ்ரு தாவர்
சந்தய மேது நீதி எனவோதி
சண்டையி டாவி டாமல்
உண்டுமி லாது பேசு
சஞ்சல கார னாகி உழல்வே
கந்தையி டாம லீனர்
பந்திபு காமல் வேறு
கண்டது கூறி டாமல் அறியோனை
கன்றியி டாம னாளும்
மங்கல வாழ்வி னோடு
கங்கைகொள் பாத மேவ அருள்வா

வந்துபு ராரி வேதன்
அண்டர்ப ராவி யேக
வஞ்சிப தாதி சேடன் இவரோடே
மண்டுவி மான மேறி
லங்கையெ லாமு லாவி
வண்கடல் சேது மேன்மை உரையாடி
அந்தர மீதி லேகி
நன்கவி ராச ரூரில்
அன்புள மாத ரார்கள் அனைவோரும்
அம்புய மாதி னோடு
மங்கல வாய்மை பேசி
அங்கவர் சூழ மேவு பெருமாளே.

உரை :—முப்புரங்களை அழித்த சிவபெருமானும், வேத முதல்வனான நான்முகனும், இமையவரும் வந்து நின்னை வணங்கிப் போற்றித் தத்தம் இடங்கட்குச் செல்ல, சீதாபிராட்டியார், குரங்குப் படைகள், விபீடணன், இளைய பெருமாள் ஆகியவர்களோடு, மிக விரைந்து செல்லும் புட்பக விமானத்திலேறி, இலங்கை முழுதும் சுற்றித் திரிந்து, போர்புரிந்த முறைகளை யெல்லாம் பிராட்டிக்குக் காட்டி, அப்பால் வடதிசைக்கண் செல்லும் போது வளம் பெற்ற கடலிற் கட்டிய சேதுவின் சிறப்புக்களை விரித்துரைத்து, விண்ணிலிருந்தவாறே கிட்கிந்தையையுங் காட்டி, பிராட்டியாரின் வேண்டுகோளின்படி, அனுமானை அனுப்பி வானரமகளிர் அனைவரையும் வரச் செய்து விமானத்திலேற்றி, அப் பெண்களெல்லாம் பிராட்டியாரோடு மங்கல மொழிகள் பேசி மகிழ்ந்து சுற்றியிருக்க விமானத்தில் சென்றருளிய பெருமாளே; 'பிறர்க் கீந்தவர் புகழுக் குரியார்; ஈயாது நின்றவர் பயனற்றவர்; இதற்கு ஐயமில்லை; நூல்களிற் கூறப்பட்ட நீதி' என்று சொல்லிச் சண்டையிட்டுச் செல்வர்களை விடாமற் சில பெற்று உண்டும், வறுமையைக் கூறியும் திரியும் உள்ளக் கலக்கம் உடையவனாய் நான் உழன்று அலைவேனோ? அங்ஙனம் அலையாமலும் கந்தையை இடையில் உடாமலும், இழிந்தவர் கூட்டத்திற் புகாமலும் கண்டவாறு பிதற்றாமலும் வறிஞனாகி நொந்து திரியாமலும் என்றும் மங்கலமான செல்வத்தோடு, கங்கை யாற்றைத் தோற்றுவித்த நின் திருவடிகளிற் சேரும் நலத்தை அருள்வாய்.

வஞ்சி—சீதை. சேடன்—இலக்குவன். பதாதி சேடன் எனக் கூறியதால் விபீடணனையும் கொள்ளுதல் வேண்டும்.

தனதன தனத்த தானந்த
தனதன தனத்த தானந்த
தனதன தனத்த தானந்த தனதா

295. மூழ்துல களிப்ப ரோவிந்த்ர
பதவியி லிருப்ப ரோமுந்தை
முனிவரொ டுநிற்ப ரோகங்குல் வெளியா

முதிர்கதிர் விரிப்ப ரோசந்த்ர
வடிவது படைப்ப ரோவஞ்சு
முகமொடு சிறப்ப ரோவெண்டி சையினூடே

அழகுபெ றுகிற்ப ரோமுந்தி
எழுபுவி புரப்ப ரோவின்ப
அதிவித விசித்ர வேளென்று திரிவாரே

அடியவர் தமக்கு நீயெந்த
உயர்பத மளிப்பை யோவுன்றன்
அருள்செறி மகப்ர சாதங்கள் அறிவார்யா

எழுபது வெளத்தி ளுல்விஞ்சு
கவிமுழு துமொக்க வேகொண்டி
ரதமது விடுத்து நேர்வந்து திருமாது

இளவலு முவப்ப வேநின்று
பழையமொ ழிதப்பொ ணுதென்றி
ரவிமக னரக்கர் கோனெஞ்சு களிகூர

பழுதறு பரத்து வாசன்ற
னணிமல ரிருக்கை போயன்று
பசிகெட வமைத்த தோருண்டி நுகர்போதில்

பரிவொடு க்ருபைக்க ளுல்வென்றி
அநுமனை விளித்து நீசென்று
பரதனை யழைத்து வாவென்ற பெருமாளே

உரை :—எழுபது வெள்ள மென்னும் இலக்கத்தால் விஞ்சிய குரங்குப் படையும் அவர் தம் பெண் படையும் ஆகிய எல்லோரையும் கூட்டமாக ஏற்றிக் கொண்டு, புட்பகத்தை விண்ணிற் செலுத்திச் செவ்வனே வந்து, முன்னர்ப் பிராட்டியும் இலக்குவனும் மகிழுமாறு அருளிய பழைய

சொற்கள் பழுதாக லாகாவெனக் கருதி, கதிரோன் மகனாகிய சுக்கிரீவனும் அரக்கர் கோனாகிய விபீடணனும் உள்ளம் களிகூரக் குற்றமற்ற பாரத்து வாச முனிவருடைய அழகிய இடமகன்ற பர்ண சாலையில் இறங்கித் தங்கி அன்று அவர் பசிதீரச் சமைத்த ஒப்பற்ற உணவை உண்ணும் போது, அன்புடன் வெற்றி மிக்க அனுமானை அருட் கண்ணால் விளித்து, 'நீ நந்திக் கிராமத்திற்குப் போய்ப் பரதனை அழைத்து வா,' வென்றருளிய பெருமானே ; நின் அடியார்கள் உலகம் யாவையும் படைத்து நான்முகனாவார்களோ ? இந்திர பதவியில் இருப்பார்களோ ? பழமையாயிருக்கும் முனிவரர்களோடு இருப்பார்களோ ? உலகெங்கும் கதிர்களை விரித்துக் கதிரவனாவார்களோ ? திங்களின் வடிவைப் பெறுவார்களோ? ஐந்து முகங்களோடு உருத்திரனாகிச் சிறப்பாய் இருப்பார்களோ ? எட்டுத் திசைகளிலும் காவல் செய்யும் அழகுடன் இருப்பார்களோ ? முதன்மையாகி ஏழுலகங்களையும் ஆளும் அரச ராவரோ ? இன்பமுள்ள பலதிறப்பட்ட பேரழகுகள் படைத்த மன்மதனாவார்களோ ? நீ அவர்கட்கு எந்த உயர் பதவியைத் தருவாயோ? நின் அருள் நிறைந்த பெரிய நற்பலன்களை ஈயும் தன்மையை அறிவார் யார் ? எவருமிலர்.

தனன தான தந்த தந்த
தனன தான தந்த தந்த
தனன தான தந்த தந்த தனதான

296. சினமொ டேவெ குண்டெ டிர்ந்து
கொடுமை யாயி கழ்ந்தி யம்பு
சிறுமை யேது நெஞ்சு கிஞ்சில் உணராதே
தெளிவு தானு மின்றி யிந்த
வெகுளி யாளன் வெந்த பின்பு
திணமு மேயெ ரிந்த கும்பி நரகூடே
தனிமை யாய்வி ழுந்த ழுந்தி
விடுவ னேகொ லென்றி ரங்கு
தகுதி யோர்நி றைந்தி ருந்த சுகமீதே
தரும மியாவை யுந்து றந்து
கொடிய னேனு நின்ற பண்பு
தனைவி டாம லைம்பு லன்கள் நகையாவோ
கனவின் மூழ்க வென்று முந்தி
வலம தாக வந்து நின்ற
கருணை மேனி கண்டி ரங்கி ஒருநாதன்

கடிதி னேகி யங்கி கொண்ட
குழியி லேவி ழுந்தெ ழுந்து
கரிய தாக முன்பி சைந்து தொழுபோதில்

புனித மோதி ரங்கை கண்டு
மனது தேற லங்கை கொண்ட
புதுமை கூற வங்கு ணர்ந்து தரியாதே

பொழுதி லேந டந்து வந்து
பரத னர்வ ணங்க நின்ற
புகழி ராம சந்த்ர வெங்கள் பெருமாளே.

உரை :—அனுமான் விடை பெற்றுப் போக, அங்கு நந்தியம்பதியில் தங்கியிருந்த பரதன், "பதினான்காண்டுகள் இன்றுடன் கழிந்தன; இன்னும் என் தமையனார் வாராமையால் தீயிற் குதித்தல் வேண்டு"மென்று தீ மூட்டச் செய்து, அதனை வலம் வந்து விழுதற்கு நிற்க, அருள் வடிவான அப் பரதனை விண்ணில் வரும் அனுமான் கண்டு அழுது மிக விரைந்து சென்று, நெருப்பை நிறையக் கொண்ட அக் குழியில் விழுந்து எழுந்து நெருப்பைக் கையாற் பிசைந்து கரியாக்கி அவனை வணங்கிய போது, கொடுத்த மோதிரத்தைப் பரதன் கையில் வாங்கிக் கண்களாற் கண்டு அது தன் தமையனா ருடையதே யென்று உறுதிப்படுத்தி, இலங்கை வெற்றியாற் பெற்ற சிறப்பை அனுமானே சொல்லக் கேட்டு நன்கறிந்து, ஒரு நொடியும் அங்கே தங்காமல் நடந்து வந்து வணங்க நின்றருளிய புகழ் மிக்க இராமசந்திரா, எங்களுடைய பெருமாளே; யாரோடும் சிறிது சினங் கொண்டு மிகப் பகைத்து எதிர்த்துக் கொடுமையாகப் பழித்துக் கூறும் கயமைப் பண்புடையனாய், தீமையை எள்ளளவும் நெஞ்சில் அறியாதவனாய்த் தெளிவின்றிச் சினமே மிக்குள்ள இவன், இறந்து இவனுடல் நெருப்பில் எரிந்த பின், நாடோறும் ஓய்வின்றி யெரியும் கும்பி பாகமென்னும் நரகில், முன் இவனால் பிழைப்பை அடைந்தவர் ஒருவருமின்றித் தனியாய் விழுந்தழுந்துவான். எப்போது கரையேற்றப்படுவேனோ? என் றழுகின்றவரும் வேதம் முதலிய நூல்களிற் கூறப்பட்டவாறு தகுதியற்ற செயலை விட்டுத் தக்க நற்செயலைச் செய்தவர்களுமான பெரியோர்கள் நிறைந்திருந்த நிலத்தில், எல்லா அறங்களையும் விட்டுத் தீமை செய்த நாளும் நாணமின்றி நிலைத்திருக்கும் அழகைக்கண்டு, பெரியோர்கள் உள்ள இடத்தில் இப் பாவியும் உளனே! யென்று நினைத்து என் புலன்கள் ஐந்தும் தமக்குள் இகழ்ந்து நகையாவோ?

அருள் மிக்க பெரியோர்கள் பிறர் படும் இன்னலுக்காக இரங்கிக் கூறுதல் இயல்பென்க.

தனனா தாந்தன தந்தன தந்தன
தனனா தாந்தன தந்தன தந்தன
தனனா தாந்தன தந்தன தந்தன தனதான

297- நெடுவா னார்ந்தக டுஞ்சிலை யங்கத
னிடையே சார்ந்தத டிந்துவி யன்கிரி
நெறியே சேர்ந்துப ரம்பிவ ரும்புயல் வெயிலோன்முன்
நிரையே சூழ்ந்திடு மென்பனி தண்புனல்
நிறைவே யாம்பசு மண்குட மந்தர
நெறியே யாங்கெரி செங்கன லங்குமி ழின்நேரம்
உடலே யீங்குநி ரந்தர முஞ்சுமை
எனவே யோம்பிய னந்தநி னைந்துளம்
உலையா யாங்குத யங்குவ மென்றுயிர் நிலையாதே
உழல்வேன் மூங்கையன் வஞ்சகன் வெஞ்சினன்
வினையே நீங்கியு னன்பரி டந்தனில்
ஒருநா ளீண்டிய றிந்துபெ ரும்பதம் அடைவேனோ
சடையே தாங்கியு மிந்திரி யங்களை
ஒருவா றூண்டுமி ரங்கிநி னைந்துடல்
தளர்வாய் நீங்கிய வின்பசு கங்களொ டிருபாதம்
தலைமே லேந்தியு நந்திபு ரந்தனில்
அமரா லூண்சுவை கண்டுயி லென்பவை
தவிரா மூண்டெழு சிந்தைநெ டுந்துயர் அதனோடும்
படியே வேண்டுத லன்றியு மொன்றிய
கனலூ டாழ்ந்திட வென்றுநி ரம்பிய
பழியே பூண்டதி தென்றுத விர்ந்திடும் எனநாளும்
பாதாழ் வான்புரி கின்றபெ ருந்தவ
நிலையா வோங்கிர தந்தனி லன்பொடு
பதினா லாண்டினில் வந்துமு னின்றருள் பெருமாளே.

உரை :—நீ காட்டிற்கு வந்த பின் பரதன் பதினான்காண்டுகளாக உடல் முழுதும் தளர்ந்தும் தலையிற் சடையைத் தரித்தும், ஐம்புலன்களை ஒரு வழிப் படும்படி அடக்கி ஆண்டும், நின்னை நினைந்து உடலெங்கும் இளைத்தும், நுகரத்தக்க போகங்களனைத்தையும் வெறுத்தும், நின் பாதுகைகளிரண்டையும் தலைக் கணியாகச் சூட்டியும், நந்தியம் பதியில் இருந்து

உணவு, இன்பம், துயில் என்பவற்றை விட்டும், மூண்டெழும் உள்ளக் கவலையோடு உலகை ஆள விரும்புதலை வெறுத்தும், ஒருமிக்க எரியும் நெருப்பில் மூழ்குதலை விரும்பியும், நின்னோடு காட்டிற்குச் செல்லாது நாட்டிலே தங்கியிருந்த செயல், நிரம்பிய பழியைப் பூண்டதாகு மென்று நினைத்து இஃது என்று தீருமோ வென்று கவன்றும் இடைவிடாது நாடோறும் செய்யும் தவத்தை எண்ணிப் பார்த்து, புட்பக விமானத்திலேறி அன்புடன் பதினான்காவது ஆண்டின் முடிவில் அப் பரதனுக்கு முன்னே வந்து நின்றருளிய பெருமாளே ; நீண்ட முகிலில் அமைந்த வில்லையும், அம் முகிலிற் சேர்ந்த மின்னையும், நெடிய மலை வழியிற் சேர்ந்து வரும் முகிற் கூட்டத்தையும், கதிரவன் முன் வரிசையாக வளர்ந்த மெல்லிய பனி நீரையும், குளிர்ந்த நீர் நெருங்கி நிறைந்த பசு மட்குடத்தையும், விண்ணில் எரியும் நெருப்பையும், நீர்க் குமிழியையும் நிகர்த்துத் தோன்றி மறையும் உடலை ஓய்வின்றிச் சுமந்து அதனைப் போற்றி அளவற்ற செயல்களை நினைந்து நினைந்து நெஞ்சம் புண்ணாக உழன்று உயிர் ஒரு நிலையில் நில்லாமல் எங்குச் செல்வதென்று அறியாமல் போக்கொடு வரவாக அலையும் நான்[1] மூடமன் ; வஞ்சகன் ; கொடுஞ் சினமுள்ளவன் ; இத்தகைய பாவியாகிய நான், இச் செயல்களை விட்டு நினது அன்பாகிய அடியார்களிடத்து ஒரு நாளேனும் கூடி, அறிய வேண்டுவனவற்றை யறிந்து பெருமை மிக்க பரமபதத்தை அடைவேனோ ? சொல்லுக.

தனதன தான தந்த
தனதன தான தந்த
தனதன தான தந்த தனதான

298. மனுநெறி யோட டந்தும்
அறிஞரொ டேப யின்றும்
மறைகளெ லாமு ணர்ந்தும் இருபோதும்
வருபுன லேப டிந்தும்
விரதமெ லாம டைந்தும்
வசையற வோசை கொண்டும் அலையாதே
இனிமையி னோடு சிந்தை
வெகுளியெ லாமு ணிந்தும்
எனதுன தாரி தென்கை யிவையாவும்
இருளற வேதெ ளிந்து
தொழுதுனை நாடு மன்பர்
இணைபிரி யாத வின்பம் உறுவேனோ

அனுமனை யேவி நின்று
பரதனை யேகொ ணர்ந்த
அளவினி லேகி நந்தி புரமேவா
அருமறை சேர்ச டங்கின்
மயிர்வினை தான்வி ரும்பி
அழகிய தேரின் மந்த்ரி கொடுபோகத்
தினகர சேயு மந்த
நிருதர்பி ரானும் விஞ்சு
திறலனை வோரும் வந்து புடைசூழத்
திருவொடும் வீறு கொண்ட
படையொடு மூர்பு குந்த
திசரத ராம வெங்கள் பெருமாளே.

உரை :—அனுமானை நந்தியம் பதிக்கு அனுப்பிப் பரதனை அழைத்துக் கொண்டு வரச் செய்த அவ்வளவில் நீ நந்தியம் பதியை யடைந்து ஓதவரிய மறை நூல் வழியிற் சேர்ந்த சடங்கினால் மயிர் நீக்கும் வினை முடிப்பிக்க விரும்பிப் புட்பக விமானத்தைக் குபேரன்பால் அனுப்பிவிட்டு, முன்னின்ற தேரின் மேலேறியதும் சுமந்திரன் அதனை ஓட்ட, கதிரோன் மைந்தனான சுக்கிரீவனும் அரக்கர் பதியாகிய அழகிய விபீடணனும் பெருந் திறல் படைத்த குரக்கு வீரர்களும் அவர் தம் மனைவியரும் தேர், யானை, குதிரை, (பல்லக்கு) சிவிகை முதலியவற்றில் தக்கபடி ஊர்ந்து சுற்றி வர, பரதன் வெண் கொற்றக் குடை கவிக்க, இளையவர் இருவரும் இருபுறமும் கவரி வீச, பிராட்டியாரோடும் அறுபதினாயிரம் எண்ணுடைய அக்குரோணிப் படைகளோடும் அயோத்தி நகர்க்குள் சேர்ந்த திசாதர் (திசைகளிற் றேரைச் செலுத்தவோர்) மைந்தனான இராமா ; எங்கள் பெருமாளே ; மனு நூலிற் கூறியவாறே யொழுகியும், கற்றறிந்த விழுமியோரோடு பழகியும், நான்மறைகளையும் ஓதியுணர்ந்தும், காலை, நண்பகல் என்னும் இருபோதும் நீர்க்குள் மூழ்கியும் விரதங்களை மேற் கொண்டு முடித்தும், குற்றமற்ற தீனைத் நோன்புகளைக் கொண்டும் நின் திருவடிகளிற் சேரலாமென்று அலையாமல், இனிய கலன்களோடு உள்ளத்தில் சினத்தை வெறுத்து எனது, நினது, எவருடையது என்னும் அறியாமை நீங்கி, யாவையும் நின்னுடையனவே யென்று தெளிந்தும் நின்னை வணங்கியும் நினைத்தும் அன்பு பூண்டுள்ள நின் அடியார் குழுவினிற் கலந்து இணை பிரியாத வின்பத்தைப் பெறுவேனோ ? சொல்லுக.

'திசாதர்' என்பது மோனைக்காகக் கொள்ளப்பட்டது. ஓசை யென்பதற்குப் புகழ் என்பதும் பொருளாகக் கொள்க.

தனந்தா தனந்த தத்த தத்த
தனந்தா தனந்த தத்த தத்த
தனந்தா தனந்த தத்த தத்த தனதான

299. பிறந்தான் விளங்கு தொட்டி லுக்குள்
வளர்ந்தா னுடும்பெ னக்கி டைத்தில்
பெயர்ந்தா னிருந்து பிற்று வட்சி நடையானுன்
பிசைந்தா னெடுங்கண் மைக்க ரிக்க
உயர்ந்தா னனங்க னுக்கி ரட்டி
பிறழ்ந்தான் அருந்த மிழ்த்தி றத்தின் உயர்வானுன்
சிறந்தான் மடந்தை பொற்ற னத்தில்
உறைந்தான் வெறுக்கை பட்ட வத்தை
தெளிந்தா னிரும்பி னிக்க டற்குள் நடுவானுன்
திரிந்தான் முடங்கி நெக்கு முக்கி
இறந்தா னெனும்பி றப்ப றுத்தொர்
தினந்தா னயந்த ழைத்து முத்தி அருள்வாயே
நறுங்காய் கிழங்கெ டுத்து வைத்து
வியன்சா லைபண்ப டச்ச மைத்து
நயந்தான் மிகுந்த புற்ப டுத்து மயில்போல்வாள்
நடுங்கா துநின்று நெட்ட ரக்கி
கொடுங்கா துதுண்ட மொப்ப ழித்து
நமன்போ லுமிந்த்ர சித்து வுக்கு வினையாவும்
உறும்பா சமுங்கெ டத்தொ லைத்தும்
அயன்பா ணநெஞ்சு றப்பொ றுத்தும்
உடன்போய் மகந்த லைக்கு லைத்தும் அவன்வானுள்
உடைந்தோ டவம்பி னைத்தொ டுத்தும்
இலங்கே சனும்ப்ர மிக்க நிற்கும்
உறங்காத தம்பி யைப்ப டைத்த பெருமாளே.

உரை :—காட்டில் நினக்கு மணமுள்ள காயுங் கிழங்கு மெடுத்து உண்ண வைத்தும், பெரிய பர்ண சாலையை அமைத்தும், நலமிக்க தருப்பைப் புல்லை நீ படுத்தற்குரிய பள்ளியாக்கியும், தான் தரையில் படுத்தும், நின் பெருந் தேவியாகிய பிராட்டியார் நடுங்க வொட்டாமல் நின்றும், நீண்ட அரக்கியாகிய சூர்ப்பணகையின் வளைந்த காது, மூக்கு, நகில் ஆகிய

இவற்றை யறுத்தும், எல்லா வுயிர்கட்கும் எமனைப் போன்ற இந்திர சித்தின் மாயங்களும் நாகபாசமும் அழியச் செய்தும், அவன் விட்ட மலரோன் கணையை மார்புருவத் தாங்கிப் பொறுத்தும், நிகும்பலைக்குப் போய் அவன் செய்த வேள்வியை யழித்தும், பின், அவன் வாணாள் முடிந்து கழியுமாறு அம்பைத் தொடுத்தும், இலங்கை யரசனான இராவணனும் வியந்து நிற்குமாறு ஆண்மை காட்டியும் பதினான்காண்டுகளாகத் தூங்காதிருந்த இளைய பெருமாளைத் தம்பியாகப் பெற்ற பெருமாளே; 'ஒருவன் பிறந்தான்; விளங்கும் தொட்டிலில் தூங்கினான்; உடும்புபோல் இருத்தலை விட்டுத் தவழ்ந்தான்; மன்மதனினும் இரு மடங்கு அழகுடையவனானான்; அளவிடற்கரிய தமிழ் மொழியைத் திறமையுடன் கற்றுத் அறிந்தான்; சிறந்தவனானான்; மகளிருடைய ஒன்றோடொன்று வேற்றுமை யின்றிப் பொலிந்த நகல்களிற் குடியிருந்தான்; செல்வமெல்லாம் இழந்து வெறுங் கையனாய்த் துன்புற்று இதில் ஒரு சிறிதும் இன்பமில்லை யென்றுணர்ந்தான்; பெரு நோய்க் கடலின் நடுவே அகப்பட்டான்; அலைந்து திரிந்தான்; உடல் முடங்கி வளைந்து நெக்குவிட்டுத் திணறி இருமி யிறந்தான்' என்று சொல்லப்படும் பிறப்பை அறுத்து, ஒரு நாள் என்னை நீ அன்பாய் அழைத்துப் பரமபதத்தைக் கொடுத்தருள்க.

'மலைபோல் வாள்' எனவும் பாடம்.

தாந்தனன தானா தனன
தாந்தனன தானா தனன
தாந்தனன தானா தனன தனதான

300. எந்துதிரு மார்பா சரணம்
வேங்கடசு ரார்சி சரணம்
ஈன்றுலகை யாள்வாய் சரணம் யமதூதர்

வங்கவரு வோனே சரணம்
ஓங்குமுடி யோனே சரணம்
யாம்பரவு பாதா சரணம் வினையாழி

நீந்தவிடு மாலே சரணம்
வாய்ந்ததுள வோனே சரணம்
நீண்டபுக ழோனே சரணம் உயர்கோயில்

நீங்கரிய கோவே சரணம்
வேண்டுவர மீவாய் சரணம்
நேர்தவரு ளாளா சரணம் அருள்வாயே

போந்துநக ரூடே மவுலி
தாங்கியொரு மூவோ ரிளைஞர்
பூண்டபுக ழேடே யினிது முடிசூடப்
பூங்கமலை தோளே மருவ
ஆங்கிளைய கோவா மரசு
பூண்குலவு தோளார் பரதர் முழுதாள
ஆந்துணைபு மேகா வனுமன்
வேந்துமுத லோர்வீ டணனும்
ஆந்தமத மூர்போய் மருவ விடையாவித்
தாண்டுபதி னோரா யிரமும்
ஈண்டுமுல கீரே ழினையும்
ஆண்டரகு நாதா பெரிய பெருமாளே.

உரை :—நீ அயோத்தி நகர்க்குட் சென்று முடிசூடி, மற்றைய ஒப்பில்லாத தம்பியர் மூவரும் புகழுடன் நன்முடி சூடவும், சீதாபிராட்டியார் நின் திருத் தோள்களிற் சேர்ந்து கூடியிருக்கவும், இளவரசு பட்டத்தைப் பூண்கள் விளங்கும் தோள்களையுடைய பரதனுக்காக்கி உலகம் முழுதையும் அவன் ஆளவும் செய்து, எல்லாச் செயல்களும் செவ்வையாய் முற்றுப் பெறும் வரை அங்கிருந்து போகாதிருந்த அனுமான், சுக்கிரீவன் முதலிய வானரர்களும் விபீடணனும் தம் தம் ஆட்சிக்குரிய இடங்கட்குப் போய் இருக்குமாறு விடையளித்து, திருவைகுந்தத் திலிருந்து என்றும் எல்லாவுலகங்களையும் ஆள்வதே யன்றி அயோத்தியிலுமிருந்து பதினான் குலகங்களையும் பதினோராயிரம் ஆண்டுகள் ஆட்சி செய்தருளிய ரகுநாதா, பெரிய பெருமாளே ; உயர்ந்த திருமார்பா, நினக்கு அடைக்கலம் ; திருவேங்கடமென்னும் திருமலையில் அமர்ந்த முராரியே, நினைக்கு அடைக்கலம் ; உலகங்களை உண்டாக்கி ஆள்கின்ற பெருமானே, நினக்கு அடைக்கலம் ; நின் அடியார் பெருமை யறியாமற் பிடிக்கவரும் எமதூதர் நடுங்க வருபவனே, நினக்கு அடைக்கலம் ; சிறந்துயர்ந்த முடிதரித்தவனே, நினக்கடைக்கலம் ; யாம் பூசை செய்யும் திருவடிகளை யுடையவனே, நினக்கடைக்கலம் ; பாவக் கடலை நீந்திக் கரையேறத் துணைசெய்யும் பெருமாளே, நினக்கடைக்கலம் ; திருத்துழாய் மாலையைத் தரித்தவனே, நினக்கடைக்கலம் ; பரந்த புகழுடையவனே, நினக்கடைக்கலம் ; உயர்ந்த திருக்கோயிலாகிய திருவரங்கத்தை விட்டு விலகி யிருத்தற்கரிய அரங்கநாதா, நின் அடைக்கலம் ; அடியார் வேண்டும் வரங்களைத் தந்தருள்வோனே, நின் அடைக்கலம் ; அடியார்க்கென்று கட்டளைப்பட்ட அருளையுடையவனே நின் அடைக்கலம் ; நின் திருவடிகளை எனக்கருள்வாயாக.

'திருமார்பு' என்பதற்குத் திருமகளையுடைய மார்பு என்பதும் ஆம்.

தத்தனன தந்த தானன
தத்தனன தந்த தானன
தத்தனன தந்த தானன ,தனதான

301. துற்றபொருள் கொண்டு பாரதி
அப்பனுனை நெஞ்சி லேகொடு
சுத்தகவி கம்ப நாடன்முன் இனிதோதும்
சொற்படிவி ளம்பி ராமசெ
யத்தினைநி னைந்து ளோரது
துப்புடன்வ ரைந்து ளோர்முழு தடைவாகக்
கற்றவரு ணர்ந்து கேள்விகள்
பெற்றவர் மிகுந்த வாழ்வொடு
கற்புடைய மங்கை பாலக ருளராகிக்
கட்டுளபு ரந்த ராதிகள்
நித்தமும்வ ணங்கு பேரெழில்
கைக்கொடுனை வந்து சேர்வுற அருள்வாயே
உற்றவிடை கொண்ட வீடணர்
பெட்டகம தொன்றி லேதம
துச்சிகொடு வந்து காவிரி யுறுபோதின்
உட்பிரண வங்கொள் கோயிலில்
அர்ச்சனையு வந்த ரூபமொடு
உத்தமவ ரங்க மேயபின் உலகாளும்
வெற்றிரகு வம்ச வீரர்கள்
உற்றநக ரின்ச ராசரம்
மெத்தியுடன் முந்தி யேயெழ மலராளும்
மெய்ச்சொருப முங்கை யாழியும்
நத்துமுற வண்ட ரேதொழ
மிக்குயர்வை குந்த மேவிய பெருமாளே.

உரை:—நின்னைச் சேர்ந்த விபீடணன் விடை கொண்டு நீ தந்தருளிய பூசனைக்குரிய உருவத்தை ஒரு பெட்டியில் வைத்துத் தன் தலையிற் சுமந்து திருக்காவிரி யாற்றில் வந்தபோது அவ்வுருவம் ஓங்கார வடிவு கொண்ட

கோயிலில் அடியார்கள் செய்யும் அருச்சனையைக் கொண்டு விளங்கும் வடிவத்தோடு சிறந்த திருவரங்கத்தில் அமர்ந்தருளிய பின், அயோத்திமா நகரிலிருந்து உலகமெல்லாம் ஆளும் வெற்றியையுடைய ரகுவம்சத்து வீரர்கள் ஆட்சி செய்யும் அந் நகரத்தில் உள்ள இயங்குதிணைப் பொருள்கள், நிலையியற்றிணைப் பொருள்கள் ஆகிய எல்லாம் மகிழ்ந்து நினக்கு முன்னே போய்ச் சரயு நதியில் சேர்ந்து சந்தான லோகத்தை யடைய, அதன் பின் செந்தாமரையில் வாழும் பெரிய பிராட்டியாரும், நீயும் பொய் வடிவமான மானிட வடிவத்தை நீக்கி உண்மை வடிவு கொண்ட பின் நின் கைகளில் சங்கு சக்கரங்களிருக்க, விண்ணோர் வணங்க மிக்குயர்ந்த திருவைகுந்தமடைந்தருளினாய் பெருமாளே; பார்தி யப்பனென்னும் பெயருடைய நான் நின்னை மனத்தில் அமைத்துக் குற்றமற்ற சொற்களைக் கொண்டு உயர்வுடைய செய்யுட்களாகக் கம்ப நாடன் முன்னே இன்பமாகப் பாடிய இராமாயணத்திற் சொல்லியவாறு வண்ணமாகப் பாடிய இவ் இராமசெயமென்னும் பெயருடைய நூலை நினைத்திருப்போரும், ஆற்றலோடு எழுதுவோரும், முழுதும் முறையாகக் கற்றோரும், சொல்லக் கேட்ட கேள்வியுடையோரும் மிக்க செல்வத்தோடு கற்புள்ள மனைவி மக்களையுடையோராகி, ஒப்பற்ற இமையவரும் இந்திரனும் வணங்கத்தக்க பெரிய அழகிய பிரம சொரூபங் கொண்டு உன்னை வந்தடைய அருள் செய்வாயாக.

தத்த தான தனன தந்த
தத்த தான தனன தந்த
தத்த தான தனன தந்த தனதான

302. வட்ட வாழி தவள சங்கு
முட்ட வாழி திருவி ருந்த
வற்சம் வாழி பெருகு கங்கை துளவேறும்

வைப்பு வாழி கமல வுந்தி
முற்றும் வாழி புயவ லங்கல்
வர்க்கம் வாழி யிடம டந்தை உரமோடும்

கட்டு கோல மணிம ருங்கு
நித்தம் வாழி வரிவி றண்டு
கட்கம் வாழி விரிபு யங்க வணைவாழி

கட்கு லாவு கமல வினப
அக்கம் வாழி யெனவ னந்த
கற்ப கோடி முழுது நின்று துதியேனோ

எட்டொ ணாத கடலி னின்று
சத்ய லோக மருவி யந்த
இட்சு வாகு நிருபர் கொண்டு வரவேவந்
திட்ட வூரி லினித மர்ந்து
சுத்த ராமர் தரவி லங்கை
யிற்செ லாவி டணனை யன்று தமிழாளன்
விட்ட கோல நதிம ருங்கில்
இட்ட மாலை புனைய வின்ப
மெத்து பூமி மலர்ம டந்தை களிகூரப்
மிக்க கோயி லணிய ரங்க
முற்ற தேவ வழகு கொண்ட
மெய்ப்ர தாப முளதெய் வங்கள் பெருமாளே.

உரை :—ஆழம், நீளம், அகலம் ஆகிய இவைகள் அறிவுக்கு எட்ட முடியாத (பெருமை அறிவிற்குப் புலப்படாத) திருப்பாற் கடலில் நின்று பிரமன் உலகிற் போய் இருந்து, இட்சுவாகு மன்னன் கொண்டு வரத் திரு வயோத்திவந்து அம்மன்னனை இன்பமாக்கி யமர்ந்தருளி, பின் தூய விராம பிரான் விபீடணனுக்குத் தர, அவன் அதனை இலங்கைக்குக் கொண்டு செல்லாதவாறு நிறுத்தி, தமிழ் முனிவனாகிய அகத்தியன் தன் கமண்ட லத்தினின்றும் விட்ட அழகிய திருக்காவிரியின் இடப்பால் இருந்து, அந்த ஆறு பூமாலையாய் அமையவும், இன்பமிக்க பூமிப் பிராட்டியார் பெரிய பிராட்டியார் என்னும் இருவரும் மகிழவும் எல்லாக் கோயில்களினும் மேம் பட்ட திருவரங்க மென்னும் திருப்பதியில் அமர்ந்து சிறந்த வடிவமும், உண்மையான புகழும் கொண்ட, தேவர் வணங்கும் பெருமாளே ; உன்னு டைய அருள் பெற்ற அடியேன், வட்ட வடிவமான சக்கரத்தாழ்வாரும், வெண்மையான சங்கும் என்றும் வாழ்கவென்றும், திருமகள் வாழும் திரு மார்பு என்றும் வாழ்க வென்றும், பெருக்கெடுத் தோடும் வானாறும் திருத் துழாயும் பொருந்தியுள்ள திருவடிகள் வாழ்க வென்றும், திருவுந்தித் தாமரை என்றும் வாழ்க வென்றும், திருத்தோளி லணிந்த பூமாலையின் கூட்டங்கள் என்றும் வாழ்க வென்றும், இடைச்சியாகிய யசோதை உர லோடு சேர்த்துக் கட்டிய அணிகளால் அழகு மிக்க திருவரை நாடோறும் வாழ்க வென்றும், வரிந்து கட்டப்பட்ட சார்ங்கம் என்னும் வில்லும், கதையும், வாளும் என்றும் வாழ்க வென்றும், விரிந்த அரவணை வாழ்க என்றும், தேன் பொருந்திய தாமரை மலர் போல இன்பம் தங்கிய திருக் கண்கள் வாழ்க என்றும் அளவற்ற கோடிக் கணக்கான ஊழிதோறும் நின்று போற்றிப் புகழ்வேனோ ? புகழ்வேன்.

தனாதன தானன தந்த
தனாதன தானன தந்த
தனாதன தானன தந்த தனதா

303. புரர்தன மாகிவி ளங்கு
சகாரண நீநெறி கொண்ட
புராணமு நீயுயர் கின்ற பொருளே
புராரியு நீமலர் தங்கு
பராவரு நீயரு மந்த
புலோமிசை கேள்வனெனுஞ்சொல் உடையோய
தராதல நீவளர் கின்ற
பயோததி நீயிடை துன்று
சராசர நீயுனை யென்றும் மறவாடு
சரோருக பாதம் வணங்கி
மனோகர மாகிவி ளங்கு
தபோதன ஞானம டைந்து சுகியே
இராகவ னாகிந டந்து
விராதனை மூவரை வஞ்ச
இராசத மானைமு னிந்து முகமேலா
இராதவ ளோடுக வந்தன்
மராமரம் வாலியொ டம்பின்
இராசியி ராவண கும்ப கனர்மா
அராவொரு வாளிது ரந்து
விடாநகர் மேவிய லங்கல்
அருமுடி சூடிய ரங்க நகர்மே
அமோகமெய் வீடணர் தந்த
விமானவி சாலப்ர சண்ட
அராவணை மீதுது யின்ற பெருமாளே

உரை :—இரகு மரபிற் றோன்றிய இராகவனாகிக் காட்டில் நடந்து
விராதனையும், கர, தூடண, திரிசிரர் என்னும் மூவரையும், வஞ்சகமு
இராசதமுமுள்ள மாரீசனென்னும் மானையும் சினந்து கொன்றும், எ
லோரையும் போல் முகம் மேலே யிராமல் கீழிருக்கப் பெற்ற அயோமு
யோடு, அவனைப் போன்றிருந்த கவந்தனையும், ஏழு மரா மரங்களையு

வாலியையும், நீரின் கூட்டம் மிகுந்த கடலையும், இராவண கும்பகருணர்களையும் அழிக்க அராவப் பெற்ற ஒப்பற்ற அம்பைச் செலுத்தியும் பின்னர், திருவயோத்தியில் எழுந்தருளிப் பூமாலை நீங்காத முடிசூடியும், முடிவில் திருவரங்கத்திற் கெழுந்தருளி, மயக்கமற்ற உண்மையுடைய விபீடணர் கொணர்ந்த விமானத்தில், பரப்பும் மிக்க கடுமையுமுடைய அனந்தாழ்வான் மேல் திருக்கண் வளர்ந்தருளிய திருவரங்கப் பெருமானே ; எல்லாப் பொருள்களுக்கும் முற்பட்ட பழைமையாகி விளங்கும் காரணமும் நீயே ; நன்னெறிகளை தம்பாற் கொண்டுள்ள பழைய மூர்த்திகள் எல்லாரினும் மேலாய் உயர்ந்த பொருளும் நீயே ; முப்புரங்களை எரித்த விரிசடைக் கடவுளும் நீயே ; திருவுந்தித் தாமரையிலுள்ள நான்முகனும் நீயே ; அருமையான அழகுள்ள இந்திராணியின் கேள்வனென்னும் சொல்லுடையவனும் நீயே ; நிலவுலகும் நீயே ; நீ திருக்கண் வளர்ந்தருளும் திருப்பாற் கடலும் நீயே ; இயங்குதிணை நிலைத்திணைப் பொருள்களும் நீயே ; இவ்வாறு எங்கும் நிறைந்த நின்னை என்றும் மறவாமல் தாமரை மலர் போன்ற நின் திருவடிகளை வணங்கி உள்ளத்திற்கு நிறைந்த மகிழ்வைத் தரும் தவத்தின் அனுபவமான மெய்ஞ்ஞானம் பெற்றுப் பேரின்பம் பெற மாட்டேனோ ? பெறுவேன்.

அம்பின் ராசி—கடல் ; அம்பு ராசி என்பது சந்த இன்பம் நோக்கி அம்பின் ராசியாயிற்று.

உயுத்த காண்டம் முற்றும்.

ஸ்ரீ:

# 7. உத்தர காண்டம்.

தனதன தான தந்த
தனதன தான தந்த
தனதன தான தந்த தனதா

204. பிடிவரு மாகில் விஞ்சு
பிணிவரு மாகின் மண்டு
வினைவரு மாகி லிங்ஙன் உரியார்
வினைவரு மாகின் முன்சொல்
கதைவரு மாகின் மூந்து
வ்ரதம்வரு மாகி லுன்றன் உயர்கோயில்
கடைவரு மாகி லன்பர்
குழுவரு மாகின் மொய்ம்பு
கயவரு நேரி ரங்கி அரிரா
கருணைசெய் வாழி யென்பர்
இவையுளு மேயெ னெஞ்சு
கரைவிலை நானி ருந்த பிழைபாரா
குடமுனி யோடு நின்ற
முனிவரெ லாமெ ழுந்து
கொழுமறை யோதி வந்து நகர்மேவி
குணமொடு காண வன்று
சுகமுள தோவு யர்ந்த
குரவரெ லாமி யம்பும் எனவோடு
இடரிலை மாத வங்கள்
குறைவிலை வேள்வி யொன்றும்
இழிவிலை வாழி யென்று மறைவாண
இருபுடை சூழ வென்றி
அரியணை மீதி ருந்த
ரகுபதி யேதெய் வங்கள் பெருமாளே

உரை :—நீ முடி சூட்டிக் கொண்டு திருவோலக்கத்தில் இருந்த போதில், குடமுனியாகிய அகத்தியர் முதலிய முனிவரர் எல்லோரும் கூடிச் செழுமையான மறைகளை ஓதிக் கொண்டு வந்து நின்னைக் காண, அவர்கட்குரிய பூசனைகளை யியற்றி இருக்கச் செய்து, 'மேன்மையுள்ள சான்றோர்களே, உங்கட்கு நலன்கள் யாவும் அமைந்துள்ளனவோ? சொல் வீராக', என நீ கேட்ட பின், 'எங்களுக்குத் துன்பமில்லை; பெருமை யுள்ள தவத்திற்கும் குறைவில்லை; வேள்விகளிலும் தாழ்வில்லை; நின் கொற்றம் வாழ்க', என்று கூறி அம் முனிவரர்க ளெல்லோரும் நின் இரு புடையிலும் சூழ்ந்திருக்க வீற்றிருந் தருளிய இரகு நாயகா, இமையவர் பெருமாளே; வறுமை வருமானாலும், பொறுத்தற்கரிய நோயைத் தரும் மிக்க பிணி வருமானாலும், முற்பிறவிகளில் செய்து நுகர்ந்து எஞ்சிய வினைகள் ஒன்றன்மே லொன்றாக விரைந்து மேன் மேலும் வருமானாலும், இவ்விடத்தில் எனக்குரிமை யுள்ளவர்களாற் பொல்லாங்கு நேருமாயினும், சிறப்பித்துச் சொல்லப்படும் பெருமையுள்ள புராணங்கள் வருமாயினும், விரதங்கட் கெல்லாம் முற்பட்ட விரதம் வருமானாலும், நின் உயர்ந்த திருக் கோயிலின் முன் வாயில் வருமானாலும், நின் அன்பராகிய அடியார் கூட்டம் வருமானாலும் அப்போது பொய்ம்மையால் வலிமையுள்ள கயவர் களும் நெஞ்சை ஒடுக்கி உடன்பட்டு, 'இராமா, அருள் செய்வாய், வாழ்க வாழ்க' வென்று போற்றி இசைப்பார்கள். மேற் சொன்னவற்றால் இழிந் தவர்தம் கல் மனம் கரைந்தும், என் மனம் உருகவில்லை. இவ்வாறிருந்த என் பிழையினை நீயே பார்த்தருள்வாய்.

தனன தந்த தனதான தந்த
தனன தந்த தனதான தந்த
தனன தந்த தனதான தந்த தனதான

305. பரவு தந்தை பெறுதாயர் மந்த்ர
நெறிவி ளம்பு குருவாண ருண்டு
பசிய றிந்து பகிர்வார் சனங்கள் அறியாதே

பசிக ளைந்து விடுவார்ந டுங்கும்
உயிர்ப ரிந்து தருவார ளந்து
படியி டுங்கை யுடையார்ம ருந்து விடுவார்தம்

பொருவில் பண்பு மவர்சீரு மெந்த
அசட ருந்த முளமீது கொண்டு
புகழ்வ ரிந்த வகையாரை யுங்க ணறையாமென்

புகையெ ழுந்த வகியாய நெஞ்சு
மிகம றந்து விடுமேயி ரந்து
புகைபொ ருந்து மடியேனு மின்பம் அடைவேனே

அருகி ருந்த மறையோரி லங்கை
நிருதர் தங்கள் பதியோடு தம்பி
அழிய நின்று பொருதாலு மைந்தன் வலிமாளான்

அமர்பு ரிந்த விதமேதி யம்பு
கெனலு முன்பு மறவோரின் முந்த
அதிக னந்த வினையாளன் வென்றி அறியேனல்

உரமி குந்த வவன்வீரி யங்கள்
வலிய தந்தை மாபோரி ரண்டும்
உலகில் வந்த வரலாற டங்க ஒளியாதே

உடனி ருந்த படிபோல முன்பின்
அடைவி லின்று தமியேன்வி ளங்க
உரைமி னென்று திருவாய்ம லர்ந்த பெருமாளே.

உரை :—நின்னைச் சூழ்ந்திருந்த முனிவரர்கள், "இலங்கையில் அரக்கர் கோனாகிய இராவணன் அவன் தம்பி கும்பகருணன் ஆகியோர் இறக்குமாறு நீ நின்று பொருதாலும் இராவணன் மகனான இந்திரசித்தன் ஆற்றல் குறையாதவ னல்லனோ? அவனோடு நீ பொருதவித மெவ்வாறு? சொல்லுவா"யென நின்னைக் கேட்க, அதற்கு நீ, "பாவிகளிலே முன் வைக்கத்தக்க அப் பெரும் பாவியின் வெற்றியை நான் முன் அறியாமற் போனேன்; ஆதலின், ஆற்றல் நிறைந்த அவனுடைய செல்வங்கள், அவன் தந்தையாகிய இராவணனுடைய தாய் தந்தையர் மரபு ஆகிய இவ் விரண்டும் உலகத்தில் வந்த வரலாறு முதலியவற்றை அவர்களோடு நான் உடனிருந்தது போன்று என் உள்ளந் தெளியவும் கதையின்முன் பின் வரிசைகள் அமையவும் ஒளியாமல், எனக்கு விளங்குமாறு உரைப்பீராக", என்று திருவாய் மலர்ந்தருளிய பெருமாளே; வளர்க்கும் தந்தையர், பெற்ற தாயர், மறை பொருளை அறிவிக்கும் குருக்கள், பிறர் பசியறிந்து தாம் உண்பனவற்றைப் பகிர்ந்தளிக்குமவர்கள், உலகத்திலுள்ள மக்கள் அறியாமல் பசியைப் போக்குவோர், அஞ்சும் உயிரைக் காப்பவர்கள், படியை அளந்து (கட்டளை) கொடுக்கும் கையை யுடையோர், நோய் தீர மருந்தளிப்போர், ஆகியோர் தம் ஒப்பற்றப் பண்புகளையும் சிறப்புக்களை யும் எத்தகைய அசடர்களும் தம்முள்ளத்தில் உயர்வாகக் கொண்டு புகழ்வார்கள்; அத்தகையோரையும் கொடுமையானவர் என்று நினைத்தாற் புகை

தோன்றிய நீதியற்ற என் நெஞ்சம் கருதிப் பொறுமையால் மிகவும் மறந்துவிடுமே யன்றி இஃது ஆகாதென்று நினையாது ; இவ் வகையாக இறந்து, உடல் வெந்து, பொருந்திய புகையால் பற்றப்பட்ட அடியேன் இன்ப நலத்தைப் பெறுதற் குரியனாவேனோ ? ஆவேன்.

தனன தந்த தனத்தன தானன
தனன தந்த தனத்தன தானன
தனன தந்த தனத்தன தானன தனதான

306. குருவை யன்றி யுனைத்தெளி வாரொரு
பொருளு மின்றி யுனைப்புகல் வாரொரு
குறையு மின்றி நினைத்திடு வாருடன் மிசையேநின்
குறிக ளின்றியி யற்கைசெய் வார்தலை
படித லின்றியு னைப்பணி வார்புனல்
குடைத லின்றியுன் முற்படு வார்குவி முகிழாகும்
இருகை யன்றி யுனைத்தொழு வார்விரி
துளவை யன்றி யுனைப்புனை வார்பெரும்
இசைக ளின்றி யுனைச்சில பாடுதல் புரிவார்தாம்
இவர்க ளுங்க்ருபை பெற்றிடு வார்நனி
அவரி லுங்கடை கெட்டவ னினி
எனையு மிங்கடி மைக்கொள் நீயருள் புரிவாயே
திருவி ரும்பிய வுத்தம னபியின்
முனிப யந்தபு லத்திய மாமுனி
திரண விந்தும கட்கிறை யாயபின் வரபாலர்
திடமி குந்திடு விச்சிரு வாமுதல்
ஒருவி ருந்திடு மொய்த்தவன் மாமகள்
செழுந லங்கொள மிக்ககு பேரனோர் மகவாகி
உருகி நின்றுசெய் நற்றவ மானது
பிரமர் கண்டொரு புட்பக மானமும்
உரிய சங்கொடு பத்மமும் வாசவன் முதலோர்போல்
உலகு கொண்டதி சைக்கொரு காவலும்
அருள வந்தனன் முற்கதை யீதென
உரைசெய் கும்பமு னிப்ரிய னாகிய பெருமானே.

உரை :—அகத்திய முனிவர் கூறுகிறார் : "பெரிய பிராட்டியார் விரும்பும் ஆண் தகையின் திருவுந்தியிற் பிறந்த நான்முகன் பெற்ற புலத்திய முனிவர், தவம் செய்யுமிடத்தில் தேவ மகளிர் ஆடல் பாடல்களை நிகழ்த்தியதனால், "நாளை முதல் இவ்விடத்தில் வரும் பெண்கள் அனைவரும் கருக்கொள்ளக் கடவர்", என்று சபித்தனர் ; அதனை யறியாமல் திரணவிந்து என்னும் முனிவரின் மகள் இலபிலை என்பவள் தன் தோழியைத் தேடி அவ்விடத்திற்கு வந்த பின் கருவுற்று அதனால் அஞ்சி, மீண்டு சென்று தன் தந்தையிடம் நடந்ததை நவின்றாள் : அவர் தம் மெய்ஞ்ஞானத்தினால் உண்மையை யுணர்ந்து மகளை அழைத்து வந்து புலத்திய முனிவருக்கு மணஞ் செய்வித்தார்; அவர்கட்கு உண்மை மிகுந்த விச்சிரவசு வென்னும் முனிவர் பிறந்து எல்லாக் கலைகளிலும் தேர்ச்சி பெற்றிருக்கையில், நீ இராவணனைக் கொன்று மீண்டும் வருங்கால் நினக்கும் நின்னுடன் வந்த படைகட்கும் ஒப்பற்ற விருந்தளித்தவரும் மெய்த் தவம் உடையவரும் ஆகிய பரத்துவாச முனிவருடைய பெருமையுள்ள மகளாகிய தேவவருணினியென்னும் பெயருடையாளை விச்சிரவசு மணந்து இன்பம் நுகர, மேன்மையுடைய குபேரன் அவர் தம் மகவாகப் பிறந்து பெரியவனான பின்னர், நான்முகக் கடவுளை நினைத்து மனங் கரைந்து செய்த நற்றவத்தை மகிழ்ந்த நான்முகன் காட்சி தந்து, ஒப்பற்ற புட்பக விமானமும் உரிமையுடைய சங்க நிதியோடு பதும நிதியும், திசைக் காவல் செய்யும் இந்திரன் முதலோரைப் போல் உலகின் வடதிசைக் காவல் செய்யும் உரிமையும் தர, தன் தந்தையாகிய விச்சிரவசு முனிவரிடம் வந்து சேர்ந்தான் ;" என்று இராவணன் வரலாற்றின் தொடக்கக் கதையைக் கூறியருளிய அகத்திய முனிவருக்கு அன்பனாகிய பெருமானே ; குருவையின்றி நின்னையே தெய்வமென்று கண்டு தெளிவோரும், ஒரு கருத்துமின்றி நின்னைப் புகழ்ந்து போற்றுவோரும், தம் உடலின் மேல் திருமண் காப்பாகிய நின் குறியின்றி நினக்கு இயற்கையான அடிமை செய்வோரும், நீராடுதலின்றி நின்னை வணங்குவோரும், தூய்மை செய்து கொள்ளுதலின்றி நின் திருமுன் வருவோரும், செந்தாமரை போன்று குவிந்த இரு கைகளும் இன்றி நின்னை வணங்குவோரும், இதழ் விரிந்த திருத்துழாயின்றி நின்னை ஒப்பனை செய்வோரும், இசையுடைய பண்கள் இன்றிச் சில பாடல்களைப் பாடுவோரும் ஆகி முறை தவறினவர்களாயினும் அவர்கள் நின் அருளைப் பெறுவர் ; அவரினும் கடையனான நானும் நின்னருள் பெறக் கடைக்கண் நல்குவாய்.

இறைவனை வணங்க வேண்டின், அதற்குரியவாக நூல்களிற் சொல்லப்பட்ட முறைகளை மேற் கொள்ளுதல் நன்று. அங்ஙனமின்றியும் அன்பு மிகுந்து வணங்குதலே போதும் என்பது இப் பாட்டின் கருத்து.

தனத்தான தந்தன தான
தனத்தான தந்தன தான
தனத்தான தந்தன தான தனதான

307. இருக்கால்வ் ணங்கிநி லாமல்
ஒருக்காலு மன்புசெ யாமல்
எடுத்தேத ருந்தொடை மாலை புனையாமல்
எழுத்தாறி ரண்டுசொ லாமல்
வழுத்தாம லுன்றனை யேயுள்
இருத்தாம லிங்குள நாட்கள் அவமானேன்
மூரட்பாவி வஞ்சகன் மூடன்
மருட்பாத கன்கொலை காரன்
முழுப்பாவி வம்பன்வ்ரு தாவன் வினையேன்யான்
முதற்றேவ ருந்தெளி யாவுன்
அருட்கோயில் கும்பிடு போதென்
முரட்பாடு கண்டடி யார்கள் நகையாரோ
வரத்தாலு யர்ந்தகு பேரர்
திருத்தாதை தன்பத மேவி
மதிப்பாமி டந்தர வேணும் எனும்வேலை
வனப்பாமி டந்திரி கூட
கிரிப்பேரி லங்கையவ் வூரின்
மறத்தோடி ருந்தவர் நாளும் திருதேசர்
அருட்கேசு வன்பொரு போரில்
ஒளித்தோடி வன்பில மேவ
அறப்பாழ்கி டந்தவவ் வூரின் இனிநீபோய்
அறத்தோடி ருந்துயிர் வாழ்தி
எனப்போன் வண்கதை கூறும்
அகத்யாதி யன்பர்ப ராவு பெருமாளே.

உரை :—'நான்முகக் கடவுள் அளித்த வரத்தால் மேன்மை பெற்ற குபேரன், தன் தந்தையை அடைந்து அவரை வணங்கித் தான் பெற்ற சிறப்புக்களை யெல்லாம் கூறி, "நான்முகனை எனக்குரிய இடம் கேட்க மறந்தேன் ; ஆதலின் எவரும் மதிக்கத்தக்க இடத்தை நீவிர் அருள வேண்டும் ;" என்று கேட்ட போது, அவர்; "அழகிய இடம் திரிகூட மலையு

நகரமாகச் செய்துள்ள இலங்கையாகும்; அந்நகரில் முன், பாவச் செயல்களைச் செய்து கொண்டு ஆட்சி செய்து கொண்டிருந்த அரக்கர் தலைவர்கள், அருள் வடிவான திருமால் நிகழ்த்திய போரில் எதிர்நிற்க லாற்றாது ஓடி வன்மையுள்ள பாதலத்திற் சேர்ந்திருத்தலால் இன்றும் அவ் விலங்கை பாழாய்க் கிடக்கின்றது; அந் நகரில் இனி நீ போய் இருந்து அறநெறியோடு வாழ்ந்து வருக" என்று சொல்ல, அவ்வாறே குபேரன் இலங்கைக்குச் சென்று இன்புற்றிருந்தா'னென்று குபேரனது வளமிக்க வரலாற்றைக் கூறிய அகத்தியர் முதலிய அன்புள்ள முனிவர்கள் போற்றும் பெருமாளே; நின்னைக் காலை மாலையாகிய இரு வேளைகளிலும் வணங்காமலும், ஒரு முறையேனும் அன்பு கொள்ளாமலும், மணமுள்ள பூமாலைகளை நினக்கு அணியாமலும், கேசவாதி பன்னிரு திருப்பேர்களைக் கூறாமலும், புகழாமலும், பிற தெய்வங்களை விட்டு நின்னையே உள்ளத்திருத்தாமலும், இப் பிறவிக்குரிய நாட்களை யெல்லாம் பயனிலவாக்கிக் கொண்டேன்; நான் பகைத்த பாவி; வஞ்சகன்; அறிவற்றவன்; மூடன்; அறிவு கெட்டு மயங்கிய தீயோன்; கொலை செய்பவன்; முழுப்பாவி; அஃதாவது இனிச் செய்வதற்குரிய பாவம் ஒன்றுமில்லாமல் முழுதும் செய்தவன்; நிலையற்ற பேச்சுக்களைப் பேசுபவன்; எவர்க்கும் பயன்படாதவன்; இமையவர்க ளெல்லோர்க்கும் முதன்மையான தெய்வங்களும் தெளியமாட்டாத நின் அருட்கோயிலில் நான் வந்து வணங்கும் போது மாறான என் நிலையைக் கண்டு, நின் அடியார்கள் எள்ளி நகையார்களோ? நகைப்பர்.

'குபேரன்' என்பது முதற் குறைந்து பேரன் என நின்றது, எழுத்து ஆறிரண்டு என்பது உம்மைத் தொகை, ஆறும் இரண்டும் என விரித்துக் கொள்க.

தனத்தன தானன தந்த
தனத்தன தானன தந்த
தனத்தன தானன தந்த தனதான

308. குலத்தைவி டேன்முனி றுந்த
மதத்தைவி டேன்முதல் வெம்பு
குணத்தைவி டேன்வல பங்கள் எனவீறும்
குறிப்பைவி டேன்முன டந்த
நடப்பைவி டேன்வரு பெண்கள்
குனிப்பைவி டேனுனை வந்து தொழுதாலே
இலக்கண வீனம றிந்து
பழிப்பற மேவிய தொண்டர்
எனைச்சிரி யாரவர் கண்ட தமியேனுள்

இலச்சையி லேனினி யுன்றன்
விழிக்கடை சேரரு ளன்றி
எனக்கொரு சார்பிலை யென்ப தறியாயோ

புலத்திய னூர்வழி வந்த
இயக்கர்ம கீபனை யின்று
புலப்பட வோதினிர் மூந்து நிருதேசர்

புறப்படு போதுமு குந்தன்
அழித்ததும் வீறுகு லைந்து
புலைத்தொழி லாளர டங்கி வறிதேபோய்

அலக்கணி னோடுவி லங்கல்
பிடித்தது மோதிம லைந்த
அடற்படை யோடுமி லங்கை நகர்மீள

அரக்கர்கு லாதிபன் வந்து
குடிபுகு நீதிய டங்க
அகத்திய ரேயுரை யென்ற பெருமாளே.

உரை :—அகத்தியரைப் பார்த்து, "நீவிர் புலத்திய முனிவர் மரபில் வந்த குபேரன் வரலாற்றை விளங்க உரைத்தீர்; அவ் விலங்கையில் குபேரனுக்கு முன் அரக்க வேந்தர்களிருந்து போர் செய்யப் புறப்படும் போது திருமால் அவர்களை அழித்ததையும், இழிதொழிலுடைய அரக்கர்கள் வலிகுன்றி வருத்தத்துடன் பாதாள உலகு புக்கதனையும், எதிர்த்துப் போரிட்டு நின்று ஆற்றல் படைத்த படைகளுடன் அரக்கர் கோனாகிய இராவணன் இலங்கையிற் குடியேறிய முறைமையையும் அகத்தியரே, சொல்லுக" எனக் கேட்டருளிய பெருமாளே : நான் மேற் குலத்தவனென்று இறுமாந்து நின் அடியாரை வணங்காமையால் பிறந்த என் குலத்தின் சிறப்பை விடேன்; பிற தெய்வங்களையும் உண்மையென நம்பியதால் மதத்தை விடேன்; நீயே தெய்வமெனை அறிந்திலேன்; பழைய கொடுமையான குணத்தை விட்டுப் பொறுமையை அடையாமையால் கொடுமையை விடேன்; ஆற்றலென்னும் பெருமையுள்ள குறிப்பை விடேன்; தகாத செயல்களை விடேன்; என்பால் வரும் மகளிர் தம் கூத்தினை விடேன்; இத்தகைய நான் நின்னை வணங்கினால் அடியார் இலக்கண மின்மையை என்பால் அறிந்து, பழிக்கப்படாத செயலையுடைய நின் அடியார்கள் என்னைச் சிரியார்க ளல்லர்; சிரிப்பார்கள்; ஒருவரும் துணையில்லாத நான் அதனைக் கண்டும் நாணிலி யானேன்; இனி நின் திருக்கடைக்கண் நோக்

கால் உளதாகும் அருளால், வேறுகளை கண் எனக்கில்லை யென்பதை அறி யாயோ ; முழுது முணர்ந்த பெருமான் நீ யாதலால் அறிவாய்.

'குடிபுகு நீதி' என்புழி உம்மை விகாரத்தால் தொக்கது.

தனனா தனத்தத் தான
தனனா தனத்தத் தான
தனனா தனத்தத் தான தனதான

309. துயரா மிருட்டுச் சூழல்
இளகா முழுக்கற் பாறை
சுடுநீள் தகைக்கொட் டாரம் அழலூழல்

தெலையா வபத்தக் கேணி
குழையா தபொட்டற் காடு
சொரியா தபொட்டுத் தூறல் அழலார்நீர்

பயிலா தவட்டத் தேரி
கறவா மலட்டுப் பாவி
பழிமே வுகுப்பைக் கூளம் மயலாகும்

படிநீ விதித்திட் டாயென்
வசமோ வசட்டுத் தாரை
படையா திருக்கக் கூடு மெனலாமோ

அயனார் வகுப்புக் கோலு
முதனுள் உதித்திட் டோரில்
அதிகோ லவுக்ரத் தோர்கள் நிருதேசர்

அடைவாய் அவர்க்குட் கூடு
பிரகே திப்ரச்சைக் காரன்
அடலே நிதுட்டப் பாவி நமனார்பின்

வயமா யுதித்திட் டானை
மணமே வமற்றப் பாவை
வயிறா டுவித்துக் கேசன் உளனானோ

வாலா றுதெற்குப் போன
முனிகூ றிமெச்சிக் காணும்
வாரா மவெற்றித் தேவர் பெருமாளே

உரை :—அகத்தியர் கூறுவது :

" நான்முகன் உலகைப் படைக்க முயன்ற முதல் நாள் பிறந்தோர்களுள் மிக்க வெகுளியும் கொடுமையு முடையோரை ' அரக்க ராகுதிர் ' என்று அவன் சபித்ததனுல் அரக்கர் வரிசையில் மிக்க திறமையுடையோர்களுள் இருவர் ஏதி, பிரகேதி என்போர் ஆவர் ; அவருட் பிரகேதி யென்பான் அறிவுள்ளவனாகி மணம் செய்து கொள்ளாதிருந்தான் ; வலிமையுள்ள ஏதி யென்பவன் கொடும் பாவியாகி, எமனுக்குப் பின் ஆற்றளோடு பிறந்தவளான பயை என்பாளை மணந்து கூடியிருக்கும் போது அவள் வயிற்றில் வித்துக் கேசனென்பான் பிறந்தான் ;" என்று வடக்கினின்றும் தென்பால் வந்து பொதிய மலையிலிருந்த அகத்தியர் சொல்லிப் புகழ, அவர்க்கு நல்வர மளித்த இராமா ; வெற்றி மிக்க இமையவர் பெருமாளே ; பெண் குறியின் தன்மை : துன்ப வடிவமான இருட்டுவளை : இளகாத முழுக் கற்பாறை ; சுடப்படும் நீண்ட கொட்டகை ; (கொட்டகை சிறு வாயிலும் அகன்ற உள்ளிடமுமுள்ளது ; சுண்ணும்பு அறையும் ஆம்) கொளுத்தும் ஊழல் ; (ஊழல் என்றது உபத்தத்தை யன்று; கெட்டது என்னும் பொருளது.) நாற்றமும், சூடும், குழம்பான சேறும், காண்பதற்கு வெறுப்பும் உடையது ; குளிர்க்காத பொட்டல் நிலம் ; மிகுந்து பொழியாமல் சிறு நீர் பொட்டுப் பொட்டாக விழும் பொள்ளற் குடம் ; பாலை நிலத்தே தெளிந்த நீரிருந்தும் பழகாத வட்டமான மேட்டு ஏரி ; பால் கறவாத மலட்டுப் பாவி ; பழிகளெல்லாம் குடியிருக்கும் கூளமான குவியல்; (கூளமாவது பொடிப் பொடியான துரும்பு) இத்தகு இழி நிலையுள்ள அதனை விரும்பி யிருக்குமாறு நீ என்னை விதித்தனை ; ஆதலின் நின் கட்டளையை விலக்கி இழிநெறியிற் சேராதிருக்கக் கூடுமென்று நினைக்கவும் என்னலாகுமோ ? ஆகாது ; நீயே நன்னெறிப்படுத்தி ஆளவேண்டும்.

அழல்—வெப்பமான பாலை நிலம்.

தத்தத் தானன தந்தன தானன
தத்தத் தானன தந்தன தானன
தத்தத் தானன தந்தன தானன தனதான

310\. முத்துத் தாவட குங்கும லேபன
நற்கர்ப் பூரசு கந்தச ரோசமு
கைக்கொப் பானவ லங்க்ருத சீதள அழுகாகி
முச்சுக் கோலநி ரந்தர பூரித
கொர்ச்சிப் பாகர பஞ்சச ரோசர
முற்கொத் தானப்ர சண்டச ராசர அதிரூட

சித்ரப் பாரவ சஞ்சல யோமள
ரத்னப் பூடண கும்பச மேளசெ
கத்துச் சேரம யங்குவ சீகர முலைமாதர்

இத்திப் பூறிய செங்கனி வாயமு
தத்தைப் போதவு முண்டுவி டாய்கொடு
சிக்கிப் போதுக ழிந்தது போதுமுன் அருள்தாராய்

வித்துக் கேசனொர் சந்திதன் மாமகள்
கொற்றச் சாலக டங்கடை பூண்முலை
வெற்பைக் கூடினன் வந்துசு கேசனொர் மகவானன்

விட்டுப் போயின ரங்கவர் சேயிடி
யொத்துப் போதவி ழுந்தழு காலையில்
வெற்றிச் சூலியு மங்கையு மாய்மிகு க்ருபையார்கண்

வைத்துப் பாரத னங்கொடு பாலும
ருத்திப் போகவ வன்குளிர் தேவவ
திக்குக் காதல்ம ணஞ்செய மாலியொ டொருமூவர்

மக்கட் பேறென வந்தனர் மாதவ
மெத்தத் தேடின ரென்றுயர் மாமுனி
மற்றுக் கேளென வங்கது கேள்விசெய் பெருமாளே.

உரை :—"அவ் வித்துக் கேசன் ஒப்பில்லாத சந்தியா தேவியின் பெருமையுள்ள மகளான மேன்மை பொருந்திய சாலகடங்கடை யென்னும் பெயருடையாளை மணந்து, அவளுடைய பூண் முலையாகிய மலையைக் கூடி இன்பம் நுகர்ந்து எங்குந் திரியும் போது அவள் கருக் கொண்டு சில நாட்களுக்குப் பின் காட்டில் ஒரு பிள்ளையைப் பெற்றாள்; பெற்றவுடன் வித்துக் கேசன் நீங்கிவிட அவனைப் பிரியமாட்டாமல் குழந்தையை விட்டுச் சால கடங்கடையும் அவன் பின்போக, அக் குழந்தை தரையில் விழுந்து, இடியொலி போல் மிகவும் அழும்போது, வெற்றியுள்ள சூலப் படை தாங்கிய சிவபெருமானும் உமா தேவியாரும் வெள்ளேற்றின் மேல் ஊர்ந்து வருகையில் இவ்வோசையைக் கேட்டு வந்து அருள் மிக்க நோக்கம் வைத்து, உமா தேவியார் பாலை அருத்திய பின், இவன் மரபினரைச் சிவபெருமான் கொல்லாரெனவும், இவன் இப்போதே காளைப் பருவ மடைக எனவும், வலிமை யுள்ளவனாகுக எனவும் வரமருளி அவனுக்குச் சுகேசனென்று பெயரிட்டுப் போய்விட்டனர்; இங்ஙனம் வித்துவக் கேச னுக்குச் சுகேசன் மைந்தனானான்; அவன் கந்தருவ கிராமணியின் மகளான குளிர்ந்த தெய்வவதியினிடம் காதல் கொண்டு மணந்து மாலியோடு

மூவரைப் பெற்றான்; அம் மூவரும் பெருந் தவம் புரிந்து பல வரங்களைப் பெற்றார்கள்'', என்று சொல்லி உலக முழுதும் புகழும் அகத்திய முனிவர் 'இன்னும் கேள்' என, மகிழ்ந்து கேட்டருளிய பெருமாளே; தொங்கும் முத்து மாலையை அணிந்து குங்குமக் குழம்பு பூசப் பெற்றதும், சிறந்த கருப்பூரத்தின் மணமுள்ளதும், தாமரை அரும்பை யொத்ததும், அழகுடன் குளிர்ந்ததும், அழகாகக் கலவைச் சேறு பூசப்பட்டு அதன் மேல் மூன்று வரிகள் எழுதப் பெற்றதும், பார்க்கப் பார்க்க மிகப் பூரித்துத் தருக்கிய வடிவுடையதும், மன்மதனுடைய ஐந்து மலரம்புகளும் அமைந்து உயர்ந்த பூங்கொத்தாகவுள்ளதும், மிகக் கடிய விரைவுடையதும், அசையும் மலை யுச்சிபோலும் உருவுள்ளதும், காண்போர் மனம் அசைய வொட்டாமலிருப்பதும், அழகுடையதும், இளமையும் அழகும் சேர்ந்து அமைந்துள்ளதும், மணிப் பணிகள் பூண்டதும், பொற் குடத்தை நிகர்த்ததும், கலவிக்குரிய விளையாட்டுடையதும், உலக முழுதும் மயங்கும் கவர்ச்சியுள்ளதும் ஆகிய நகிலையுடைய பெண்களின் இனிமை ஊறிச் சிவந்த கொவ்வைக் கனிபோன்ற வாயிலுண்டாகும் அமுதம் போன்ற நீரை யுண்டு, மிக்க வேட்கை கொண்டு அவ் வலையில் அகப்பட்டு இதுவரை வீணானது போதும்; இனி உன் அருளைத் தருவாய்.

மங்கையுமாய் என்னுமிடத்து வந்து என்னும் சொல் வருவிக்கப் பட்டது.

தானன தான தனதன தானன
தானன தான தனதன தானன
தானன தான தனதன தானன தனதான

311. மூலமு மாகி யயனெடு வார்சடை
ஈசனு மாகி நடுவுற நீயொரு
மூவரு மாகி வெளிவளி தீபுனல் செகமாகி
மூவுல காகி யதனிடை யாருயிர்
யாவையு மாகி வெகுவித மாயினை
மூதறி வானன மகிமையை ஞானமொ டுணர்வார்யார்
மேலெழ வோதி யறிபவர் போல்மிகு
தேசிக ராகி யுயர்குவர் தாழ்குவர்
வீடுபெ றார்கள் குருடர்பி னேசெலு மவர்போல
வீணர்கள் போன வழிமிசை போயடி
யேனும்வி ழாத நரகிலே வானதி
மேவிய பாத மினியிரு ளூதர வழையாதோ

மாலிய வானு மிளையசு மாலியும்
மாலியொ டாகு மொருதனி மூவரும்
மாதவ மேவி நெடியபி ராயமும் வலியாவும்

வாழ்கம லேச னுதவுகை யானுயர்
பூமியு நாக ருலகொடு வானமும்
வாதையில் வேக முடுகியொ ரூரினி எமதாகக்

கோனுமெ னுமுன் மயனுமு நீரிடை
மாதிரி கூட கிரிமிசை மாமதில்
கோபுர வாயில் தெருமனை காணவின் அதின்மேவிக்

கோதறு தேவ நருமதை யாள்பெறு
மூவகை மாத ருடன்மகிழ் காதைகள்
கூறிய வேத குறுமுனி பானுணர் பெருமாளே.

உரை :—சுகேசன் மக்களான மாலியவானும் அவனுக்கிளைய சுமாலியும் மாலியும் ஒருவர்க்கொருவர் குறைவின்றி வலிமை நிரம்பிப் பெருந் தவஞ் செய்து நீண்ட வாணாளும் ஏனைய ஆற்றல்களும், வருத்தமின்றி வாழும் தாமரைக் கடவுள் அருளப் பெற்று, நிலவுலகும், பாதலத்தோடு விண்ணுலகும் துன்பத்தால் வேமாறு சுட்டு ஆங்கு வாழ்வோரைத் துரத்தி விட்டு, அரக்கர் தச்சனாகிய மயனைப் பார்த்து, 'இனி, எங்கட்கு உரிமையாக ஒரு நகரை உண்டாக்குக' வென்று சொல்லு முன், கடலின் நடுவே பெரிய திரிகூட மலையின்மேல் உயர்ந்த மதிலும், கோபுரமும், கோபுர வாயிலும், தெருக்களும் வீடுகளும் உண்டாக்க, அந் நகரை அம் மூவரும் அடைந்து, குற்றமற்ற நருமதை யென்னும் கந்தருவ மகள் பெற்ற மூன்று பெண்களையும் மணந்தார்கள் ; அவர்களுள் மாலியவான் சுந்தரியையும், சுமாலி கேதுமதியையும், மாலி வசுதையையும் மணந்து மகிழ்ந்திருந்த வரலாற்றை மறைகளை யோதுகின்ற அகத்திய முனிவர்பால் கேட்டுணர்ந்த பெருமாளே ; நீ ஆதிமூலமாகி, பிரமனும் நீண்ட சடையையுடைய சிவபெருமானுமாகி, இவ் விருவருக்கும் நடுவேயுள்ள திருமாலாகி, நிலம், நீர், தீ, கால், விண்ணென்னும் ஐம்பெரும் பூதங்களாகி மண், விண், பாதலமென்னும் மூவகை யுலகங்களாகி, அம் மூவுலகிலுமுள்ள எல்லா உயிர்களுமாகி மற்றும் பல பொருள்களும் ஆனாய் ; முற்றிய அறிவால் நின் பெருமையை ஞானத்தோடு அறிவார் யார் ? எவருமிலர் ; உள்ளமூர்ந்தாது மேலெழுந்தவாரியாக நூல்களை ஓதியறிவார்போல், பொய் வேடமுள்ள குருக்களாகி, சுவர்க்கத்தை யடைந்து, பின்னர், நிலவுலகு, நரகு ஆகியவற்றில் இறங்கியும் அம் முறையே ஏறியும் அக் குருமார்கள் அலைவார்கள் ; வழிச் செல்வோன் அறியாத இடத்துக்கு வழி காட்டுவோர்

மன்று சொல்லிய குருடர் பின் போகும் அறிவிலியைப் போல, அடி யனும் குருமார் என்று பெயரிட்டுக் கொண்டுள்ள வீணர்கள் சென்ற ழியே பல பிறவிகளிலும் சென்றேன்; அதனால் நான் வீழாத நரகமில்லை; வ்வாறு வீழ்ந்து வருந்தியது போதும்; இனி, வான்நதி குடியிருக்கும் ன் திருவடி அன்புடன் அடியேனை அழையாதோ? அழைக்கும் என்பது ன் உறுதி.

உயர்குவர் தாழ்குவர் என்பதற்கு உயர்வையும் தாழ்வையும் பெறு பார்கள் என்றும் பொருள் உரைக்கலாம்.

தானனனு தந்தன தத்தன தத்தன
தானனனு தந்தன தத்தன தத்தன
தானனனு தந்தன தத்தன தத்தன தனதான

312. காலுளதே வந்துப்ர தக்கண முற்செய
வாயுளதே நின்றுது திக்கம லர்க்கெழு
காடுளதே சென்றுப றிக்கவி ணைக்கர முளதேநின்
காதைகளே கொண்டுநி றைத்திட நற்செவி
தானுளதே நின்சொரு பத்தைவி ருப்பொடு
காணவுமே கண்களெ னக்குள வித்தனை உளவாயும்
சீலமிலேன் வஞ்சகன் முட்டனு றைப்பிலி
காமுகன்மூ டன்கவ டுற்றுமி கப்பொருள்
தேடுமுலோ பன்க்ருபை யற்றவன் வக்கிரன் நரகூடே
சேருமதோ சஞ்சல புத்தியை விட்டுனை
நாடிடவே யன்பொடு புத்தியு மெய்ப்படு
சேவையுநீ தந்துவி ழிக்கடை வைப்பதும் ஒருநாளோ
மாலியவா னின்புல வச்சிர முட்டியும்
யாகவிரோ தன்சுக தத்தனுன் மத்தனும்
மாதுன்முகே தன்விரு பக்கனு மத்தனெ டேழுவோரை
மானனையாள் சுந்தரி பெற்றனள் பொற்புள
கேதுமதி யென்பவள் வெற்றிப டைத்தசு
மாலிகுலா வும்படி நற்கைக சிப்பெய ரவளோடு
மேலினையாள் கும்பிந சிப்ரப லத்தியை
வாழ்வெனவே தந்தனன் மற்றிள வற்கரன்
மேலனலோ னென்பவர் மற்றிரு புத்திர ருளரானோர்

வீறுடனே தந்தையி னுக்ரமி குத்தனர்
மாலுடனே யண்டரு ரைத்தன ரக்கதை
வீரியகே ளென்றகு டத்தனை மெச்சிய பெருமாளே.

உரை:—மாலியவா னென்னும் அரக்கர்க்கரசனால், வச்சிர முட்டியையும், வேள்விகட்குப் பகைவனான வஞ்சககேதுவையும், துயில்வோரைக் கொல்லும் சுகதத்தனையும், உன்மத்தனையும், பெருங் குற்றங்களைச் செய்யும் துன்முகனையும், விகாரமான கண்களையுடைய விருபாக்கனையும், மத்தனையும், மான்போலும் கண்களையுடைய சுந்தரி மென்பாள் பெற்றாள்; அழகிய கேதுமதி யென்னும் பெயருடையவளை வெற்றி மிக்க சுமாலி கூடி நல்ல பண்புடைய கைகசி என்பாளோடு அவள் தங்கை கும்பிநசி என்னும் வலிமையுள்ளவளையும் தன் செல்வமாகப் பெற்றான்; சுமாலி, மாலியவான் இருவருக்கும் தம்பியாகிய மாலிக்கு வசுதைபால் அரன் என்போனும் அனலனென்போனும் (அனிலன், சம்பாதி யென்போரு மாக நால்வர்) தோன்றினர்; (வான்மீகத்திற் காண்பது; சுந்தரிக்கு அனலை என்னும் மகளும், கேதுமதிக்குப் பிரகத்தன், கம்பன்னன், கடன், காலன், கார்முகன், தூமாக்கனாகிய புகைக் கண்ணன், தண்டன், சுபாரிசுவன், சங்கிராதி, பாலை, கரணன், ஆகப் பதின்மர் மக்களும், புட்பொற் கடைப்பகை யென்னும் பெண்களோடு தோன்றினர் என்பது) இவர்கள் அனைவரும் நன்கு வளரும் முன் தம் தந்தையரைப் போல் வெகுளி மிக்கு உலகங்கட்குத் தீங்கிழைத்தனர்; இவ் வரலாற்றைத் திருமாலிடம் இமையவர் உரைத்தனர்: அக் கதையை 'வீரமுள்ள இராமா கேள்' என்று சொல்லிய அகத்திய முனிவர் புகழ்ந்து பரவிய பெருமாளே; நின் திருக்கோயிலை வலம் செய்யக் கால்கள் உள்ளன; நின் திருமுன் நின்று போற்றி யிசைப்பதற்கு வாயுளது; நின்னை அருச்சிக்கப் பூக் கொய்வதற்குப் பூக்கள் நிறைந்த பூந்தோட்டங்கள் உள; பூக்களை மாலையாகக் கட்டி நினக்குச் சாத்துவதற்கு இரு கைகள் இருக்கின்றன; நின் கதைகளைக் கேட்டு நிரப்புதற்கு இரு காதுகள் அமைந்துள்ளன; நின் தூய வடிவத்தைக் கண்டு மகிழ்தற்கு இரு கண்கள் நேர்ந்துள்ளன; இத்தனை யிருந்தும் நான் அவற்றால் செய்யத் தக்கவற்றைச் செய்து நன்மையடையாத—ஒழுக்கமில்லாதவன்; வஞ்சகன்; துப்பற்றவன்; கூர்த்தமதி யில்லாதவன்; ஆசை மிக்கவன்; ஏதும் அறியாத மூடன்; கபடமுள்ளவன்; மிக்க பொருள் தேடும் இவறன்மை யுடையவன்; இரக்கமில்லாதவன்; கொடியவன்; இத்தகைய நான் நரகில் வீழ்வதா? இனி அலைந்து திரியும் அறிவை விட்டு, நின்னைப் பரவும் அன்பும் அதனோடு நல்லறிவும், மெய்ம்மையுள்ள நின் சேவையும் நீ தந்தருளி அருட்கண் வைப்பதும் ஒரு நாளிற் கிடைக்குமா? அருள் செய்வாய்.

தானன தந்தன தத்த தத்தன
தானன தந்தன தத்த தத்தன
தானன தந்தன தத்த தத்தன தனதான

313. வாழிம றங்களி சித்து மெத்திய
ஊசன்ம தங்குகு றத்தி யற்கைய
மானைகள் சம்பிர மத்து றைக்கவி ஒருபோகு
மாலைகொள் வஞ்சிவி ருத்த மக்கவி
தாழிசை வெண்டளை கைக்கி ளைத்திற
மாசில்க லம்பக லக்க ணப்படி மொழிவேன்யான்
ஏழுக ரும்புயல் கற்ப கத்தரு
மாமணி சிந்தினை சற்று மொப்பல
யாரினும் விஞ்சுகொ டைப்ர புத்துவம் உடையாய்நீ
யானுனை யின்றுது திக்கு மித்தமிழ்
கேளென நின்றுபு ரட்டி வைத்திடும்
ஏழைமை யன்றியு னைத்து திக்தருள் பெறுவேனோ
ஆழியி லண்டரு ரைத்த ரற்றிய
வாசக நின்செவி யிற்பு கக்ருபை
யாகியெ ழுந்தனை விற்கை பற்றினை நிருதேசர்
ஆவிய லைந்திட நற்க கப்புயம்
ஏறிய டர்ந்தனை நத்தொ லித்தனை
ஆசுக முந்தினை கொக்க ரித்தனை மறவோர்தம்
வீழம லைந்தனை சக்ரம் விட்டனை
மாவியி றந்தன னக்க ணத்தினில்
வீரரி லங்கையும் விட்டொ ளித்தனர் பிலமீதே
மேவினர் பின்புவி ளைந்த வக்கதை
கேளென வன்பொடு ரைத்த கத்தியன்
மேலுமி ருந்துசொ ல்ப்ரி யப்படு பெருமாளே.

உரை :—“இமையோர் திருப்பாற் கடலுக்கு வந்து அரக்கர்களால் தங்கட்கு நேர்ந்த துன்பங்களைக் கூறி முறையிட்ட சொற்கள் நின் செவியிற் படலும், விண்ணர்க் கிரங்கி எழுந்தனை ; சார்ங்கமென்னும் பெயருடைய வில்லைக் கையில் பிடித்தனை ; அரக்கர் தம் உயிர் அலையுமாறு நன்மையுள்ள பெரிய திருவடியின் தோளில் ஏறி விரைந்து சென்றனை ;

சங்கினை ஒலித்தனை ; அம்புகளைச் செலுத்தினை ; ஆரவாரம் செய்தனை ; சக்கரத்தை விட்டனை; வீரர்களை இறக்கச் செய்தனை; அதனால் மாலி யிறந்தான் ; அந்நேரத்தில் மாலியவான், சுமாலி முதலிய வீரர்கள் அஞ்சித் தம் சினத்தலையும் இலங்கையையும் விட்டுப் பாதலத்திற் சேர்ந்து ஒளித்திருந்தனர் ; பின்னர் அவர்கள் செய்த செயல்களைக் கேள் "என்று அன்புடன் புகன்ற அகத்திய முனிவர் மேலும் இருந்து தொடர்ந்து சொல்ல விரும்பிக் கேட்டருளிய பெருமாளே; நான் உலோபிகள் மீது வாழி, மறம், களி, சித்து, மெத்தென ஆடும் ஊசல், பாடும் மதங்கு, குறத்தின் இயற்கை, அம்மானை, சம்பிரமுள்ள கோவையிற் பாடும் துறைகள், ஒரு போகு, மாலை வாங்கி வர விடும் தூது, வஞ்சி, கலிப்பா, தாழிசை, வெண்பா, ஒரு தலைக் காமத்துறை முதலியவை அமையக் குற்றமின்றிப் பாடும் கலம்பக விலக்கணத்திற் குறைபாடின்றிப் பாடி, அவர்களை 'ஏழு முகில்களென்றும், ஐந்தரு வென்றும், பெருமை மிக்க சிந்தாமணி யென்றும் சொல்லப்படும் அவை, கேட்பதற்கு முன்னே நினைத்தவற்றை நினைத்தபடியே தருபவை எனினும் உங்கட்கு ஈடாகா'வென உயர்த்திப் புகழ்ந்து, 'எவரினும் விஞ்சிய ஈகைச் செயல் புரியவர்கள் நீங்களாதலின், இக் கலம்பக நூற் பொருளைக் கேளுங்க'ளென்று அம் மூர்க்கர் முன் நின்று புரட்டுச் செயலோடு கூறும் அறியாமையை ஒழித்து நின்னைப் புகழ்ந்து, நின் அருளை இனியேனும் பெறுவேனோ ? சொல்லுக.

தனத்தன தானன தந்த
தனத்தன தானன தந்த
தனத்தன தானன தந்த தனதான

314. சனித்தனை யாமதி யென்று
குருட்டினை மேல்விழி யென்று
சலத்தினை வாழ்திற னென்று தளர்பேடி
தனைப்பொரு சீதர னென்று
கிழத்தினை நீசுக னென்று
தமிழ்த்ரையம் யாவுமு ணர்ந்து கவியாடி
வெளிப்பட நான்முனி யம்பல்
அசத்திய மானது கண்டு
மிகுத்துள போதனி கொண்டு பெறுநாள்போய்
மிடித்தது போதும றந்துன்
அடித்துணை பாடியு யர்ந்த
வினைக்கரை போதுத வங்கள் பெறுவேனோ

ஒளித்தசு மாலியெ ழுந்து
மகட்குரி யாரைவி ளங்க
உலப்பறு பூமியில் வந்து திரிவான்முன்
உரைத்தகு பேரன்ம ருங்கு
நிதிப்படை சூழவி யங்கள்
ஒலிப்பவி மானமு கைத்து வருவானை
அளித்திவ னோநமி லங்கை
புரப்பனெ னவிடர் மண்டி
அடர்ப்பில மீளவி ழிந்து முதலோன்முன்
அரற்றினன் மாமகள் முன்பின்
உரைத்தது கேளென வென்றி
அகத்தியர் கூறவு ணர்ந்த பெருமாளே.

உரை :—'பாதலத்தில் ஒளித்த சுமாலி மேலே எழுந்து, தன் மகள் கைகசிக்கு உரிமையான கணவன் எங்குளனெனத் தேடுதல் கருதி (வருத்தமற்ற) அழிவில்லாத நிலவுலகுக்கு வந்து திரிவோனாகி, ஒரு நாள், முற் சொல்லப்பட்ட குபேரன், தன் பக்கலில் சங்கநிதி, பதுமநிதி முதலிய படைகள் சூழ, பலவகை இன்னியங்கள் ஒலிப்ப, புட்பக விமானத்தி லேறிச் செலுத்தி வருவதைக் கண்டு, 'நம் இலங்கையை இவனோ ஆள்வது?,' என்று துயரால் விரைந்து மீண்டு பாதலமடைந்து, தன் தமையனான மாலியவான் முன்னே முறையிட்டுச் சொல்லி, பின்னர், தன் மூத்த மகளான கைகசியிடம் கூறியதைக் கேட்பாய்' என்று, தவத்தால் வெற்றி மிக்க அகத்தியர் சொல்ல அறிந்தருளிய பெருமாளே; அவை யஞ்சித் தடுமாறுவோனைப் பேரறிவுடையோ னென்றும், கண்ணில்லாக் குருடனைச் சிறந்த கண்ணுடையவ னென்றும், நிலையில்லா அறிவுடையவனைச் செல்வமுள்ள நிலைத்த அறிவுத் திறமுடையவ னென்றும், தளர்ந்த அலியைத் திருமாலென்றும், கிழவனை நீ இளமையுள்ள முருகனென்றும், மூத்த மிழும் அறிந்து பாடி, முன் சொல்லியவை பொய் யென்று வெளிப்பட்டு மிகும் போது அவன் கொடுப்பதைப் பெறும் நாள் கழிந்து வறுமைப் பட்டது போதும்; இனி, நான் அவ் வாறலைவதை விட்டு, நிலையாய் நின் திருவடிகள் இரண்டையும் பாடி, மேலான நல்வினை யென்னும் புண்ணியக் கரையிற் செலுத்தற்குரிய தவத்தைப் பெறுவேனோ?

பயனற்றவர்களைப் புகழ்ந்து கூறினால் அது பொய் யென்று வெளிப்படவே அவர்கள் ஒன்றையும் கொடார். எனவே 'மாபொருள் கொண்டு பெறு நாள் போய்' என்றார்.

தனனா தனத்தனனா
தனனா தனத்தனனா
தனனா தனத்தனனா தனதான

315. இகழ்வா ரடித்திடுவார்
பொருளே பறித்திடுவார்
இவரா ரெனப்பொடிவார் முதலானோர்
இவரே யெனக்குளவா
தரவே லதைக்குறியா(து)
எதிரே யுனைப்பணிவார் தொழுவார்மேல்
புகழ்வார் நினைத்திடுவார்
இவரோ டடுத்திடினீள்
புதுவாழ் வுபெற்றிடுவார் இதனாலே
பொதுவா யபத்தனுமாய்
வினைபோ யுனைப்பறுதாள்
புகுவே னெனக்கிதுவே அமையாதோ
மகளே மடக்கொடியே
திருவே யினப்பெடையே
மயிலே வனக்கிளியே அயனார்தம்
மகனார் மகற்குயிராய்
மனைசேர் கிழத்தியுமாய்
வரமே வுபுத்திரர்நீ பெறுவாயெம்
முகநா மெடுக்கனுமாய்
நமதூர் தனிப்புகலாம்
முறையா மெனப்பெறுவோன் மதிகூற
முனிசோ லைபுக்கனள்காண்
எனவே யகத்தியனார்
மொழியா வழுத்திமையோர் பெருமாளே.

உரை:—சுமாலி மகளுக்குக் கூறுதல்:

"மகளே, மடப்பம் உடைய பொற் கொடியே, திருமகளே, நடையாற் பெண்ணன்னமே, சாயலால் மயிலே, பேச்சாற் கிளியே, நான்முகன் புதல்வனாகிய புலத்திய முனிவன் மைந்தனாகிய விச்சிரவசுவென்னும் முனிவனுக்கு நீ உயிராகி அவனுக்குரிய மனைக்கிழத்தி யாகிச் சிறந்த

வரங்களைப் பெறத்தக்க மக்களைப் பெறுக; அதனால் குளிர்ச்சியோடு நாமெல்லாம் முகம் எடுத்து நிமிர்ந்து, நம் இலங்கை நகர்க்குட் புகலாம்; அங்கே இப்போது குபேரனிருக்கின்றான்; அவனும் விச்சிரவசுவின் மைந்தனாதலின், நீயும் அம் முனிவருக்கு மக்களை யீன்றால், அப் பிள்ளைகளும் இலங்கையை ஆளும் உரிமையைப் பெறுவர்" என்று 'பெற்ற தந்தையாகிய சுமாலி புகலக் கைகசி உடன்பட்டு விச்சிரவசுவின் சோலையினுட் புகுந்தாள் என்று கூறிய அகத்தியர் சொற்களால் போற்றப்பட்ட பெருமாளே; நிந்திப்போர், அடிப்போர், பொருள் பறிப்போர், இவர்கள் ஆர்? என்று தள்ளிப் பேசுவோர், ஆகிய பகைவர்களே எனக்குற்ற களைகணாய்க் கொண்டு அவர் சொற் கேட்டொழுகி நரகில் நான் வீழ்வேன்; அஃதன்றி, நின் திருமுன் நின்று நின்னை வணங்குவோர், கும்பிடுவோர், புகழ்வோர், சிந்தை செய்வோர் ஆகியவர்களோடு கூடுவோர், பெரு வியப்புடைய பரமபதச் செல்வத்தைப் பெறுவார்கள்; பெறாதார் யார்? நான் இப் பாவிகள் அறிவித்த தெய்வங்களை வணங்கிப் பொதுவில் அன்பனாகி இவர்களோடு நட்புக் கொண்டு தீவினையாகிய பாவச் செயல்களைச் செய்தலைப் போக்கி, இனி, நின் ஒப்பற்ற திருவடிகளிற் சேருவேன்; எனக்கிதுவே போதாதோ? போதும்.

'பத்தனுமாய்' என் புழி உம்மை எச்சத்தில் தொக்கி நின்றது.

தானன தனந்தன தானன தந்தன
தானன தனந்தன தானன தந்தன
தானன தனந்தன தானன தந்தன தனதான

316. காகமு மிரங்கிடு மேபகை விஞ்சிய
கூன்கயு மிருந்தழு மேகழு கும்பல
காலுள மழுங்குறு மேபெரி தன்பொடு வருபேயும்
காதலொ டுவெம்பிடு மேநரி யுஞ்சில
நரியு மெலிந்திடு மேபுழு வுங்கொது
கானது மயங்கிடு மேபெறு தந்தையும் ஒருதாயும்
ஆகுல மடைந்திடு மேபர வுங்கிளை
கோவென விழுந்தழு மேயுயிர் மைந்தனும்
ஆவென விழுந்திடு மேபுணர் மங்கையும் நிலைகாணுள்
ஆகிவி தனம்படு மேயுயிர் சென்றென
தாழவு டலஞ்சுடு கானிலெ ரிந்திடு
மாகிலெ மதென்றினி யாவர்தொ டர்ந்துள முருவாதார்

கேக்சி நடந்தனள் சோலைபு குந்தனள்
நான்முகன் மகன்சிறு வோனெதிர் நின்றனள்
கேகய மெனும்படி சாயல்பொ ருந்தினள் முனிபராக்
கீத்மொ ழிநின்பெய ரேதுவி ளம்பென
ஓதினள் பணிந்தனள் வாழ்வரு ளென்றனள்
கேடுசெ யுமைந்தர் லாதிலை யென்றனன் அவரோடோர்
நாகரி கமைந்தனும் வேணும்வ ழங்குக
நீயென வழங்கின னேகினண் மின்கொடி
நான்மறை துலங்கிய ராவண கும்பக ருணர்தாமும்
நாசிய றுமங்கையும் வீடண னுங்கொடி
யாரிடை பிறந்தனர் நால்வரு மென்றுமெய்ஞ்
ஞானமு னிகும்பச னோதவி ளங்கிய பெருமாளே.

உரை :—"கைகசி நடந்து சோலைக்குள் புகுந்து நான்முகன் மைந்தனாகிய புலத்தியன் மகனான் விச்சிரவசுவின் முன் நின்று, மயில் போலுஞ் சாயல் பொருந்தித் தலை குனிந்து நாணி நின்றாள்; அவளை விச்சிரவசு பார்த்து, 'பண்போல் இனிய சொற்களைப் பேசும் பெண்ணே, நின் பெயர் யாது? நீ யார்?' என்று கேட்க, அவள், "நான் சுமாலியின் மகள்; என் பெயர் கைகசி' என்று கூறி வணங்கி 'நும்மைக் காதலித்து வந்தேன்; என் கருத்தை முற்றுவிக்க வேண்டும்' என்றாள்; அம் முனிவர் 'இப்போது நான் உன்னோடு கூடின், உலகங்களுக்குக் கேடு செய்யும் மக்கள் நினக்குத் தோன்றுவர், வேறில்லை' என்றார்; 'அவர்களோடு நன் மகன் ஒருவனும் வேண்டும், தந்தருள்க'வென அவள் கேட்க, அவளோடு அம்முனி கூடிக் கருப்பதித் தகன்றார்; மின்கொடி போன்ற அவளுக்கு நான்மறைகளையும் விளங்குமாறு அறிந்த இராவணனும், கும்பகருணனும், இலக்குவன் கையால் மூக்கறுபட்ட சூர்ப்பநகையும் விபீடணனும் பிறந்தன"ரென்று உண்மையான ஞானம் படைத்த முனிவராகிய அகத்தியர் சொல்ல நன்குணர்ந்தருளிய பெருமாளே; என் உயிர் நீங்கி, என் ஊழலான உடல் சமத்தியில் எரிந்து விடுமானால், அப்போது காக்கையும் வருந்தும்; பகை மிக்க கூகையும் இருந்தழும்; கழுகும் பன்முறை மனத்தில் துன்புறும்; தின்னும் விருப்பத்தால் வரும் பேயும் உள்ளம் வேம்; நரியும் சிறிது கிழமான ஓரியும் மனம் இளைக்கும்; புழு, கொசு முதலியவை அறிவு மயங்கும்; இவை யாவும், தங்கட்குரிய உணவு வேகின்றதென்று கவலைப்படும்; இனி, பெற்ற தந்தையும் ஒப்பற்ற தாயும் துன்புறுவர்; மிக்க சுற்றத்தார் கோவென்று கதறி யழுவர்; என் உயிர் மைந்தன் 'ஆ' என்று அலறி அழுது மயங்கி வீழ்வான்; கூடிய மனைவி வேறு நிலை காணு

ராகி ஆதரவற்று மனம் புண்ணுறுவாள் ; இங்ஙனம் இவர்கள் எல்லோரும் அழும்போது, இவ்வுடலை, எம்முடையதென்று கருதி மனம் உருகி அழா தார் யார்? எல்லோரும் வருந்துவார்களே யன்றி என்னுடன் வருவோ ரிலர் ; ஆகவே நீயே எனக்குத் துணை.

தானன தந்த தனன
தானன தந்த தனன
தானன தந்த தனன தனதான

317. நாவும டங்கி யிருமல்
கோழையெ ழுந்து விரவு
நாடிகு லைந்து விழியும் நிலையேயாய்
நாசிகு ளிர்ந்து வதன
தாடைவி ழுந்து பழைய
நாழிகை வந்து குறுகும் ஒருபோது
நீவரு கின்ற வழகும்
மார்புநி றைந்த திருவும்
நேமியு மந்த வளையும் அலர்பாணி
நீடிய தண்டு முகமும்
லோசன புண்ட ரிகமும்
நீள்முடி யும்பொ னடியும் மறவேனே
ராவண கும்ப கருணர்
மூவுல கெங்கு மறுக
யாகம ழிந்து முனிவர் தடுமாற
ஏறிவி ழுந்து திரிய
நாசியி ழந்த வடிவி
யாரையு நின்று சருவி வலிதாக
மேவிமு யங்க மருவி
ஓடின ரங்க முதற
வீடண ரன்பு நெறியும் வழுவாதே
மேன்மைபொ ருந்த வவர்கள்
காரணி யங்கள் மலைய
வேதனி யம்ப வருள்செய் பெருமாளே.

உரை :—இவ்வாறு பிறந்த இராவண கும்பகருணர்கள் மூவுலகும் சுழன்று திரியவும்; வேள்விகள் அழிந்து தடைப்பட்டு முனிவர்கள் வருந்தவும்; மூக்கிழந்த மங்கையாகிய சூர்ப்பநகை கண்ட கண்ட ஆடவர்களைக் கண்டு காதல் கொண்டு அவர்களை வலிதிற் கூட்டியிருக்கவும் தப்பியோடினவர்களைத் துன்புறுத்திப் பிடித்துத் தின்று எலும்பை உதறித் திரியவும், விபீடணன் அன்பும் கலைகளின் நெறியும் தவறாமல் பெருமையைப் பெறவும், அவர்கள் கதையைப் பொதிய மலையில் வாழும் முனிவர் சொல்லக் கேட்டருளிய பெருமாளே ; எனக்கு இறப்பு நேருங் காலத்துப் பேச்சொடுங்குவதே யன்றி நாவும் அடங்கி இருமல் வந்து கோழை தோன்றியும், வாதம், பித்தம், கோழை யென்னும் நாடிகள் மூன்றும் அழிந்தும், கண்கள் அசையாது நிலைத்தும், மூக்கு வளைந்தும், முகமும் தாடையும் விழுந்தும், உயிர் ஒடுங்கும் போதில் நீ வரும் அழகையும் திருமார்பில் நிறைந்து நின்ற திருமாமகளையும், சக்கரத்தையும், அழகிய சங்கைத் தரித்த மலர்ந்த திருக்கைகளில் உள்ள நீண்ட கதையையும், திருமுகத்தையும் திருக்கண்களாகிய தாமரையையும், நீண்ட முடியையும் அழகிய திருவடியையும் மறவேன்.

'வதன தாடை' வதனமும் தாடையும் என விரிவதாலே உம்மைத் தொகை.

தனதனனு தத்த தந்த
தனதனனு தத்த தந்த
தனதனனு தத்த தந்த தனதான

318. ஒருகுலமீ திற்பி றந்தும்
ஒருகுலமீ திற்பு குந்தும்
ஒருவனையே பற்றி நின்றும் அனுராகம்

உபயமுலை யொத்த ணைந்தும்
வயிறிடையே கர்ப்ப சங்கை
ஒருவனையே பெற்று மொன்ப ணிடுகோலத்

தெரிவையரா கப்பி றந்தும்
மறுகவிடா மற்பு விங்க
சனனமதாய் உற்ற மைந்த க்ருபையோய்நீ

திருவடிசே விக்கு மன்பு
முதலவிசா ரிப்பை யென்று
தெளிவுறுவேன் மற்ற தொன்றும் அறியேனே

நிருதர்பிரான் மற்ற டங்கி
அருமறையோ தித்த வங்கள்
நெடுகியகா னிற்பு குந்து தலைசேர

நிகர றுவா ளிட்ட ரிந்து
கனன்மிசையே யிட்டு நின்ற
நிலைமைபிரா னத்தர் கண்டு க்ருபையாகி

அரிதலைநீ பெற்றி டென்றும்
நரரைவிடா மற்றை யண்டர்
அமரிடைசா வற்றி டென்றும் உலகாளும்

அரசுனதா கக்கொ ளென்றும்
வரமதுபா லித்த பண்பை
அயன்மகனோ தத்தெ ளிந்த பெருமாளே,

உரை :—அரக்கர் கோனாகிய இராவணன், பின்னர் அத் தருக்குகள் அடங்கப் பெற்று அரிய நான்மறைகளையும் ஓதிய பின் தன் தம்பிய ருடன் பதினாயிரம் ஆண்டுகள் தவம் செய்வதற்கு ஓடரித்தில் சேர்ந்து கடுந்தவம் புரிகையில், ஆயிரம் ஆண்டுகட் கொரு தலையாகப் பத்துத் தலை களையும் வாளா லறுத்து வேள்விக் கனலிற் போட்டு வேட்டு நின்ற வளவில், உலகத் தந்தையும் என் தாதையுமாகிய நான்முகன் கண்டு இரங்கி வந்து, 'அறுபட்ட தலைகளை நீ பெறுக' என்றும், 'மக்களை யொழித்து மற்றைய விண்ணவர்களால் போரில் இறவாதிருக்கக் கடவை' என்றும், 'உலகங்களை ஆளும் அரசு நின்னதாக உடன்படுக' என்றும் வரம் கொடுத்த தன்மைகளைப் பிரமனின் புதல்வராகிய அகத்திய முனி வர் சொல்லத் தெளிந்தருளிய பெருமாளே ; என்னை, ஒரு குலத்தில் பிறந் தும், பின் ஒரு குலத்தில் புகுந்தும், புகுந்த அக் குலத்தில் ஒருவனையே கணவனாகக் கொண்டு இருவர் பாலும் ஒத்த அன்பு மீதூரக் கலந்தும், வயிற்றில் கரு ஆகிய தென்று ஐயம் கொண்டு ஒருவனைப் பெற்றும் வாழ்கின்ற-மென்மையாகச் செய்யப்பட்ட-அழகையுடைய பெண்ணைப் பிறப்பிக்காது ஆணைப் பிறக்கச் செய்த கருணையுடையவனே ; இதனோடு, இவ்வாறு செய்த நின் திருவடிகளை வணங்கும் அன்பையும் எனக்குத் தந்தருள வேண்டும் என்பதையும் உள்ளத்தில் நீ நினைத்திருப்பாய் என் னும் தெளிவுற் றிருக்கிறேனே யன்றிப் பிறிதிலன்.

'பிரான் அத்தர்' என்பனவற்றுள் பிரான் என்பது உலகத்திற்குத் தந்தை என்பதனையும், அத்தர் என்பது அகத்தியர் தம் தந்தை என்பதனை யும் உணர்த்தி நின்றன.

தத்தன தான தனன தத்த
தத்தன தான தனன தத்த
தத்தன தான தனன தத்த தனதான

319. குத்திர மாக நினைவு புற்றி
உத்தமர் போல வடைவு முற்றி
கொத்துடை மாலை முடிய னைத்து முளனாகிக்

கொற்றவர் வாயில் மருவி மெத்த
வெற்றியின் மாய வகையின் மிக்கு
குத்திர சால முதல்வ ளர்த்து மணியாழி

முத்துட னுடை கனக மிட்ட
சத்திரம் வீசு கவரி வர்க்கம்
முற்படு மூர்தி வகைப றித்துள் நகையோடே

முட்டற வேகு களவு வித்தை
கற்றிடு நாள்க ளவைவு நிற்க
முத்தியு னுட வினியெ னக்கு மதிதாராய்

பத்திரு தோளி னிளவ லுக்ர
மெய்த்தவ மேவ வமரர் மிக்க
பத்மன்மு னோடி யினியெ யக்கு நிலைநானோர்

பட்டணம் வாழி யெனவ ரற்ற
மற்றவ னுவில் வனிதை யுற்ற
பக்குவ மீதி லவக டிப்ப அதனாலே

நித்திரை வேணு மெனவு ரைப்ப
அக்கண மேஅ வயன ளித்து
நிற்கில னேக விழும ரக்கன் நெடுவானுஞ்

நிர்ப்பல மான தெனவு ரைத்த
நற்குரு வேத முனியை மெச்சு
நிட்கள நாம ரகுகு லத்தர் பெருமாளே.

உரை :—" இருபது கைகளையுடைய இராவணனுடைய தம்பியாகிய கும்பகருணன், உண்மையும் கடுமையுமுள்ள தவஞ் செய்யும் இடத்தை நாடிச் செல்ல, மிக்க கூட்டமாக வுள்ள இமையோர்கள் நான்முகன் முன் சென்று, " கும்பகருணன் என்றும் அழியாதிருக்கும் (நித்தியத்துவம்) வரம் கேட்கக் கருதிக் கடுந்தவம் செய்கின்றான் ; நீவிர் அதனை அருளின்

எங்கட்கு நிலையே யில்லை ; அவன் தவஞ் செய்ய வருதற்கு முன்னேயே நாங்கள் மிக்க துன்பமடைந்தோம் ; அவன் தவம் செய்து கொண்டிருத்தலால் இப்போது பிழைத்தோம் ; வரத்தை அவன் பெற்றால் எங்கட்குப் பிழைக்கும் வழியில்லை ;" என்று முறையிட, அப்போது கலைமகளைப் பிரமன் குறிப்பால் நோக்கலும் அவள் கும்பகருணன் நாவிலிருக்கும் பக்குவ நிலையைக் கண்டு, நான்முகன் கும்பகருணனிடம் வந்து, 'நீ கருதியது கேள்' என, கலைமகள் அவகடப்படுத்தியதால், தடுமாற்றமுள்ள நாவினால் 'நித்திரை வேண்டு'மென அவன் கேட்க, அந்நொடியில் அவ் வரத்தை அவற்கருளி நிற்காது போனான் ; உடனே தூங்கிவிழும் அரக்கனாகிய கும்பகருணனுடைய வாழ் நாட்கள் எல்லாம் பயனற்றுப் போயின" என்றுரைத்த - மறைகளை நன்கறிந்த - சிற்றுருவுடைய அகத்திய முனிவரைப் புகழ்ந்து போற்றிய குற்றமற்ற பெயரையுடைய பெருமாளே ; புகழ் மிக்க இரகு மரபுக்குத் தலைவனே ; வஞ்சக நினைவு கொண்டு, பெரியவர் போன்று காணப்படும் இலக்கணம் முதிர்ந்து, பூங்கொத்துக்களால் கட்டப்பட்ட மாலையை யணிந்த தலைமுடி முதலிய அழகுகளைச் செய்து கொண்டு அரசர்களின் வாயிலிற் சேர்ந்து, அவர்களைப் பலவகை மாயத்தாலும் மிக்க இன்சொல்லாலும் மகிழ்வித்தும் வெற்றியுள்ள வஞ்சனைகளுள்ளும் மிக்க வஞ்சனையுள்ள இந்திர சாலம் முதலிய கலைகளை வளர்த்தும், மணிகள், விரலாழிகள், முத்துக்கள் ஆகியவற்றோடு ஆடைகள், பொற்காம்புள்ள குடை, வீசப்படும் வெண்சாமரை, முதலிய அழகுப் பொருள் வகைகளும், இவற்றுக்கு மேம்பட்ட யானை, குதிரை, சிவிகை முதலிய ஊர்திகளும் ஆகியவற்றை அரசர் கையினின்றும் பறித்தும் உள்ளே நிறைந்த மகிழ்ச்சியோடு தடையின்றிச் செல்லும் திருட்டுச் செயல்களை யெல்லாம் கற்றுக் கொள்ளும் நாட்கள் நிற்க. இனி, எனக்கு வீடுபேற்றை ஆராயும் மெய்யறிவை அருள்வாய்.

கலை மகள், நாவைப் பிறழ உரைப்பச் செய்தது வஞ்சனை.

அவகடிப்ப—வஞ்சகம் செய்ய.

தத்தனன தனதனன தத்த
தத்தனன தனதனன தத்த
தத்தனன தனதனன தத்த தனதான

320. தற்கரியா தவர்அவச ரித்தர்
சித்திரகா ரர்நன்மனை றியி யற்கை
சற்றுமிலா தவர்வெகுத னத்தர் பெரியோரைத்

தப்புரையே சொலியதுமு டிக்குமி
லக்கணவீ ணர்களொருவர் வித்தை
தட்டறவே புரிபொழுது மெச்சி மகிழாமல்
எற்கிதெலாம் வருமிதுவு நிற்க
மிக்கதையா னுமறிகுவன் மித்தை
இற்றெனவோ திடுமவர்கள் பக்கம் அணுகாதே
எப்படியா கினுமறிஞ ருற்ற
நற்சபையே றியுனடியர் பிச்சை
இட்டதொர்நூல் வகைகளிலெ னக்கு மதிதாராய்
நற்குணவீ டணனுயர்த வத்தின்
முற்றிடுபோ தினிலயனெ திர்த்து
நத்தியதே தெனவருளு மிக்க அரிதாளில்
நட்புறுகா தலுமவச ரித்ரம்
விட்டிடுதீ ரமும்வெகுளி முற்றும்
நட்டமுமே லவர்உறவு நிட்டை நெறியாவும்
நிற்குணஞா னமுமிவைய ளித்தும்
உற்றருள்வா யெனவவனை மெச்சி
நித்தமும்வாழ் கெனவரம ளித்தெய் இறையேக
நித்தியனு யினனுனது பத்தன்
உத்தமனே யெனமுனியு ரைப்ப
நிச்சயமா மெனமுடிய சைத்த பெருமாளே.

உரை :—"நற்பண்புகளுள்ள விபீடணன் செய்த மேலான தவம் முற்றிய போது நான்முகன் அவன் முன் தோன்றி, 'நீ விரும்பியது யா'தெனக் கேட்க, விபீடணன், 'அருளும், திருமாலின் திருவடிகளிடத்து உண்மை யன்பும், தீய வரலாறுகளை விட்டொழித்து நிற்கும் உள்ளத் துணிவும், வெகுளி, பற்று, இவறன்மை, காமம், செருக்கு, பொறாமை, இடும்பு, நானென் றிறுமாத்தல் முதலிய பகைகளை அழித்துக் கெடுத்தலும், விழுமியோர் உறவும், நிட்டையும் ஆகிய நன்னெறிகளும், குணமென்பதில்லாத உண்மை ஞானமும் எனக்கருள வேண்டும்' எனக் கேட்க, எந்தையாகிய நான்முகன் அவ் வரங்களை நல்கி மிக்க மகிழ்ச்சியோடு 'நீ நாளும் அழிவின்றி வாழ்க' என்று தன் சிறந்த வரத்தையும் அவற்றோடு சேர்த்தளித்துப் போக, ஆண்டவகையே, நின் அன்பன் அழிவில்லாதவனானான்" என்று அகத்தியர் சொல்ல இவை மெய்யாகு மென்று

திருமுடி யசைத்தருளிய பெருமானே ; உள்ளது சொல்லின் அஃதில்லை யென்று தருக்கம் செய்பவர், பசித்துக் கேட்போர்க்கு ஈயாதவர்; தீயொழுக்கமுள்ளவர், வஞ்சமுடையோர், நன்னெறி என்பது இயற்கையிற் சிறிது மில்லாதவர், பெருஞ் செல்வமுடையவர், பெரியோரிடம் தவறுகள் சொல்லி ஏமாற்றி நல்லிலணக்கணம் கெட்டவர், ஒருவர் ஒரு வித்தையைத் தடையின்றிச் செய்யும் போது, அதனை வியவாமல் ‘எனக்கு இவை யாவும் தெரியும், இவற்றின் மேலும் பல தெரியும்; இவை யனைத்தும் பொய்’ யென்று சொல்பவர், ஆகிய இவர் பக்கலில் நான் சேராமல் தடுத்து, எவ்வாறேனும் அறிவுடையோர் அவை யேறி, அங்குள்ள நின் அடியார்கள் இடும் ஐயம் எனப்படும் ஒப்பற்ற நின் அறிவு நூல்களைப் படித்தற்குரிய அறிவை யருளுவாய். தற்கர் இயாதவர் என்க.

தனதனன தானன தந்த
தனதனன தானன தந்த
தனதனன தானன தந்த தனதான

321. விரகினுட னேபல தொந்த
வடிவுகொடு நீவரி னுன்றன்
விபரிதமெ னுலறி யுந்த ரமதாமோ

விடவுரைசெய் தேனது வன்றி
அடிமைபுரி யேன்முத லென்றன்
வெகுளியறி யாயலை தொண்டு கொளவேதான்

கருதிவரு வாயெனி லந்த
மலர்மகளு மார்பும லர்ந்த
கமலமென லாகிய கண்கை முகில்போலும்

கரியவெழி லோடுவி ளங்கி
இனிதுவர வேணுமெ னெஞ்சு
கரையவிடு கோலமெ தென்பு துணர்வாயே

வரமுடைய ராவண கும்ப
கருணனொடு வீடண னென்று
வயவருயர் கானிடை தங்கி உறைநாளின்

மறுகுபில மீதினி ருந்த
குரவரிவர் வாழ்வது கண்டு
வரலுமவர் தாளது வணங்கு மெழிலோடும்

பொருவில்கடல் சூழுமி லங்கை
எமதொருகு பேரன டைந்து
புரவலனு மாயின னென்ற உரைகேளாப்

பொறுமினென மாமனை முந்த
நிதிபதிமு னேவின னென்ற
பொதியமலை யானையு வந்த பெருமாளே.

உரை:—ஆற்றல் மிக்கவர்களாகிய இராவண கும்பகருண விபீடணர்கள் வரம் பெற்றுக் காட்டில் தங்கியிருந்த (போதில்) நாட்களில், கொடுமை மிக்க பாதலத்தில் முன் சேர்ந்திருந்த மாலியவான், சுமாலி, என்னும் முதியோர்கள் தம் பெயரன்மார் திறத்தைக் கேட்டறிதற்கு வர, இராவணன் முதலியோர் அவர்களை வணங்கி நிற்க, அம் முதியோர் "அழகுடன் ஒப்பற்ற கடலாற் சூழப்பட்ட இலங்கை நகர் முன்னம் எங்கட் குரிமையாயிருந்தது; இப்போது குபேரனென்பான் அதற்கரசனாகி ஆள்கின்றான்;" என்ற சொற்களை இராவணன் கேட்டு, அப்பொழுதே பாட்டன்மாரோடும் பிற அரக்கர் படையோடும் புறப்பட்டுப் போய்க் கடற்கரையில் இறங்கி, மாமனாகிய பிரகத்தனை நோக்கி, 'நீ, குபேரனைக் கண்டு, இவ் விலங்கை முன் எங்கள் பாட்டன்மார் ஆண்டது; அவர்கள் இந் நகரை உனக்குக் கொடுத்தா ரல்லர்; அன்றியும், நாம் எல்லோரும் விச்சிரவசு முனிவரின் மைந்தர்களாதலின், நாங்கள் இந் நகரை ஆளுதல் வேண்டும்; நீ போய் விடுக; போவதில்லையாயின் நின் என்பை முறித்துத் தூரத்திவிடுவோம்; என்று நான் சொன்னதாகச் சொல்லுக' என்று ஏவினன் என்று சொல்லிய மலய முனிவரை மகிழ்ந்தருளிய பெருமாளே; நீ மிக்க சூழ்ச்சியோடு பல மாய வடிவுகள் கொண்டு என்பால் வந்தால், நின் இயற்கையல்லா வியப்புச் செயலை அடியேனால் அறிதற்கியலுமோ? நின் அற்புதத் திருவடிகளை விடவிடப் பேசினேன் அடிமை செயேன் எனினும் என்னை அடிமை கொள்ளத் திருவுளம் பற்றுவாயெனில், அழகிய தாமரை மலரில் உள்ள திருமாமகளும் திருமார்பும், மலர்ந்த தாமரையெனத்தகும் திருக்கண்களும், திருக்கைகளும், நீண்ட கருமுகில் போலும் திருமேனியும் விளங்குமாறு நீ இன்பமுடன் வர வேண்டும்; அக்கோலம் அடியேன் மனத்தைக் கரைத்து உருக்குமென்பதை நீ அறிவாய்; ஆதலின் அக் கோலத்தோடு எழுந்தருளல் வேண்டும்.

'நீ என் சினத்தை யறியாயல்லை; அறிந்து வைத்தும் உன் வெறுப்பற்ற அருள் நோக்கால் நின் இயற்கைக்குப் பொருந்த என்னை அடிமை கொள்ள வரல் வேண்டும்' என்றுரைக்க.

தானனனு தந்த தத்த
தானனனு தந்த தத்த
தானனனு தந்த தத்த தனதான

322. தேவனுநீ கொண்டு கட்டு
மாகுருநீ நண்பு வைத்த
சீவனுநீ தந்தை சுற்றம் முதலோர்நீ
சேர்பொருணீ நந்த ரித்ர
காலனுநீ மண்டி ருட்கொர்
தீபமுநீ வந்த டுத்த துணைதான்நீ
காவலனீ எங்கள் குற்ற
மானவையா வும்பொ றுக்கை
காரியமே யென்றி ருக்க உரியாய்நீ
காணவொணு நின்ச ரித்ர
வேலையிலா டும்ப டிக்கொர்
காரணமா மிங்கெ மக்கு நிகர்யாரோ
ராவணனே வும்ப்ர கத்தன்
நீடுகுபே ரன்ப திக்குள்
ஏகிமுனே சென்றுன் வெற்றி இளவீரன்
யாமுதல்வா ழுந்த லத்தை
நீவிடுவீ ரங்கள் செப்பில்
ஏகவிடே னென்பொ டிப்பன் எனவோதி
வாவென்வே யின்று விட்ட
தூதனும்யா னென்று ரைப்ப
வாழ்வுடனே லங்கை விட்டு நிதியாள்வான்
மாதவமா தந்தை பக்கம்
மேவினன்கா ணென்று தெற்கு
வாழ்மலையா ளன்து தித்த பெருமானே.

உரை :—"இராவணனால் அனுப்பப்பட்ட பிரகத்தன் உயர்வுடைய குபேரன் நகர்க்குட் சென்று அவனைக் கண்டு, 'நின் தம்பியாகிய வீர மிக்க இராவணன் சொன்னதைக் கேள்; முன் அவன் மூதாதையர் வாழ்ந்த இலங்கையை நீ விட்டு விட்டுப் போகாது ஆண்மையினை மொழிந் தால், உன்னை ஓடவிட மாட்டான்; எலும்பை ஒடிப்பான்; இஃது அவன்

சொன்னது; 'அதைச் சொல்லவந்த தூதன் யான்; மாமனும் நான்' என்று கூற, அப்போதே நிதிக் கிழவன் இலங்கையை விட்டு இயக்கர், கின்னரர், சங்கநிதி, பதுமநிதி, புட்பக விமானம் முதலிய செல்வங்களுடன், பெருந் தவம் செய்யும் சிறப்புடைய தந்தையாகிய விச்சிரவசு முனிவர்பாற் சென்றான்" என்று தென் திசையில் உள்ள பொதிய மலையில் வாழும் அகத்திய முனிவர் கூறிப் பாவிப் போற்றிய பெருமாளே; தெய்வமும் நீ; அடிமையைக் கட்டுப்படுத்தும் பெருங் குருவும் நீ; நட்புள்ள உயிரும் நீ; அளவற்ற நல்லொழுக்க முள்ளோனும் நீ; தந்தை, தாய், உறவு முதலிய சுற்றமும் நீ; சேரும் பொருளும் நீ; எம் வறுமையை அழிக்கும் எமனும் நீ; மிக மூடிய அறியாமை யென்னும் இருளுக்கு ஒப்பற்ற அறிவு விளக்கும் நீ; வந்தடுத்த துணையும் நீ; காப்போனும் நீ; எங்கள் பிழையனைத்தும் பொறுத்தலே செயலென்று பொறுத்துக் கொள்ளும் நண்பனும் நீ; இவை யனைத்தும் நீயே யாதலின், எவராலும் அறியவியலாத நின் திருவிளையாடலாகிய கடலில் மூழ்குதற்கு ஒப்பற்ற காரணமுடையவர்கள் நாங்களே யாதலின் எங்கட்கு நிகர் யார்? எவருமிலர்.

தனத்தன தந்த தானன தந்த
தனத்தன தந்த தானன தந்த
தனத்தன தந்த தானன தந்த தனதான

323. மயக்கமி குந்து கோபமி ரம்பி
அலக்கணி றைந்து காமம்வ ளர்ந்து
மதத்துறை மிஞ்சி பாசத முந்தி மிகுலோப
வகைப்படி நின்று நீர்மையி றந்து
புலைத்தொழின் மண்டி யேழைமை கொண்டு
மடிக்குணம் வந்து மாயமும் வஞ்ச கமுமீறித்
துயர்ப்படு கின்ற பாவியை யம்பொன்
அடித்துணை யின்க ணுளவி ரும்பல்
சுகப்பிழை யென்று நாணுதல் வந்த படியோமுன்
துதித்திடு மன்பர் தாமிது கண்டு
வெறுப்பர்க ளென்ப தோவெனை யின்று
துரத்திய தென்கொ லோவொரு கிஞ்சில் அறியேனே
இயக்கன ழிந்து தாதைப தங்கள்
வழுத்திவ ணங்கி ராவணன் வந்தென்
இருக்கைய வர்ந்து சீறின னென்று முதலோதத்

எமர்க்கவன் மைந்தன் வேலையி லங்கை
அரக்கரு றைந்த மாநகர் பண்டை
இமக்கிரி யின்க ணேகுதி யென்று முனிகூற
வியப்பினு டன்கு பேரனெ ழுந்து
வடக்கிட மன்று கோவினன் முந்தை
விருத்தரொ டும்ப்ர தாபமி குந்த நிருதேசன்
விருப்புட னத்ரி கூடசி லம்பில்
அடுத்தன னென்று நான்முகன் மைந்தன்
விரித்திடு பண்பு சோவி ளங்கு பெருமாளே.

உரை :—"இயக்கனுகிய குபேரன் இலங்கையை விட்டெழுந்து சென்று தன் தந்தையின் திருவடிகளை வணங்கிப் போற்றி, இராவணன் வந்து என் கோட்டையை வளைத்தான் என்றும், பிரகத்தன் வந்து கடு மொழி புகன்றனென்றும் நிகழ்ந்தவைகளை முற்றும் நவில, அதற்கு விச்சிரவசு முனிவர், "இராவணனும் என் மகன்; அக் கடலின் நடுவிலுள்ள இலங்கை முற்காலத்தில் அரக்கர்க்குரிய நகராய் இருந்தது; ஆதலின் நீ இமய மலையின் கண் சென்று சிவபெருமானைக் குறித்துத் தவம் செய்க; அவர் வந்து உனக்கு வடதிசைக் காவலுரிமையும், அளகைப்பதியும் தம் இடத்திலிருந்து நீங்காத நட்புரிமையும் அருளுவர்" என்று சொல்லித் தவம் செய்தற்குரிய மந்திரத்தையும் அவனுக்கு அறிவுறுத்தி அனுப்ப, அவன் வியந்து சென்று வடதிசையைத் தனதாக வளைத்துக் கொண்டிருந்தான்; இங்கு, மிக்க கீர்த்தியுள்ள இராவணன், பழைமை மிக்க கிழவர்களாகிய மாலியவான், சுமாலி யென்பவர்களுடன், விருப்புற்றுத் தம் திரிகூட மலையாகிய இலங்கையை அடைந்தான்." என்று நான்முகன் மைந்தனை அகத்திய முனிவன் விளக்கமாய் உரைப்ப அழகிய அக் கதைகளை நன்கறிந்தருளிய பெருமாளே; மயக்கம் மிக்கு, வெகுளி பெருகி, துயரம் நிறைந்து, விருப்பம் வளர்ந்து, தருக்குள்ள நெறிகள் மிஞ்சி, இராசத குணமாகிய இறுமாப்பு முற்பட்டு, மிக்க உலோப வகையில் நின்று, நல்லியல்பு அழிந்து, இழிந்த ஒழுக்கங் கடுகி வரப் பெற்று, அறியாமை கொண்டு, சோம்பல் சேர்ந்து, பொய், வஞ்சகம் ஆகியவை களின்றி மீளா நின்று, இவற்றால் நலமின்றித் துன்பப்படும் பாவியாகிய அடியேனை, நின் அழகுஞ் சிறப்புமுள்ள இரு திருவடிகட்கும் அடிமையாக்கி நீ ஆட்கொள்ளுதலை நான் விரும்புதல், இன்ப வாழ்விற்குக் குற்றமாமென்று நீ நாணியதாலோ? அன்றி, நின்னை வணங்கிப் போற்றும் அடியவர்கள், நீ என்னை 'அடிமை கொள்வதைக் கண்டு பிணங்குவ ரன்றோ? அடியேனை இப்பொழுது இவ்வுலக மாயையில் மூழ்கி மயங்கித் திரியுமாறு துரத்தினை; அதன் காரணத்தை ஒரு சிறிதும் அறியேன்.

தானன தான தந்த தனதன
தானன தான தந்த தனதன
தானன தான தந்த தனதன தனதா

324, சேறுப டாதெ ழுந்து விடுபுழு
நீறுப டாதெ ழுந்து விடுகழல்
சேர்புன லூடு றைந்து வருகிடை இவைபோல
தீதற வேப ரந்து துறைதொறும்
ஊடுற வேது ளைந்து மவையவை
சேர்வுறு மோது றந்து கடைவழி யுளைநீ
பேறுடை யாரை யின்ப முருகிய
சீருடை யாரை யண்டர் களுமகிழ்
பேருடை யாரை யுன்ற னடிதொழ உரியாரை
பேதமி லாரை மண்டி மருவினை
வாதையி லாரை யன்றி யெனைநிகர்
பேயரை யேயு கந்த வுனதருள் அருளாதே
வீறுட னேயி லங்கை யதிபதி
மாமுடி சூடி யன்பி னிளையவள்
வீரன்மி னுன சிங்கு வையனுடன் மணமே
மேலொரு நாளின் மந்த வுதரியை
ஆதர வோடு கொண்டு மயனருள்
வேலுட னேயி ருந்து குலவினன் அடல்வீர
மாறுப டாத கும்ப கருணனும்
நீள்வயி ரோசன் மைந்தன் மகளுடன்
மாமண மேபு ணர்ந்து மருவினன் இளவீர
வாழ்சயி லூடன் மங்கை சரமையை
மேவினன் மேலு முண்டு கதையென
வாருதி யூண னன்று சொலமகிழ் பெருமானே

உரை :—இலங்கையை அடைந்த இராவணன் பெரு மகிழ்ச்சியோ
அரசாக முடி சூடிய பின், தங்கையாகிய சூர்ப்பநகையை வீரனும் மீ
போலும் நாவுடைமையால் வித்துவசிங்கு வென்னும் பெயருடையவனும்
அரக்கர் மரபிற் காலகேயுரைச் சேர்ந்தவனுமான ஒருவனுக்கு மண

முடித்து, அதன் மேல் ஒரு நாள், (அவ்விராவணன்) வேட்டையாடச் சென்ற காட்டில், அரக்கர் தச்சனாகிய மயனைக் கண்டு, 'நீ யார்? என்ன' அவன், 'நான் அரக்கர் தச்சன்; என் பெயர் மயன் என்பது; தேவமக ளிரில் ஏமை என்பாளை நான் கூட, அவள் இப் பெண்ணைப் பெற்று என் பால் விட்டுத் தேவருலகு புக்கனள்; இப் பெண்ணுக்குக் கணவனைத் தேடித் திரிகின்றேன்,' என்று சொல்ல, இராவணன், 'நான், நான்முகன் பெயரனான விச்சிரவசுவின் மைந்தன்; குபேரன் என் தமையன்; மாலிய வான் சுமாலி யென்போர் என் பாட்டன்மார்; நான் தவம் செய்து பிரமன் பக்கல், எவராலும் இறவா வரமும், அழகிய விருப்புள்ள வடிவமும் பெற் றவன்; மறைகள் பலவும் கைவரப் பெற்றவன்; இப்போது இலங்கைக் கரசன்' என்று சொல்ல, மயன் உளமகிழ்ந்து மண்டோதரியை மணஞ் செய்து கொடுத்துச் சிறந்த ஒரு வேலுந் தந்தான்; இராவணன் மண்டோ தரியுடன் கூடி இன்புற்றான்; வலிமையும் உண்மையும் மாறுபடாத கும்ப கருணனும் மாவலியின் மகனான வாணாசுரன் மகளாகிய வச்சிரசுவாலை யென்பாளைச் சிறக்க மணந்து கலந்திருந்தான்; அவ் விருவர்க்குந் தம்பி யாகிய வீரமுள்ள விபீடணன், கந்தருவருள் சயிலூடணன் மகளான சரமை யென்பாளை மண முடித்து இன்பம் நுகர்ந்திருந்தான்; அக் கதை இனி மேலும் உளது' என்று கடலைக் குடித்த அகத்திய முனிவர் சொல் லிய போது மிக மகிழ்ந்திருந்தருளிய பெருமாளே; சேற்றினுள் கிடப்பி னும் சேறு படாதுள்ள பிள்ளைப் பூச்சியும், சாம்பலுட் கிடப்பினும் அது படா தெழுகின்ற கழற்காயும், மிகப் பெருகிய நீருள் இருப்பினும், நீர் படாதெழும் கிடைக் கொடியும் தாம் தங்கிக் கிடந்த பொருள்களின் இயை பற்றிருத்தல் போல் நீ, உலக முழுதும் உள்ள எல்லாப் பொருள்களி னுள்ளும் புறமும் குற்றமின்றிப் பரந்து பல துறைதொறும் நிரம்பித் திளைத்திருப்பினும் அவற்றின் சேர்க்கை நினக்கு இருக்குமோ? இராது. நீ இவற்றைத் துறந்து முடிந்த நெறியிலே இருக்கின்றனை; இத்தகைய நீ, நின் அருளுடையோரையும், நின் மகிழ்ச்சிக் கடலில் மூழ்கிய சிறப் புடையவர்களையும், விண்ணவரும் மகிழத்தக்க பேறுடையவர்களையும், நின் திருவடிகளை வணங்கும் உரிமை யுள்ளவர்களையும், நீ, நான் என்னும் வேற்றுமை யற்றவர்களையும், விரைந்து பற்றும் இரு வினைகளின் துன்ப மில்லாதாரையும், அவர்களோடு நாயேனுக்கு ஒப்புள்ள பேர்களையும் மகிழ்ந்து ஏற்றுக் கொண்டனை; நின் அருளே அருள் என்று சொல்லத் தகும் சிறப்புடையது நின் திருவருள்.

கிடை சோழ பாண்டிய நாடுகளில் நெட்டி யெனவும், தொண்டை நாட்டில் கிடை, சடை யெனவும் சொல்லப்படுகிறது.

"விதிவாய்க் கின்று காப்பாரார்" (திருவாய்—5. 1.) என்பதனால் ஒரு காலத்தில் எம்பெருமான் திருவருள் வெள்ளம் எல்லோரிடத்திலும்

பாயும் என்பது போதரும்; எனவே நல்லவரோடு கெட்டவரும் அரு ளுக்கு இலக்காவார் என்பது குறிப்பு.

தந்தன தந்தன தத்தன தானன
தந்தன தந்தன தத்தன தானன
தந்தன தந்தன தத்தன தானன தனதான

325. உண்டுமி ழுஞ்சில்ச கத்ரயம் யாவையும்
விஞ்சிடு மெஞ்சவி ஹற்றவ் மானவர்
உந்தியர் சங்கரர் மற்றுள வானவர் இவர்மேன்மை
ஒன்றைவி ளம்பினு நிச்சயம் யாதினி
இங்கிவர் தங்கள்வ ரைப்பினி லேமனம்
ஒன்றிய னந்தவு கந்தமெ ஞருயிர் தடுமாறிப்
பண்டுள தென்கட லிற்கழி தான்வட
தெண்டிரை தங்குறு கத்துளை நேர்வழி
பண்பொடு சென்றதெ னத்துள வேறுநின் இருபாத
பங்கய மின்றுணை த்தனென் மாமனம்
இங்கிது பின்புக ழுற்றிவி டாதொரு
பந்தமு றும்படி நற்க்ருபை யானது புரிவாயே
மண்டுமி லங்கைய ரக்கர்கு லாதிபன்
இன்புறு மிந்திர சித்ததி காயனும்
வந்தபின் வந்தனன் அக்ககு மாரனும் இனிநீகேள்
வஞ்சக கும்பக னப்பெய ரோனிடை
கும்பனி கும்பனு நித்தனர் போயபின்
மண்டப மொன்றுச மைத்தில வீரனை நிருதேசன்
கண்டுயி லென்றுவி டுத்தள காபுரி
வந்துவ ளைந்துப்ர கத்தன் மகோதரன்
கண்புகை மண்டும ரக்கன்மு ஞகிய பகையோடும்
கண்டுமு ழுங்கிய திர்த்தகு போரனை
நின்றும லைந்தன னத்தவெ ஞநெறி
கண்டுசொல் கும்பமு னிப்ரிய ஞகிய பெருமாளே.

உரை :—'மிக நெருக்கமான இலங்கையில் உள்ள அரக்கர் குலத் தலைவனாகிய இராவணன் மகிழுமாறு இந்திரசித்தும், அதிகாயனும் அவ

னுக்கு மைந்தர்களாகப் பிறந்தனர்; பின்னர் அட்சய குமாரனும் பிறந்தான்; இராமா இனிக் கேட்பாயாக, வஞ்ச மிகுந்த கும்பகருணனுக்குக் கும்பனும் நிகும்பனும் மைந்தராய்த் தோற்றம் செய்தனர்; அரக்கர்கோனாகிய இராவணன் ஆண்மையுள்ள தம்பியாகிய கும்பகருணன் தூங்குவதற்கொரு மண்டபம் அமைத்து அதில் அவனைத் தூங்குமாறு சொல்லிவிட்டு உலகெங்கும் திரிந்து உயிர்கட்குத் துன்பம் விளைத்துக் கொண்டிருக்கையில், இச் செய்தியை அறிந்த குபேரன் தன் தம்பியாகிய இராவணனுக்கு அறிவுரை புகட்டி வருமாறு ஒரு தூதுவனை அனுப்ப அவன் இலங்கைக்குச் சென்று குபேரன் கூறியவற்றைப் புகன்றான்; அப்போது இராவணன் அத் தூதுவனை வெட்டி வீழ்த்தி, 'இக் குபேரனே நமக்கு அறிவுரை கூறத்தக்கவன்; இவன் தருக்கை அடக்குகின்றேன்' என்று வெகுண்டு, பிரகத்தன், மகோதரன் என்னும் பெயருடையவர்களாய கண்களில் இராவணப் புகை மிகுந்தெழும் அரக்கர்களோடும் (அன்றி, கண் புகை மண்டும் அரக்கன் என்பதற்குப் புகைக் கண்ணனாகிய தும்புராக்கன் என்றும் சொல்லலாம்) வேறு பிற அரக்கர் படையோடும் அளகாபுரியை வளைத்து முற்ற, அதனைக் கண்ட குபேரன் சினந்து எதிர்க்க இராவணன் அவனோடு கடுஞ்சமர் விளைத்தான்; ஐயனாகிய இராமா' என்று சிறந்த மெய்ஞ்ஞானத்தின் நெறியாற் கண்டுரைத்த அகத்திய முனிவருக்கு அன்புள்ள பெருமாளே; நீ உண்டு உமிழும் சிறிய மூவுலகங்களிலும், மிக எஞ்சிய குறையிலிருந்து வீணாய் அழிந்தவர்களாகிய நின் உந்தியிற் பிறந்த பிரமன், சிவபெருமான், மற்றுமுள்ள இமையோர் ஆகியவர் தம் பெருமைகளுள் ஒன்றைக் கூறினும் அதனை உண்மையென்று கருதுவதெல்லாம் பொய்; ஆதலின், இவ்வுலகில் இனி, இத் தேவர்களுடைய சமயச் சூழலில் என் உள்ளம் ஒன்றி நின்றதனால் பல ஊழிகளில் என் உயிர் பிறந்தும் இறந்தும் தடுமாறி அலைந்தும், பழமையான தென் கடலிலுள்ள ஒரு கழி, தெளிந்த அலைகளையுடைய வடகடலிலுள்ள ஒரு நுகத்தின் துளையிற் பொருத்தமுடன் ஒன்றிப் புகுந்தது போல், திருத்துழாய் மறிய நின் இரண்டு திருவடிகளாகிய தாமரை மலர்களை என் பெரிய நெஞ்சம் நினைத்துள்ளது; இந் நினைவைப் பின்னே தளருமாறு செய்ய விடாமல் ஒரே நிலையில் இருத்தும் வண்ணம் எனக்கு நல்லருள் புரிதலை வேண்டுகின்றேன்.

... பிரமன், உருத்திரன் ஆகியவர், திருமால் உண்டு உமிழும் அண்டங்களில் அழியத்தக்க சிறு பகுதியில் உள்ளவர்கள். எனவே, அவர்கள் சிறந்தவர்கள் அல்லர் என்பது இதனாற் கூறப்படுகிறது. அதனால் அவர்களை 'அவம் ஆனவர்' என்றாராயினர்.

'நிச்சயம் யாது' என்பதற்கு உண்மையில்லை என்பது பொருள்.

தந்த தான தத்த தான
தந்த தான தத்த தான
தந்த தான தத்த தான — தனதான

326. எந்த் யோனி யிற்செ லார்கள்
எத்த மாயை யிற்பு கார்கள்
எந்த வேட முற்றி ரார்கள் — உனைமேவார்
இன்று நானு ரைக்க லாகும்
அன்றி யேநி னைக்க லாகும்
என்ப தோநின் மெய்ப்ர தாபம் — முடியாதே
சிந்தை யார புத்த பூனை
மண்டு பால டுத்த வேலை
சென்று சேர நக்கு பான்மை — யதுபோலுன்
செம்பொ னூர்ப தத்தை நீடு
புன்சொ லாலு ரைப்பன் வீறு
செஞ்சொ லார்ப ழிப்ப ரேனும் — அறியேனோ
வந்து சூழ ரக்கர் சாய
முந்து மாணி பத்ர னோடு
வன்க ணுய வக்கு ரூரன் — இருவோரும்
மண்டு போர் விளைத்த போது
கண்டு மாத சக்கி ரீபன்
வஞ்ச மாயெ திர்க்க நீடும் — அளகேசன்
அந்த வான ரக்க னோடு
தண்டி னூலெ திர்த்து மோத
அங்கி ராவ ணப்ர தாபன் — எதிர்மோதி
அன்று தேர்ப றித்து வாகை
கொண்ட வாற கத்தி யேசன்
அன்பி னோதை மெச்சு தேவர் — பெருமாளே.

உரை :—வளைத்த அரக்கர்களை, மணிபத்திரனோடு கொடிய கண்ணுடையவனான அக்குரூரனும் போர் புரிந்து முறிந்தோடச் செய்த போது, பத்துக் கழுத்துக்களையுடைய பெருமையுள்ள இராவணன் கண்டு, சூழ்ச்சியால் எதிர்த்து அவ்விரு இயக்கரும் விழுமாறு அடிக்க, உயர்ந்த தன்மையுள்ள அளகேசன் விரைந்து வந்து, சிறந்த அவ்வரக்கனாகிய இராவணை

னைத் தண்டால் அடிக்க, அவனும் எதிர்த்துத் தன் தண்டினால் மோதிக் குபேரனை மயங்கி விழச் செய்ய, சங்கநிதி பதுமநிதி ஆகிய இரண்டும் மயங்கிய குபேரனை மாயமாய் எடுத்துச் சென்று பாதலத்தில் மயக்கந் தெளிவிக்க, இங்கு, புட்பக விமானத்தை இராவணன் பறித்துக் கொண்டு வெற்றிபெற்ற வரலாற்றை அகத்தியர் அன்போடு கூற அவரைப் புகழ்ந்து போற்றிய இமையோர் தம் பெருமாளே ; நின்னை அடையாதார் உலகில் எந்தப் பிறவியில் தான் சேரார்? எல்லாப் பிறவிகளிலும் பிறந்து அலைவார்கள்; நின் மாயைகளில் எதனுள்தான் புகார்? எல்லாவற்றிலும் புகுவர்; அளவற்ற எந்த வேடந்தான் பூணார்? எல்லா வேடமும் பூணுவர்; பெருமையுள்ள நின் புகழை இப்போது நான் முழுதும் சொல்ல வியலுமோ? அன்றி நினைக்க வேனும் முடியுமோ? அறிவற்ற பூனை பால் மிக நிறைந்துள்ள கடலிற் சென்று பால் முழுதுங் குடிக்க நினைக்கும் இயல்பு போல், நின் செம்பொன் நிகர்த்த திருவடிகளை மிக விழிந்த சொற்களாற் பாடுகின்றேன் ; செஞ் சொற்கள் நிறைந்த பெரியோர் இது பற்றிப் பழிப்பரேனும் அதனை நான் அறியேன். அபுத்த பூனை—அறிவற்ற பூனை.

தனதன தத்த தந்தன தான
தனதன தத்த தந்தன தான
தனதன தத்த தந்தன தான தனதான

327. களவுப டைத்த நெஞ்சினி ராது
கொடுமைப டைத்த கண்களு ருது
கவடமொ ழிக்குள் வந்துபு காது குவியாத
கரமது பற்ற வங்கணு காது
பணிவில்சி ரத்து நின்றநு ளாது
கடியசெ விக்கு ளுந்தொனி யாதுன் இருபாதம்
ஒளியது மட்கி வஞ்சக னுமென்
அளவைய ழுந்தி யுந்தனி யாயம்
உணதுள மெச்சி நன்றெறு மாறு விடியாதேல்
உனையும கற்றி வம்பினி லேக
எனையும கற்றி மங்குதல் காணும்
ஒருகால லத்தர் பண்பது போல உளாரோ॥
அளகைய ழித்து வெண்கயி லாய
கிரிமிசை யுற்று நந்திமு னோக
அவனெதிர் நக்கர் பண்புகள் கூற அதுகேளா

அழகிய திக்கு ரங்குரை யாடல்
எனமுனை கைக்க நந்தியு நாணி
அறிவறு மற்க டங்களி னாலுன் நிலைபோமென்

றெளிதுச பிக்க வெஞ்ன மாகி
அரனுறை வெற்பொர் கந்துக மாக
இவனுமெ டுத்தொ ரங்கையின் மீது விளையாட

இறைவிவெ ருக்கொ டஞ்சின ளீசர்
கலவிபெ றத்த விர்ந்தன ளூடல்
எனமுனி செப்ப வின்புறு தேவர் பெருமாளே

உரை :—பாதலத்திற் சென்ற குபேரன், இராவணன் புட்பக விம
னத்தைக் கொண்டு போவதைக் கேள்வியுற்று 'அவன் பகைஞனிடம் அ
விமானம் சேர்வதாக' வெனச் சபித்தனன் : அளகாபுரியை அழித்த பி
இராவணன், வெள்ளிய கயிலை மலைமிசை யேறி நந்தியின் முன் செல்ல
அவர் அவன் முன் நின்று சிவபெருமானுடைய சிறந்த பண்புகளைச் சொ
லக் கேட்டு, 'இக்குரங்கு சொல்வது அழகாய் இருக்கிறது' என்று சொல்
அவன் முன் சிரிக்க, நந்தி 'இம் மூடனுடன் என் பேசினேன் ?' என்
கருதி நாணமுற்று, 'அறிவற்ற குரங்குகளால் உன் ஆண்மை அழிக
என்று எளிமை தோன்றச் சபிக்க, இராவணன் உள் அழன்று வெருண்டு
சிவபெருமான் வீற்றிருக்கும் அக் கயிலை மலையைப் பந்துபோல் கையி
எடுத்து விளையாட, அவ் வேளையில் பார்வதி தேவியார் சிவபெருமானோ
பிணங்கி ஒரு மரத்தினடியில் இருக்கும் போது அம்மலை ஆடியதா
நடுக்கமுற்று அஞ்சி ஓடிவந்து சிவபெருமானைக் கூடிப் பிணக்குத் தீர்
தாள் என்று அகத்திய முனிவர் சொல்ல, இன்பம் அடைந்த இமையவ
தம் பெருமாளே ; நின் திருவடிகள், களவுத் தன்மையையுடைய நெஞ்சி
இராது; கொடுமையே இயற்கையாகவுடைய கண்களிற் காணாது; வஞ்சக
சொற்களுள் வந்து புகாது : வணங்காத கைகளாலே பிடித்தற்கு அக
படாது; விழுந்து வணங்காத தலையில் நின்றருளாது ; கடுமையான காது
குள்ளும் தனியே கேளாது ; என்னறிவின் ஒளி மழுங்கி வஞ்சகனாகி
என் உறுப்பிலெல்லாம் அநியாயமானது அழுத்தப் பெற்றுளது. நி
திருவுள்ளத்தில் நல்லதென்று வியந்து சொல்லுமாறு அறிவுக் கதி
தோன்றி அறியாமையாகிய இருளைக் கெடுத்து இருள் கழியுமாறு புலரா
தானால், அவ்வநியாயம் உன்னை எனக் கருளாமல் விலக்கி, நான் நிலை
யில்லாது போதற்காக நின்னை அடைய வொட்டாது என்னைத் தடுத்
மழுங்கும் அறியாமையைச் செய்து நிற்கும்; அப்போது நின் உந்தி,

தாமரையிலுள்ள நான்முகனைப் போல்வியக்கத் தக்க நற்பண்புடையவர் உளரோ ?

அரியாயமானது என் உறுப்புக்களில் எல்லாம் அமைந்து அழுந்தி, என்னைத் தன் வழியிற் செலுத்துகின்றது. எனக்கு மெய்ஞ்ஞானம் உண்டாகாதாயின், அவ்வரியாயம் என்னை நிலையில்லாது போகச் செய்யும் என்பது கருத்து.

தாந்தன தான தனன தனதன
தாந்தன தான தனன தனதன
தாந்தன தான தனன தனதன தனதான

328. பூண்டுகு லாவ வினிய வகிலொடு
சாந்துகள் பூச அரையின் வகைவகைப்
பூந்துகி லாடை புனைய வெய்ர்வுகள் அடையாதே
பூம்புன லாட இனிய வடிசிலும்
ஆர்ந்திட மாதர் தெருவி லழகொடு
போந்திட மேலு மவரை யுயிரென விளையாடித்
தீண்டிவி னோத சரச கலவிகள்
பூண்டிட வேறு மனைய வகைபல
தேர்ந்திடு பாவி மனது ளுருகியுன் அடிமீதிற்
சேர்ந்திடு மோவு னடிய ரெனவருள்
கூர்ந்திடு மோவெ னெடிய கொடுவினை
தீய்ந்திடு மோபின் விளையும் வினைவுகள் அடியேனே
நீண்டகை யூடு நிருதன் மலைதனை
ஏந்திய போது சிவனு மொருவிரல்
நேர்ந்திட வீர நிருதன் வலிகெட அவன்வீழா
நீங்கரி தாகி மறையை யிசையுடன்
ஆண்டுக ளாயி ரமது வினைகளை
நீந்திமு ளேத இறையு மவனுழை அருள்கூரா
வேண்டிய வாளும் வலியு மறையுடன்
மூன்றரை கோடி வருட மளவுயிர்
மேம்படு வாழ்வு முதவி நடவென விடுபோது

வேந்தனு மேகு வழியி னுனைநினை
பூந்தவ மாதை வலிது சருவினன்
மீண்டென நீடு பொதியர் சொலமகிழ் பெருமாளே

உரை :—" உமா தேவியார் வந்து தழுவிக் கொள்ளுமாறு கயிலை மலையை இராவணன் நீண்ட கைகளால் ஏந்தி எடுத்தபோது, சிவபெருமான், உமையம்மையார் முதலியவர்களின் அச்சம் நீங்குமாறு ஒரு விரலையூன்றவே அம்மலை அவனை இறுக்கியதால் அடியில் அகப்பட்டு அவன் நொறுக்குண்டு வலிமை கெட, அதனை விலக்கும் ஆற்றல் அற்று அழு பல நாட்கள் சென்ற பின், நாரத முனிவர் வந்து சாமகானம் பாட சொல்ல, அங்ஙனமே அவன் அம்மறையை இசைத்துப் பண்ணோ பொருந்தி ஆயிரம் ஆண்டு நல்வினை தீவினைகளை விட்டு ஓதலும் அ கேட்ட சிவபெருமான் மகிழ்வுற்று அருள் கூர்ந்து, தம் திருமுன் வ செய்து, அவன் விரும்பியவாறே கொடிய வாளும், ஆற்றலும், மூன்றரை கோடி ஆண்டுகள் உயிர் வாழும் செல்வமும் கொடுத்தருளிப் 'போ' வெ விடையளித்த போது, அவ் வரக்கன் போகும் வழியில், நின்னை உள்ள துக் கொண்டு தவம்புரியும் திருமகளை வலிந்து அணைய விரும்பி அவ நெருங்கினான் ; மீண்டும், கேள் " என்று பொதிய மலை வாழும் அகத்தி முனிவர் சொல்ல மகிழ்ந்தருளிய பெருமாளே ; அணி கலன்களை யணிந் விளங்கும் இன்பமான அகிற்குழம்புடன் சந்தனக் குழம்பு பூசவும், அ யில் வகை வகையான பட்டாடைகள் உடுக்கவும், வியர்வை தோன்றுமே அழகிய செல்வங்களில் மூழ்கவும், அறுசுவையுள்ள உணவுகளை யுண் வும், பெண்கள் இருக்கும் தெருக்களில் அழகுடன் போகவும், அவர்க உயிர்போல் கருதி விரும்பி விளையாடிக் கையால் தொட்டு இனிய சொ கள் பேசிக் கூடியிருக்கவும், மற்றும் வேறு வஞ்சகங்கள் பலவும் தெளிந் செய்யவும் படித்திருக்கும் பாவியான அடியேன் உள்ளம், உருகி நி திருவடியை அடையுமோ ? நின் அடியவருள் ஒருவனென்று சொல்ல தக்கதாகிய நின் அருளைப் பெறுமோ ? எனது கொடிய வினை தீர்ந் விடுமோ ? பின் விளைபவை எவையென நானறியேன்; நீ அறிவுறுத்தரு வேண்டும்.

சருவினன் என்பதற்குத் தொந்தரவு செய்தான் என்றும் பொருள்.

இராவணனைச் சிவபெருமான் விரலால் அழித்ததை,

" அரக்கனை விரலால் அடர்த்திட் டீர்
இரக்க மொன்றுமிலீர் எம்பெரு மானீரே "

எனத் திருநாவுக்கரசர் கூறியுள்ளது காண்க. நாரதர் கூறியதனால் இரா வணன் மறைகளைப் பண்ணோடு ஓதினான் என்பது இடையில் விரிக்க பட்டது.

தானன தத்தனன தானன தத்தனன
தானன தத்தனன தானன தத்தனன
தானன தத்தனன தானன தத்தனன தனதான

சாதியு ரைப்பவர்கள் மேன்மையு ரைப்பவர்கள்
பேரைம றைப்பவர்கள் ஊரையு யிர்க்குமவர்
தாயைய கற்றுமவர் மாயந டப்பினர்கள் புதுவாழ்வு

ஈலவு முற்றவர்கள் வீறுத னைப்பாவி
தேடுத மிழ்க்கவிகை வீணினு ருத்துமிகு
சார்வும றப்பெறுதி தானும றத்திரியும் வினையேனைக்

காதல றுத்துமிகு ஞானம ளித்துனது
பாதயு கத்தில்வரு சேவைபெ றுத்தியெழு
காடுத னக்குநிக ரானபி றப்பையினு மருவாதே

காசினி யிற்புதுமை யாகவ ழைத்துமுகில்
போலுநி றத்ததிரு மேனியெ ழிற்பிரமை [தான்
காணவெ ளிப்படுவை யாகிலெ னக்குநிகர் உளரோ

வேகவ திப்பெயரி ஞனைய ரக்கர்பதி
மோகம யக்கமுடன் வாய்மைகொ ளக்கருதி
வீணுரை செப்பவவ டாதைகு சத்துவசன் அடிநாளில்

மேதகு விட்டுவர னுகவ ரித்தனன்விண்
ஏறினன் மற்றெனது தாயும னற்குள்விழ
மேவுத வத்துறையில் நானுமு யற்சிகொடு நிலையானேன்

நீதியி லைக்கடுக வேகென மற்றவனை
மேனிதொ டக்கருது வானைவெ குட்சியொடு
நீகெடு கைக்குவரு வேனென வக்கினியுள்
அவள்போனாள்

நீள்மிது லைக்குளவள் காணுனை யுற்றவளும்
ஈதுக தைக்குவர லாறென முற்புகலும்
நேயவ கத்தியரை நாளும கிழ்ச்சியுறு பெருமாளே.

உரை :—' தவம் செய்யும் வேதவதி யென்னும் மங்கை நல்லாளை ...க்கர் கோனாகிய இராவணன் கண்டு காதல் கொண்டு மயக்கத்துடன் ...ளிடம் பேச்சினைப் பெறக் கருதி, " நீ யார் மகள்? உன் பெய

றென்ன? யாது வேண்டித் தவம் செய்கின்றனை? இளமையைத் தவத்தால் என் கெடுக்கின்றாய்? நின்னை யொத்த அழகுடையோர் எவ்வுலகிலுமிலர்; மூவுலகங்கட்கும் தலைவனான என்னை நீ கூடின், நீ நினைத்துத் தவம் செய்யும் தெய்வமும் நின்னை வணங்கும்;" என்று வீண்மொழி புகல, அதற்கு அவள் கூறுவாள்; 'என் தந்தையாகிய குவசத்துவச முனிவர் மறையோதும் பொழுது அவர் வாயினின்றும் பிறந்த எனக்கு வேதவதியென்று பெயரிட்டார்; அந் நாளில், எவ்வுயிர்களின் உள்ளத்திலும் பொருந்தி, அங்கங்கும் அவற்றவற்றிற்குத் தக்கவராய் இருக்கும் திருமாலுக்கு என்னை மணம் செய்து தருவதென்று உறுதி செய்திருந்தார்; இங்ஙன மிருக்கையில் என் தந்தை வீடுபேறெய்தினார்; மற்று என் தாயும் தீயில் முழுகி அவருடன் போனாள்; நானும் அத் திருமாலை நோக்கி நெஞ்சு பொருந்தித் தவநெறியில் முயற்சியுடன் நிலைத்திருக்கின்றேன்; என்னைத் திருமாலுக்கென்று குறித்துள்ளமையின் நீ இங்குப் பேசுதல் நீதியன்று; விரைந்து போய்விடு" என்றதும், இராவணன், 'நீ சொல்லிய அத் திருமால் எனக்கஞ்சி ஒளித்திருக்கின்றான்; அவனுக்கு நான் அஞ்சேன்; உன்னை நான் இப்போது இலங்கைக்குக் கொண்டு செல்வேன்' என, அவள், 'நீ அழிவதற்காக நான் இலங்கைக்கு வருவேன்' என்று மொழிந்து அந் நொடியில் நெருப்பில் மூழ்கினாள்; அவ்வேதவதியே உயர்வுள்ள மிதிலையில் இருந்த சீதை காண்; அவ் வேதவதியே உன்னைக் கூடினாள்; இதுவே முற்கதைக் குரிய வரலாறு' என்று புகன்ற அகத்திய முனிவர் என்றும் மகிழ்வுறும் பெருமாளே; இழிகுலத்தை யொளித்து வேறு உயர்ந்த குலத்தவர் என்பவரும், குற்றங்களையொழித்து இல்லாத மேன்மைகளைக் கூறுபவரும், தாழ்ந்த பெயரை மறைத்து நல்ல உயர்ந்த பெயரைச் சொல்வோரும், தம் ஊரின் பெயரைச் சொன்னால் பொல்லாங்கு நேருமென்று ஊரென்று மட்டும் மகிழ்ந்து சொல்வோரும், பெற்று வளர்த்த தாயைத் தூரத்தியரும், வஞ்சக வொழுக்க முள்ளவரும், முன் பழைய வறிஞராயிருந்து பின் பெருஞ் செல்வம் படைத்தவரும், புது வாழ்வு பெற்றவரும், இவறன்மை யுடையவரும் ஆகியோருடைய தீமைகளை மறைத்து அவர் செய்யாதனவற்றைச் செய்ததாகப் புகழ்ந்து, எல்லோரும் ஆராயும் தமிழ்ப் பாட்டுக்களை வீணிற் பாடி யிளைத்து அதனால் அன்பு மிக்க நின் சார்பும் பொய்க் கவிகளைப் பாடியதால் பரிசில் பெறுதலும் இன்றி அலைந்து திரியும் பாவியாகிய அடியேனை, பற்றறுத்து மெய்ஞ்ஞானம் பெறச் செய்து நின் இரு திருவடிகளையும் வணங்கும் சேவை யளித்து, எழு காடுகளை நிகர்ந்த எழு பிறப்பில் நான் சேராமலிருக்க, இவ்வுலகில் வியப்போடென்னை அழைத்து, நீண்ட முகில் போன்ற நிறமுடைய நின் வடிவழகை நான் காணுமாறு நீ வெளிப்படுவாயாயின், என்னை யொப்பாரு முண்டோ? இல்லை,

தானதன தாந்த தானன
தானதன தாந்த தானன
தானதன தாந்த தானன தனதான

மோதுகுழை தாண்டி மீளுவ
நீடுகுழை சேர்ந்து லாவுவ
மோககலை சேர்ந்து கூவுவ எவர்மேலும்
மூரிமத வேந்தை யேவுவ
ஆலமென மூண்டு சீறுவ
மூதறிவை வாங்கை யாடுவ அநியாயப்
பாதகம தார்ந்த வேல்விழி
மாதர்கள்பி ராந்தி யான்மிகு
பாடுகளெ லாம்ப டாவிடு கடையானேன்
பாழையினி வேண்டி லேனிரு
தாளையினி யீந்தி டாயிது
பாரமல காண்க்ரு பாகர னலவோநீ
வேதவதி பேர்ந்து போயபின்
மாநிருத னேங்கி யேகினன்
மீளவொரு வேந்தன் வேள்விசெய் தலமேவ
வேதநெறி யான்பு ரோகிதன்
யாரெனலு நான்கு பேரனை
வீறடைய வாங்கி னேனென நகையாடி
மாதமையன் வாழ்ந்த வாழ்வினை
நூறியபி ராந்த ஞேவென
மாமதமெ லாங்கை யாடினன் அடல்வாஞேர்
வாடிமயில் கோம்பி யோநிம
வேறுருவு சார்ந்து ளாரென
வாழ்குறுமு னீந்த்ர ஞெலுனர் பெருமாளே.

உரை :—'வேதவதி நெருப்பில் விழுந்து அவ்விடத்தினின்றும்
ன பின், போரக்கஞகிய விராவணன், நடுங்கி அச்சத்துடன் வருந்திச்
று உலகில் திரியுங் காலத்துத் திரும்பி வரும்போது மருத்தென்னும்
ன் வேள்வி செய்தற்காகத் தேவ குருவின் தம்பியாகிய சம்வர்த

ரென்னும் மாமுனிவரையும் இமையவர்களையும் அழைத்து வைத்துக் கொண்டு அவ் வேள்வியைத் தொடங்கி நடத்தும் போது, இராவணன் அவ் வேள்விச் சாலையுட் புக்கு வேள்வித் தலைவனான மருத்து மன்னனை விளித்து 'என்னுடன் போருக்கு வருக; இன்றேல், தோற்றேனென்று சொல்க' என்றான். அப்போது வேள்வி நெறியுடைய சம்வரதர் நீ யார்? என்று கேட்க, அவன், 'நான் குபேரனுடைய தம்பி, என்பதை அறியாயா? அவனை அடித்துத் துரததிவிட்டு அவன் செல்வ மனைத்தும் பறித்துக் கொண்டவன் நானே' என, அதைக் கேட்ட மருத்தரசர் நகைத்து, 'பெருந் தமையன் வாழ்ந்த செல்வங்களைக் கைப்பற்றி அவன் உடலையும் நொறுக்கிய பித்தனாகியவன் நீயோ?' என்று கூறிப் போர் புரியத் தொடங்குகையில், 'வேள்வித் தலைவனுக்கு வெகுளியும் கொலைத் தொழிலும் விலக்கப்பட்டவை; ஆகவே போர் செயற்க' என்று சம்வரதர் சொல்ல மருத்து மன்னன் அடங்கி வாளா விருந்தான்; உடனே இராவணன் வெகுண்டு வேள்விச் சாலையில் இருந்தோரையும், வேள்விக்குரிய பொருள்களையும் தின்று கொள்ளையிட, அங்கிருந்த இமையவர் அனைவரும் வாட்ட முற்று மயில், ஓனான், அன்னம் முதலிய பறவைகளின் உருக்கொண்டு ஒளித்தனர்; இராவணன் வெற்றி முரசொலித்துக் கொண்டு மற்றைய நாடுகட்குச் சென்றான்; ஒளித்த விண்ணவர் மீண்டு வந்து வேள்வியை முற்றுவித்துத் தாம் ஒளித்துப் போதற்கு வடிவெடுக்க உதவிய பறவைகட்கும் விலங்குகட்கும் வர மீந்து தம் உலகு சென்றனர். இந்திரன் மயிலின் வடிவெடுத்ததால், மயிலுக்கு நீல நிறமும், ஆயிரம் கண்களும், முகிலைக் கண்டால் தன்னை நினைத்து ஆடும் தன்மையும் உண்டாக வரமளித்தான்; எமன் காக்கை வடிவு கொண்டதால், பிரேத பிண்டத்தை அது உண்டால், அவ்வப் பிதுரர்கட்கு நிறைவு உண்டாகவும் எவருங் கொல்லாதிருக்கும் வரை இறவாதிருக்கவும், மக்கள் காக்கையை மகிழ்ச்சியோடு நாட்கடன் செய்யுங்கால் உண்பித்தால் பிதுரரை உண்பித்தது போலிருக்கவும் வரமீந்தான்; வருணன் அன்ன வடிவெடுத்தமையால், அதன் இறகின் நுனியிலிருந்த கருமை நிறம் நீங்கப் பெற்றுத் தூயவெண்ணிறமாய்க் காண்டற்கு மிக விருப்பமாய் இருக்க அதற்கு வரந் தந்தான்; குபேரன் ஓனான் வடிவெடுத்ததால், அதற்கு உடல் பொன் வண்ணமாகவும் தலை அமுதமாகவும் இருக்க வரம் நல்கினான்; ஏனைய விண்ணவரும் அவரவர் வடிவெடுத்த உருவுடைய உயிர்கட்குத் தக்கவாறு வரம் கொடுத்தனர்,' என்று முனிவர்கட்கரசாய அகத்திய முனிவர் கூற அறிந்தருளிய பெருமாளே: பெண்களின் கண்கள் அணியிழைகள் ஒன்றோடொன்று மோதுங் காதைக் கடந்து மீளும்; நீண்ட குமிழ மலரையொத்த மூக்கினைச் சேர்ந்து திரியும்; மயக்கந்தரும் மதன் கலையோடு பழகிக் காமுகரை அழைக்கும்; எத்தகையோர் மேலும் வலிய மன்மதனென்னும்

அரசனைப் போர்க்கனுப்பும் ; ஆலாலம் போல் சினந்து புகைந்து எழுந்து ீறும் ; முதிர்ந்த அறிவை யெல்லாம் கொள்ளை கொள்ளும் ; இத்தகைய ிியற்ற - பாவமுள்ள - மதர்த்த - அழகிய வேல் போன்ற கண்களின் ாதல் மயக்கினால், மிக்க பாடுகளெல்லாம் பட்டு, எல்லோரும் இகழ்ந்து ைகவிடக் கடையனானேன் ; இப் பாழிடத்து விருப்பங் கொள்ளேன் ; இனி, நின் திருவடிக ளிரண்டையும் அடியேற்குத் தந்தருள வேண்டும்; இஃது உனக்கு அரிய செயலன்று கண்டாய் ; நீ அருள்வடிவினன் அல்லனோ ? சொல்லுக.

தனதனன தானதன தாத்த
தனதனன தானதன தாத்த
தனதனன தானதன தாத்த தனதான

31. வடகிரியை மேவுகினு மேத்து
சுராலைகை யேறுகினு மூர்த்தி
வருகயிலை சேருகினு மேட்டு மலர்வேதன்
வளர்பதவி கூடுகினு மீட்டும்
இரவிமுத லாமரர் நாட்டுள்
வரிசையொடு சாருகினு மாட்சி என்லாமோ
படிறுவிடு மோபலவும் வேட்கை
நினைவுவிடு மோவரிது பாழ்த்த
பழையபடி யேயழுகி னூற்ற விதுமாறிப்
பதவிபெற நீயுதவி வாய்த்த
பரமபத மேறவழி காட்டு
பழியிலையு பாதியிலை மோக்க மிதுவேகாண்
அடலாசன் வேள்வியது தாக்கி
நிருதர்பதி யேகினன யோத்தி
அனாரணிய னாடுசமர் தாக்க அசுரேசன்
அவனைவிழ வேதிருகி யார்த்து
நகைபுரிய வேயெமது கோத்ரம்
அதனிலொரு தாசரதி போர்க்குள் முடிவாய்நீ
கொடியநிரு தாவெனுனு நீக்கி
யமபதியி னேடுபொரு சூழ்ச்சி
கொளுவியொரு நாரதர்கை காட்ட யமன்மேலே

குறையறவி மானமுந் டாத்தி
முடுகினனெ னாநிருத னாற்றல்
குறுமுனிவ னோதவந்து கேட்ட பெருமாளே.

உரை :—வலிமை மிக்க மருத்தரசன் வேள்வியை யழித்து இராவணன் உலகெங்குந் திரிந்து, துட்டியந்தன், காதி, புரூரவன், கேகயன் முதலிய அரசர்களைத் ‘தோல்வியுற்றோம்’ எனச் சொல்லச் செய்து வரும் போதில், அயோத்தி நகருக்கு வந்தான்; அப்போது அங்கு ஆட்சிபுரிந்த அனரண்ணிய மன்னன், இராவணனுடைய படைக்குள் புகுந்து போரிட்டுத் துரத்துகையில் இராவணன் அவ் வயோத்தி மன்னனது தலை திருகி விழுமாறடித்துச் சிங்க முழக்கோடு எள்ளி நகைக்க, இறக்கும் நிலையிலிருந்த அம் மன்னன், “கொடுமையுள்ள அரக்கனே, வெற்றி தோல்விகள் ஒருவர் பங்காகுமோ? நீ என்னைச் சிரித்ததால், எங்கள் இட்சுவாகு மன்னன் மரபில் பிறக்க விருக்கும் தசரத மன்னனுடைய மகன் புரியும் போரில் நீ இறப்பாயாக” எனச் சாபம் கொடுத்து உயிர் விட்டான், இராவணன் நமக்கு வெற்றியென்று சொல்லித் திரும்பித் திரியுங்கால், நாரதரைக் கண்டு வணங்கினான். அவர் அவனைப் பார்த்து, “உலகிலிருக்கும் மக்கட்கு ஆயுள் மிகக் குறைவு; அதிற் பாதி, தூக்கத்திலும் மற்றைய பாதி குழவி, இளமை, மூப்புத் துன்பங்களிலும் காமம் முதலிய அலைச்சலிலும், கேடு, பொருளீட்டும் துன்பம், நோய், அரச தண்டனை கள்வர் பயம் முதலிய பீடையும் பசியும் உண்டாக்கும் அளவற்ற இன்னல்களிலும் அகப்பட்டு, இறத்தல் துன்பம் முதலியவற்றிலும் ஈடுபட்டு இன்பமென்பதை யறியாது கழியும்; ஆகவே இரங்கத்தவர்கள் அம் மக்கள்; அவர்களை நீ துன்புறுத்துவதாற் பயனில்லை; இத் துன்பங்கள் இல்லாத இமையவர், அசுரர், பாதலத்து வாழ்வோர், திசைக் காவலர் ஆகிய பேர்களோடு போரிட்டால் நினக்குப் புகழ் உண்டு; எவ்வுயிரையுங் கொல்லும் எமன் மிக்க வலிமையுள்ளவன்; அவனைக் கொன்றால் உனக்கு எல்லா உயிர்களையும் காத்த பெரும் புகழ் உண்டாகும்; வெற்றியும் மிகும்; உலக முழுதையும் நீ வென்றதற் கறிகுறி யிது” என்று சொல்ல, அவன், ‘அங்ஙனமே செல்கின்றேன்’ என்று நாரதரை வணங்கிப் போனான். இவ்வாறு நாரதமுனிவர் சூழ்ச்சியாகக் கை காட்ட இராவணன் புட்பகத்தை எமன் திசைக்கு முடுக்கினானென்று அவன் ஆற்றலை அகத்திய முனிவர் சொல்லக் கேட்டருளிய பெருமானே; நான் மகாமேரு மலையைச் சார்ந்தாலும், மேலான விண்ணுல கேறினாலும், அழித்தற் கடவுளாகிய சிவபெருமான் கயிலை சேர்ந்தாலும், இதழ்களையுடைய தாமரையில் வாழும் நான்முகனுடைய சத்தியலோக மடைந்தாலும், மீண்டும் கதிரவன் முதலிய இமைய ருலகங்களைக் கூடினாலும், இவ்வை யனைத்தும் ஒரு நிலை

என்று எண்ணலாமா? நல்வினைப் பயனை நுகர்ந்து முடிந்த பின், அவ்வுலகங்களினின்றும் தள்ளி விடுவதால் அவை நிலையாகா? எவ்வுலகிற் செல்லுகினும் பொய் விடுமோ? ஆசை யொழியுமோ? இவை ஒழியாவாதலால் இவை பழைய படியே பாழ்த்த வினைகள் அன்றி நன்மை தருவனவல்ல; அவ்வழகின் ஆற்றல் இவ்வளவே; ஆதலின், இத்தகைய செயல்களினின்றும் விலகி, நற்பதவியைப் பெறப் பரமபதம் ஏறுவதற்காகிய வழியை நீ யருளுவா யானால், எனக்குப் பழியும் நோயுமில்லை; வீடுபேறென்பது அது கண்டாய்.

தனதனன தானதன தாத்தன
தனதனன தானதன தாத்தன
தனதனன தானதன தாத்தன தனதான

332. குமுகுமென வோகைமிட ரூர்க்கவும்
மொழிகடடு மாறவும்வி டாக்கலை
கலையவுமி லாடமது வேர்க்கவும் அமுதூறும்
குமுதமொளி ராவழகு காட்டவும்
வளைசிதற மேகலைக ளார்ப்பொடு
குழலளிகள் பாடுமொலி கேட்கவும் ஒருநாபி
அமுதசுழி மூழ்கியும்வி லாத்துடை
இருகதலி மூலமது பார்க்கவும்
அவசமுறு மோககலை தாக்கவும் இருகாதில்
அடையவிளை யாடுகயல் சேப்பவும்
மதனகலை நூலின்வழி வ்யாத்தியை
அருளுமட வார்கலவி போற்றுகை தவிரேனோ
அமர்புரிய வேறியவி ராக்கதன்
நரகிலணை வாரைமுத லேற்றினன்
எதிர்பொருத காவலரை யோட்டினன் யமராசன்
இரதமிசை யேறியெதிர் தாக்கினன்
நிருதனும்வி டாதகணை நூக்கினன்
எறிவொருநீள் கதையெ டுக்கொளும் நமனார்முன்
கமலனணு காவிதுவெ வாப்படை
எனமறவி நீடுகதை போட்டது
கவடநிரு தேசனெதிர் பார்த்தனன் நனிமீளாக்

கனவிசய மானதென மூர்க்கனும்
உரகருல கேறினனெ னுக்கதை
கடன்முனிவ னோதவது கேட்டருள் பெருமாளே.

உரை :—எமன் உலகேறிய அரக்கனாகிய இராவணன் நரகில் விழுந்து அறுத்தல், அடித்தல், குத்துதல், மோதுதல், எறிதல், கடித்தல், கொத்துதல், எரித்தல், எற்றுதல், விழுத்தல், அரைத்தல், இடித்தல் முதலிய துன்பங்களை நுகர்வோரை முன்னே எடுத்து விண்ணிலேற்றினான்; அது பொறுது எதிர்த்த எமன் படைத் தலைவர்களை இராவணன் ஓடத் துரத்திப் பாசுபதத்தால் சாம்பராக்கினான்; அதை யறிந்த எமன் தேரேறிப் பாசமும் தண்டமும் இருபுறமும் வரவும் மிருத்யு முன்னே நடக்கவும் வந்தெதிர்த்துப் பல அம்புகளால் இராவணன் உடலெங்கும் புண்படுத்தினான்; இராவணனும் விடாமல் அம்புகளைப் பொழிந்து எமன் விடுத்த அம்புகளைத் துண்டித்து அவன் மேலும் படச் செய்தான்; அப்போது மிருத்யு வெகுண்டு சொல்லியபடியே எமன், ஒப்பற்ற நீண்ட கதையை எறிவே னென்று சொல்லி அதனைத் தன் வலக் கையில் வாங்கிய போது அவன் முன் நான்முகன் தோன்றி 'இத் தண்டு எவராலும் வெல்லப்படாதது; இதனாலும் அவன் இறவாதிருக்க நான் வரம் ஈந்தேன்; ஆதலின் என் வாய்மொழி பொய்மொழியாகாமற் செய்க' என்று வேண்டிக்கொள்ள எமன் அப் படையைக் கீழே போட்டதை வஞ்சக விராவணன் கண்டு மகிழ்ந்து 'எனக்குப் பெரு வெற்றியாயிற்று' என்று திரும்பி நாகருலகிற்கு ஏறிப் போயினன் என்னும் கதையைக் கடல் குடித்த அகத்திய முனிவர் சொல்லக் கேட்டருளிய பெருமாளே; பெண்கள் கலவியில், கழுத்துக்குள் குமுகுமு வென்றொலிக்கவும், சொற்கள் தடுமாறவும், அரையை விடாத புடைவை அவிழ்ந்து குலையவும், நெற்றி வியர்க்கவும், அமுதமூறும் செவ்வல்லி மலர் போன்ற உதடு வெளுத்து அழகு காட்டவும், அங்கை வளைகள் சிதறவும், மேகலையிலுள்ள மணிகள் ஒன்றோடொன்று பட்டு ஒலிக்கவும், குழலில் உள்ள மாலையிற் பொருந்திய தேனைக் குடித்து வண்டுகள் ஒலிக்கவும், ஒப்பற்ற உந்தியிலுண்டாகிய அமுத வெள்ளச் சுழியில் மூழ்கி, விலாப் பக்கமாக வாழைத் தண்டினை நிகர்த்த துடைகளின் இடையிற் பார்த்து வசமிழக்கவும், இரு காதுகளிலும் சேர்ந்து விளையாடும் கயலையொத்த கண்கள் சிவக்கவும், மதன நூலிலுள்ள பொருள்களைத் தரும் நலங்களைப் புகழ்ந்தும் சிறப்பித்தும் கூறும் பெண்களின் கலவிக் கூற்றினை விடேனோ? சொல்லுக.

(எமனும் மிருத்யுவும் ஒருவரென்றும், தனித் தனியாக உள்ளவரென்றும் கூறுதல் மரபு. உரையாசிரியர் மிருத்யு எமனுக்கு முன் சென்றான் எனல் கருதத்தக்கது.)

தானன தான தான தனதன
தானன தான தான தனதன
தானன தான தான தனதன — தனதான

33. மாதாவி னோடு தாதை யவரவர்
மூதாதை ஞாதி யார்தம் வழிவழி
மாதாம கேசர் மேலும் வினைபவர் — அனைவோரும்
மாறுமு வேழ தான தலைமுறை
ஈடேறு மேவி டாம லரியரி
மாமான்மு ராரி தேவ நரவரி — ரகுவீரா
சீதாத ராபி ராம கருணைய
வாசானு வாகு தாச ரதிபதி
சேடாவ தார கூர்ம வெனவெனு — உனைநாளும்
ஓரோடு பாடி யாடி யுருகுதல்
ஆயேப ராவி யாவி மகிழ்வுறு
தேவானு பூதி யார்பெ றினுமவர் — அளவோதான்
பாதாள லோக போக வதிநகர்
நாகேச னான வாசு கியினொடு
பாகாய கேண்மை மேவி மணிவதி — நகரேபோய்ப்
பாருடு போர்நி வாத கவசரொ
டோராறு மாத மோத அயனிரு
பாலோரு மீள வாகை சமமென — வருநேசன்
ஆதார வூரி லேகி யெதிருறு
மாகால கேயர் மாள விளையளொ
ராபாதி கேள்வன் வீழ வமர்செய்து — புனலோனும்
ஆளாண்மை தோல்வி யாகி மறைபுக
நேர்மோதி மீளு நீச னடலினை
ஆதாளி வாரி யூணர் சொலமிகும் — பெருமாளே.

உரை :—பாதலத்தில் போகவதி யென்னும் நகரில் உள்ள நாக அரச
னாகிய வாசுகியோடு பாகுபோல் இனிய நட்புக் கொண்டு பின்னர் மணி
கி என்னும் நகர்க்குச் சென்று, பருந்துகள் பறந்தாடும்படி போர் செய்
ம் நிவாத கவசரொடு பன்னிரண்டு திங்கள் அமர் விளைத்துக் கொண்
ருக்கையில் அங்கு நான்முகன் வந்து, 'இருதிறத்தாரும் திரும்பினால்

வெற்றியே யன்றித் தோல்வி யில்லை; ஆதலின் நீங்கள் ஒன்றுபட்டிருங்கள்' என்று அவர்களை நட்புச் செய்வித்துப் போக, இராவணன் அங்குச் சின்னாட்கள் தங்கிப் பின்னர், வருணன் விரும்பித் தங்கியிருக்கும் நகருக்குட் போருங்கால், எதிர்ப்பட்ட காலகேயரோடும் போர் செய்து அவர்கள் இறந்தபின், அவர்களோடிருந்த தன் தங்கையாகிய - ஒப்பற்ற அபாசமான - சூர்ப்பநகையின் கணவனாகிய வித்துவசிங்கன் இறந்து விழச் செய்து, வருணன் நகர்க்குட் புகுந்து பார்க்க அங்கு வருணன் இல்லாமையால், அவன் மைந்தர்களோடு பொருது அவர்கள் மயங்கி யொளிக்குமாறு நன்றாய் அடித்து வெற்றி கொண்டு திரும்பிய இழிதொழிலாளனாகிய அவ் இராவணன் போர்த் திறத்தை ஆரவாரம் செய்யும் கடலைக் குடித்த அகத்திய முனிவர் சொல்ல மகிழ்ந்தருளிய பெருமாளே; தாயும் தந்தையும், அவர்கள் தந்தையும், அவர் தம் தந்தையரும், பங்காளிகளும், அம் மரபிற் பிறந்த பாட்டி பாட்டன்மாருக்கு மேலும் தோன்றிய இருபத்தொரு தலைமுறைகளிலுள்ளவர் எவரும் ஈடேறுவர் : அஃது எதனாலென்னில் இடைவிடாது, அரி அரி, பெருமையுள்ள திருமாலே, முராரி, தேவா, நாரசிங்கா, இரகு வீரா, சீதாதரா, அபிராமா, கருணாகரா, நீண்ட கைகளையுடைய தாசரதி, தலைவனே, சேஷாவதாரா, கூர்மாவதாரா என்று எந்நாளும் நின்னைச் சிறப்புடன் பாடியும் ஆடியும் கல்மன முருகப் பெற்றுப் போற்றிப் புகழ்ந்து உயிர் மகிழ்ச்சி யடையுமாறிருக்கும் தெய்வத் திருவருள் கைகூடப் பெறும் தன்மையாலே யாம். அத் தன்மையை யார் ஒருவர் பெறினும், அவரே யன்றி அவருடைய இருபத்தொரு தலைமுறையில் உள்ளோரும் நலம் பெற்று ஈடேறுவர். 'மணிமதி' எனவும் பாடம்.

தனன தான தான தந்த
தனன தான தான தந்த
தனன தான தான தந்த தனதான

334. ஆரவி ஞேடு நீழல் கண்டு
வெருவி யோட மாதி ரங்கள்
அலைய மோது மோர்ப்ர சண்ட நெடுவாயு
அதனின் மீறி யேழ்ம டங்கு
சிறகு வீசி வேக முந்த
அதிக நாக பூட ணங்கள் தடுமாறப்
பொருவில் மேரு வான துங்க
வடிவி ஞேடு லாவு கின்ற
புனித ரூப நீள்க கங்க பதிமேலே

புயல்ச ரோச மேல்ம லர்ந்து
வருவ போல நீயும் வந்து
புதுமை யாக நாறு நின்று தொழுவேனோ

வருண னுடு சூறை கொண்டு
நிருதர் கோன நேக மின்சொல்
மடந லாரை வாரி வந்து நகர்மேக

மகளிர் தாயர் சேர நின்று
கதறி யேயி ராவ ணன்றன்
வரமும் வாழ்வு மோர் மடந்தை யவளாலே

எரியின் நீற தாக வென்ற
வலிய சாப மான துண்டு
இரகு பதியி ராவ ணன்பின் இளையாளை

இளைய மூவர் காடு சென்று
புகுத வேவி னுனெ னுஞ்சொல்
இதுக டேச னுணர்ந்த பெருமாளே.

உரை :—'அரக்கர் கோனாகிய இராவணன், வருணன் நகரைக் கொள்ளையிட்டுத் திரும்புங்கால், இன் சொல்லும் இளமையும் உடைய நற் பெண்டிர் பலரை வலிந்து இழுத்துக் கொண்டு இலங்கை நகர்க்கு வர, அப் பெண்களின் தாயர் கூடி நின்று வாய்விட்டலறி, 'இராவண னுடைய வரமும் செல்வமும் ஒரு பெண்ணின் காரணத்தால் நெருப்பி லுள்ள நீற்றைப் போல் அழிந்தொழிக' என்று கொடுத்த சாபம் ஒன்று அவனுக்குள்ளது. 'இரகு நாயகா, அறிந்துகொள்' என்றி கூறிப் பின் னரும், இராவணன் தன் தங்கையாகிய சூர்ப்பநகையைத் தன் தம்பியா கிய கரதூடண திரிசிரர் தங்கியிருக்கும் காட்டில் சென்று வாழுமாறு ஆணையிட்டனன் என்னும் உண்மையுள்ள சொற்களாகிய இவற்றையும் கலயத்திற் றோன்றிய அகத்திய முனிவர் சொல்லியதால் அறிந்தருளிய பெருமாளே ; தன் நிழலைக் கண்டு நாகருலகத்தவர் அஞ்சி ஓடவும், விரைந்து முடுகி வீசுவதால் எண்டிசையும் அலைய மோதி வீசும் ஒப்பற்ற சூறைக் காற்றினும் எழு மடங்கு அதிகமாகச் சிறகுகளை அடித்து, விரைவு மிக, பாம்புப் பணிகள் அலைய, சிறந்த மேருமலைக்கொப் பென்னுமாறு உயர்ந்த வடிவத்தோடு இயங்கும் தூய்மையுள்ள நீண்ட பறவைக் கரசான கருடாழ்வான்மேல், செந்தாமரை மலர்களை மேலே அசையாமல் வைத்துக் கொண்டிருக்கும் முகில்போல் நீ வந்தருளிய போது வியந்து நின்று அடி யேனும் வணங்குவேனோ ? சொல்லுக.

தனந்தன தனந்தன
தனந்தன தனந்தன
தனந்தன தனந்தன தனதான

335. துலங்கிய வலங்க்ருத
பதங்களை வணங்குதல்
துடங்குதல் இரங்குதல் விழிநீரைத்
துளும்புதல் மயங்குதல்
எழுந்துட னடங்கெயல்
துவண்டிடல் புரண்டிடல் தொழுதேறி
வலஞ்செயல் புளம்புள
கிதஞ்செயல் மகிழ்ந்துடன்
பனங்கரை வுகொண்டிடல் அதனால்மெய்
மறந்திடல் தெளிந்திடல்
புகழ்ந்திட லதன்றியென்
வரம்பறு தினம்பழு துறலாமோ
இலங்கையி னைவந்தபின்
மகம்புரி நிகும்பலை
இதென்கொலெ னலுங்கணை சிலைமாயம்
இனஞ்சிவன் வழங்கினன்
எனுஞ்சொலை மகிழ்ந்தனன்
இறந்தது நிகும்பலை இறவாதே
நலம்பெற நடந்திடில்
வருஞ்சுக மறிந்திலம்
நடந்தின .வல்கொன்றதும் அதுவேகாண்
நலந்தெரு ளெனும்படி
குறுந்தவன் விளம்பிட
நலங்கொடு மகிழ்ந்தருள் பெருமாளே.

உரை:—இராவணன் பாதலத்திலிருந்து இலங்கைக்கு வந்த பின், மேகநாதனாகிய தன் மகன் வேள்வி செய்யும் நிகும்பலையைக் கண்டு, 'இஃதென்ன?' வென்று கேட்க, 'உன் மகன் சிவபெருமானைக் குறித்து வேள்வி புரிந்தான்; அப்போது அப் பெருமான் வந்து அவனுக்கு வில் லும் அம்பும் எவராலும் அறியப்படாத மாயமும் இன்ன முதலிய பிறவும்

ஈந்து மறைந்தானென்று சுக்கிரன் சொல்லிய சொற் கேட்டு மகிழ்ந்து மகனுடன் இலங்கைக்குப் போனான்; இராமா கேட்பாயாக; அவ்வேள்வி முற்றாமல் அழிந்தது; அந் நிகும்பலையில் செய்த வேள்வி யழியா .ல் நல முடன் நிறைவேறியிருந்தால் வருவதென் னென்றறியேன்; நீ போர் புரிந்த போது அம் மேகநாதன் நிகும்பலையில் வேள்வி செய்தனீத விபீட ணன் அறிந்து, அதை அழிக்குமாறு இலக்குவனனுக்குச் சொல்ல, அவன் அங்ஙனமே செய்து அவ்வரக்கனைக் கொன்றதும் அதனாலே தான்; அன்றி அறிவு குறைந்த வேள்வி செய்ததற்கே அவனைக் கொல்லுதலில் பெரு முயற்சி வேண்டியிருந்ததே, அது நிறைவேறியிருந்தால் அவன் இறப் பானோ? இறவான்; அந் நலத்தைத் தெரிந்து கொள் என்று அகத்திய முனிவர் மொழிய, வேள்வி நிறைவேறி யிருப்பின் மிகவும் பெருமை யுண் டாகி யிருக்குமென் றெண்ணி மனம் மகிழ்ந்தருளிய பெருமாளே; ஒளி யுடன் அழகான நின் திருவடிகளை வணங்கத் தொடங்கல், இரங்கல், கண் ணீர் துளும்பல், செய்யத் தகுவதென் னென்றறியாது மயங்கல், உடனே எழுந்து கூத்தாடல், துவளுதல், புரளுதல், வணங்கி வலஞ் செய்தல், தோள்கள் பருத்தல், மகிழ்தல், உளங் கரைந்துருகுதல், உடலை மறத்தல், தெளிதல், புகழ்தல், ஆகியவற்றைச் செய்யாது நாமெடுத்த பிறவிகளில் அமைந்திருந்த அளவற்ற நாட்களெல்லாம் பழுதடைதல் ஆமோ? இனி யேனும் அங்ஙனம் செய்ய அருளுக.

தனதன தனதன தந்த தானன
தனதன தனதன தந்த தானன
தனதன தனதன தந்த தானன தனதான

336. இலகிய தளவக தம்ப கோமள
ம்ருகமத பரிமள வண்டு காவணம்
இடுகிழ லபிநய மஞ்சு போலவிர் தருசோலை
இதுவென வறலென வந்த கார்மொர்
வடிவுகொள் வகையென விந்த்ர நீலமும்
ரதிபதி படையொடி ருந்த சூழலும் எனவீறிப்
பொலிவொடு நெடுகிவ கிர்ந்து கோதியொர்
பிடர்மிசை யினிது படிந்து பாளைகள்
புதுமணம் விரவும லங்கல் வார்குழல் மடவார்தம்
புளகித கடினகு சுந்த சீதள
முகுளித யுகளவ நந்த பூடண
புணர்முலை மலையைய ருந்து ணீர்டி பணிவேனோ

வலிமிசை கொடுவரு பெண்கள் யாரையும்
முறைமுறை தொழில்செயு மென்ற போதினில்
மகிபதி நெறியல வென்று வீடணன் முதல்வாகேள்
மதுவெனு நிசிசரன் வந்தெ மூரிடை
எமையரு ளனையொடு வந்த மாதினை
மணமுற வலிகொடு கொண்டு போயினன் அவனோடே
சிலபகல் பொருதுமு ரிந்து சேனையும்
வெருவின கருணனு றங்கி னனமர
சிறுவனு மகமிசை தங்கி னனிகல் வினையேனும்
செறிபுனல் முழுகிய றிந்தி லேனென
ஒருபது தலையன்வெ குண்டு ளானிது
திடமென மலயன்வி ளம்ப வேயுணர் பெருமாளே.

உரை :—"இராவணன் பாதலத்திலிருந்து கொணர்ந்த மகளிரை யெல்லாம் 'முறை முறையாகத் தொழில் செய்க' வென்று சொல்லிய போழ்தில், வியீடணன், அவனை நோக்கி, 'உலகிற்கரசனே, உடன்பாடில்லாத பெண்களை வலிந்து தொடுதல் நீதி நூல்களின் நெறியன்று' என்று விலக்கி, மீண்டும் அவனைப் பார்த்து, 'அண்ணு கேட்பாயாக; மதுவென்னும் அரக்கன் நம் இலங்கைக்குட் புகுந்து, நம்மை யீன்ற தாயையும், அவளுடன் பிறந்த கும்பிநசி என்பாளையும் கூடுதற்கு விரும்பி, அவர்களை வலிதிற் பற்றிச் சென்முன்; அவனுடன் நம் படைஞர் சில நாட்கள் போர் புரிந்து அஞ்சித் தோல்வியுற்றனர்; இதனை எவரும் அறியார்; ஏனெனில், கும்பகருணனே உறங்கினன்; நம் மகனுகிய மேகநாதனே நிகும்பலை வேள்வியில் இருந்தான்; நானும் நீரில் மூழ்கித் தவம் செய்தமையால் இதனை யறிந்திலேன்' எனக் கேட்ட பத்துத் தலைகளையுடைய இராவணனன் சினம் மீதூர்ந்திருந்தான்; இது மெய்" யென்று மலய முனிவர் சொல்ல அறிந்திருந்த பெருமாளே; ஒளியுள்ள முல்லையைச் சூடிச் சுண்ணத்தைத் தூவி, இளமையும் அழகும் உடையவைகளாய், கலவிக் குறியைக் காட்டுபவையாய், 'கருமேகம் போல் தழைத்து இருண்டு விரிந்து, மலர்களையுடைய சோலையோ? அலை கொழித்த கருமணலோ? இருள் ஒரு வடிவு கொண்டதோ? இந்திர நீலமோ? இரதியின் கேள்வனுன மன்மதன், தன் மலர்க் கணைகளோடு போய்த் தங்கியிருக்கும் இடமோ?' என்று ஐயுற்றுக் கூறுமாறு மிக உயர்ந்து வளர்ந்து, ஒன்றை யொன்று ஒப்பாக ஒரே யளவில் நீண்டும் நெய்த்தும் வகிர்ந்து கோதி முடிக்கப் பெற்றும் ஒப்பற்ற பிடரியில் இனிதாகத் தாழ்ந்தும், பூமாலை தரித்துப் புது மணம் பக்கமெங்கும் வீசித் தேனெழுகும் இயல்புள்ளனதுமான தலை

மயிரை யுடைய மடப்பமுடைய பெண்களின், பருமையும், அழுதமும், திண்மையும், நறுமணமும், குளிர்ச்சியும் கொண்டு தாமரை யரும்பையும் கோங் கரும்பையும் போல் குவிந்த வடிவுடையனவாய் இரண்டாய் அள வற்ற மணிக்கலன்கள் அணிந்தனவாய் ஒன்றை யொன்று நிகர்த்திருக்கும் நகில்களாய மலைகளை மறந்து நின் திருவடிகள் இரண்டையும் இனியேனும் நான் வணங்குவேனோ? சொல்லுக.

'வண்டு காவணம் இடு நிழல்' வண்டுகள் பந்தல் போலப் பரந்து செறிந்து நிழலைச் செய்யும் என்று கூறிக் கூட்டுக.

தந்த தனதன தந்த தனதன
தந்த தனதன தந்த தனதன
தந்த தனதன தந்த தனதன தனதான

337. அம்பொ னணிகுடை தம்பி (கொள)விரு
தம்பிய ரும்விரி கின்ற கவரிகொ
டங்கு முறைசெயவென்றி மருவின உடைவாள்கொண்
டங்க தனுமரு கின்க ணிலம்பெற
எங்க ளனுமனு மந்த வரியணை
அன்பி னினிதுசு மந்து பணிவுற மலர்தூவி
உம்பர் தொழவிரி தும்பு ருவிண்வகை
இன்சொ லினியவி யங்க ளொலிசெய
உந்தி யயன்மகன் வந்து மணிமுடி கவியாநின்
றுன்ற னருகுற மூத்த சனகியொ
டந்த நகரிலி ருந்த வழகினை
ஒன்றி நினைதொறு மென்றன் விழிபுனல் ஒழியாதே
வெம்பு நிருதன்வெ குண்டு மதுவயிர்
உண்ப னெனுமுனெ மூந்து படைவர
விஞ்சு பயமொடு கும்பி நசியெனும் ஒருதாயார்
மீண்டு மிவனெதிர் வந்தெ னுயிர்நிகர்
கண்ட னுயிரைவ ழங்கு கெனவவன்
வென்றி மதுமனை சென்று பரிவுடன் உறவாகி
நம்பு மதுவொடு மூந்தி யளகைவ
ளைந்து கொளவொரு ரம்பை யிரவிடை
நந்து நிதியவன் மைந்த னலமுற வருவானை

நஞ்ச மெனாநல முண்டு விடவவள்
சென்ற பிறகுவி ளைந்த கதையுள
நம்ப வென்னவுயர் கும்ப முனிபுகழ் பெருமாளே.

உரை:—மிகச் சினந்து சென்ற இராவணன், மதுவிருந்த கோட்டையை வளைத்துக் கொண்டான். அப்பொழுது, மது உறங்கிக் கொண்டிருந்தான். அவ்வேளையில், இளைய தாயாகிய கும்பிநசி யென்பவள் அஞ்சிச் சினங் கொண்டு இராவணன் முன் வந்து, "மைந்தா, நீயேன் வெகுளியோடு இங்கு வந்தனை; நீ பெரும் புகழுடையவனாய் இருந்தும், என்னை எவர்க்கேனும் மணம் முடித்துக் கொடுத்தனையோ? இல்லை; அன்றியும், விண்ணவர், மண்ணவர் ஆகியோருடைய ஒரு பெண்ணை வேறொருவன் எடுத்துச் சென்று கூடினால், அஃது இராக்கத மணம் என்றும், அது எண்வகை மன்றல்களுள் ஒன்றென்றும், நீதியொடு பொருந்திய தென்றும் ஆன்றோர் கொண்டனர்; அம் மணம் நம் குலத்திற்கு இயைந்ததாதலின், நீ இதனை நீதியென்று கொண்டு உடன்படாது வெகுண்டு வருதல் தகுமோ? நானும் இதற்கு உடன்பட்டமையால் என்னுயிர்க் கணவன் உயிரை எனக்கு நீ அளித்தல் வேண்டும்" என்று சொல்ல அதற்கு இராவணனும் நேர்ந்து, வெற்றியுள்ள அம் மதுவின் வீட்டிற்கு வந்து அன்போடு அவனுடன் உறவாக விருந்து நம்புதல் கொண்டு அவனுடன் புறப்பட்டு அளகையை வளைத்துக் கொண்டிருக்க, அன்று நள்ளிரவில், ஒப்பற்ற அரம்பை யென்பாள், கெடுதலில்லாத நிதிக் கிழவன் மகனாகிய நளகூபர னென்பவனோடு இன்பந் துய்த்திருக்கக் கண்டு, தன்னைக் கூடுமாறு இராவணன் கேட்க அவள், தான் அவனுக்கு மருகி யென்னும் முறையுடையா ளாகையால் அவன் கேட்பது முறைமையன்றெனவுங் கேளாது, அவளை வலிந்து பற்றிக் கூடி நஞ்சு போன்ற ஒருதலைக் காமத்தால் இழிவு செய்து அனுப்பினான்; அதன் பின்னரும் கதையுளது; அரசே கேள்; என்று தவத்தாலுயர்ந்த அகத்தியர் பரவிய பெருமாளே; அழகிய பொற் காம்பையுடைய வெண் குடையைத் தம்பியாகிய பரதன் பிடிக்கவும், மற்றைய இரு தம்பியராகிய இலக்குவனும் சத்துருக்கனும் வீசுங்கால் விரியும் வெண்சாமரைகளைப் பிடித்து அங்கு இருபுடையும் வீசவும்; வெற்றியுள்ள உடைவாளைக் கையிற் பிடித்து அங்கதன் அருகில் நிற்கவும், எங்கள் தலைவனாகிய அனுமான், அழகிய சிங்காதனத்தை மகிழ்ந்து தாங்கித் தாழ்ந்து நிற்கவும், இமையவர் பூமாரி பொழியவும், விரிவாகவுள்ள தும்புருமுதலிய நரப்புக் கருவிகளும், இன்பமாகப் புகழ்ந்தோதுவோருடைய இன்சொற் கருவிகளும் தோற் கருவிகளும் ஒலிக்கவும், நின் உந்தியிற் பிறந்த நான்முகன் மைந்தனாகிய வசிட்ட முனிவன் ஒப்பற்ற மணிமுடியை நின் திருமுடியிற் கவிக்கவும், நின் அருகிற் பிராட்டி மேன்மையோ டமர்ந்திருக்கவும்,

அயோத்தியில் நீ இருந்த அழகினை உள்ளத்தில் ஊன்ற நினைக்கும் போதெல்லாம் என் கண்ணில் நீர் ஓயாது பெருகிக் கொண்டிருக்கும்.

தந்த தந்தனன தான தானன
தந்த தந்தனன தான தானன
தந்த தந்தனன தான தானன தனதான

338. பந்த றைந்துவினை யாடு வார்செறி
மென்க ழுங்குதனை யாடுவார் மிகு
பண்பொ ருந்துகவி பாடு வார்விரி அறலோதிப்
பந்தி துன்றமலர் சூடு வார்தனி
நின்ற ரங்கினட மாடு வார்கள
பம்பொ ருந்துபுன லாடு வார்செழு முலைபூணச்
சிந்தை கொண்டமணி தேடு வார்முலை
கண்டு நொந்தவிடை பேணு வார்நுதல்
சிந்து ரங்கொடெழில் கூரு வார்பல மடவாரும்
தென்றல் நின்றுநட மாடு மேடையும்
ஒன்றி லொன்றுகுறை யாமல் வாழ்பவர்
செஞ்சொல் கொண்டுனடி தாழு வாரல துளதாமோ
வந்த ரம்பைவர லாறு கூறலும்
வெம்பி நின்றுநள னேரில் காதக
வஞ்ச னந்நிரு தேசன் யாதொரு மடவாரை
வன்பில் வந்துதொடு மாகி லாருயிர்
மங்க வென்றுமிகு சாப மேயிட
வம்பி லன்றுமுதல் வேறு மாதரை அவனுகம்
முந்தி யொன்றநினை யாத தாகையில்
நங்கை யெங்கள்சன கேசன் மாதையும்
பொய்ம்ப னஞ்சியணு காத காரணம் இதுவேகாண்
முன்பு ரிந்தகதை வேறு கேளென
விஞ்சு கும்பமுனி கூற வேமகிழ்
முண்ட கங்கள்முக நாபி யாகிய பெருமாளே.

உரை :—"இராவணனால் விடப்பட்ட அரம்பை நளகூபரனிடம் வந்து நிகழ்ந்தவற்றைச் சொல்லக் கேட்டு (அந் நளகூபரன்) வெகுண்டு

'வஞ்சம் மிக்க அவ் விராவணன், இன்று முதல் எந்தப் பெண்ணையேனும் வலிதிற் தொடுவானாயின் அப்பொழுதே அவன் இறந்துபடுக' என்று கடுஞ்சாப மீந்தான். அது கேட்ட நிலைமையற்ற விராவணன், அன்று தொட்டுத் தனக்கு உடன்பாடுள்ள மங்கையரை யன்றிப் பிறரை முற்பட்டு நினையாதிருந்தான். சிறப்புள்ள சனக மன்னன் மகளாகிய பிராட்டியாரை, வலிமை மிக்க அவ் வரக்கன் நெருங்குதலும் தொடுதலும் செய்யாதிருந்த தற்குக் காரணம் அச் சாபத்தினால் உண்டாகிய அச்சமே யாம் என்பதைக் காண்பாய்; இன்னமும் அவன் செய்தவைகள் உள்ளன; சொல்லுகி றேன் கேள்" என்று தவத்தால் மேம்பட்ட அகத்திய முனிவர் சொல்ல மகிழ்ந்த—கண்களும், முகமும், திருவுந்தியும் தாமரை மலராகிய—பெரு மாளே; பந்தடித்தாடுவோர், கழற்காய் ஆடுவோர், மிக்க பண்புகள் அமைந்த கவி பாடுவோர், விரிந்த கருமணல் போன்ற கூந்தலில் வரிசை யாக நெருங்குமாறு பூச்சூடுவோர், ஒப்பற்ற நல்ல அரங்குகளில் நடனம் ஆடுவோர், பல வகை மணமுள்ள பொருள்களால் நறுமணம் வீசும் தண் ணீரில் ஆடுவோர், செழுமையான நகில்களில் சூடிக் கொள்ள விருப்ப மான முத்து மாலைகளைத் தேடுவோர், நகிற்சுமை பொறுது தளரும் இடையை மேகலையால் தளராதபடி செய்வோர், நெற்றியில் சிந்துரப் பொட்டணிந்து அழகு செய்வோர், ஆகிய பல பெண்களும், தென்றல் நின்றுலாவும் மேடையும், வேறு பிற செல்வங்களும் குறைவின்றிச் செவ் வையாகப் பெற்று வாழ்பவர்கள், செஞ் சொற்களாற் பாடி நின் திருவடி களை வணங்கியவர்களே யாவர். அன்றி, நின்னை வணங்காதவர் அச் செல் வங்களைப் பெறுதற் குரிமையுடையவ ராவரோ?

தான தானதன தான தத்தனன
தான தானதன தான தத்தனன
தான தானதன தான தத்தனன தனதான

339. பார தூதுமணி மாலை நற்பவுரி
கோவை யேசதுறை யேர்பி ளைக்கவிதை
பாத கேசமடல் ஊர்த னக்கெழுவ தெனவோதல்
பாடல் மேயகள நாலு பத்துவகை
சீரு லாவுவெளை யேக வித்துறைகள்
பாடி யோடிநிதி யாளரைப்பாவி உழலாதே
ஆர வாரவதி சீத ளப்ரபல
கோல காலவெகு மாமு கப்புனிதம்
ஆன வானநதி யோடு நற்றுளவு பிரியாநின்

ஆடல் மேவுமிரு பாத முற்றபுகழ்
ஓதி யோதியது வேகி லைத்துருக
ஆசி லாதவர நீய ளிப்பதுவும் ஒருநாளோ
சூரி யாரிகர தூட ணத்திரிசி
ராப சாசன்மக கோபன் மிக்ககணர்
தூம கேதுவினை யான ளித்தவர்கள் குரவோர்கள்
சூழ வேகியம ராப திக்குவர
மாசு மாலிபட வேவ சுக்கள்பொர
சூல மீதுமுகி லூதன் வச்ரன்மகன் விழமோத
வீர மேவுநிரு தேச னைப்பொருது
தேவ ராசன்விரு தேபி டித்துவர
மேக நாதனெதிர் காண விற்கடுகி யொருபாசம்
வீசு போதுமக வான கப்படலு ர்
ஓடி னார்களிமை யோரெ னப்பொதிய
வேத னேதமுடி தான னைத்துமகிழ் பெருமாளே.

உரை :—“ நளகூபரன் சாபம் கொடுத்த பின்னர் இராவணன், விண்ணவரோடு போர் புரியப் புறப்பட்டுச் சூரிய சத்துரு, கரன், தூடணன், திரிசிரன், பசாசன், வேள்விப் பகைஞனாகிய யக்ஞகேது, மாராட்சன் தூமராட்சன், தூமகேதுவைப் போல் உலகத்தை யழிக்கும் கும்பகருணன், அவன் பெற்ற மக்களாகிய கும்பன், நிகும்பன், தான் பெற்ற மைந்தர்களாகிய இந்திரசித்து, அதிகாயன், அட்சயன் முதலியோரும், மாலியவான் சுமாலி முதலிய பெரியோர்களும் சூழ்ந்து வர அமராவதிக்குள் வந்த போது விண்ணோர் படைகளும் அரக்கர் படைகளும் கை கலந்து சமர் புரிகையில் சுமாலி இந்திரனால் இறக்கக் கண்டவுடன் சயந்தன் மயங்கி விழுமாறு மேகநாதன் அடிக்க இந்திராணியின் தந்தை புலோமனென்பான் சயந்தனை மாயமாய்ப் பாதலத்திற் கொண்டு போய் மயக்கம் தெளிவிக்க, அப்போது தனியே வந்து கொண்டிருந்த ஆண்மையுள்ள இராவணனைத் தேவேந்திரன் போரிற் கட்டிப் பிடித்து வெற்றிக் கொடி பிடித்து வருங்கால், மேகநாதன் கண்டு முகிலில் மறைந்திருந்து விரைவில் வில்லை வளைத்து ஒப்பற்ற நாகபாசத்தை வீச இந்திரன் அதனால் கட்டப்பட்டான்; படவே விண்ணோர்கள் ஓடினர்; உடனே மேகநாதன் தன் தந்தையைக் கட்டவிழ்த்து விட்டு இந்திரனைக் கட்டியவாறே இலங்கைக்குக் கொணர்ந்து தளையிட்டுச் சிறைவைத்தான் ” என்று பொதிய மலையில் வாழும் அகத்திய முனிவர் சொல்லத் திருமுடி

யசைத்து மகிழ்ந்தருளிய பெருமானே; பெருமையுள்ள பத்துவகைத் தூதுகள், இரட்டைமணி மாலை, நான்மணி மாலை முதலிய மணி மாலைகள், நல்ல நாடகங்கள், கோவை, ஏசல், காப்பு முதலிய பத்துப் பருவங்கள் முறையாகச் சேர்ந்த பிள்ளைத் தமிழ், அடிமுதல் தலைவரை சிறப்பித்தல், மடல், உலா, பாடலமைந்த போர்க்களச் சிறப்பான நாற்பது வகைப் பரணி, சீர் அமைக்கப்பட்ட வெண்பா, கலித்துறை முதலியவற்றைப் பாடிச் செல்வர்களைத் தேடி ஓடிச் சென்று புகழ்ந்து உழலாமல், ஒலியும், குளிர்ச்சியும், சிறந்த புகழும், அழகிய தன்மையுள்ள சிறப்பும், பெருமையுள்ள மிக்க காதலன்பும், தூய்மையும் பொருந்திய வான் நதியாகிய கங்கையும் திருத் துழாயும் பிரியாமலிருக்கும் நும்முடைய ஆற்றல் பொருந்திய தாமரை யடிகளின் புகழைபோற்றி அப் புகழையே நினைத்து நினைத்து அடியேன் கல்மனமும் நீராய் உருகுமாறு குற்றமற்ற வரத்தைக் கொடுப்பது என்னாளோ? இப்போதே அருளுக.

'ஆடல் மேவு' என்பதற்கு நடனம் பொருந்திய எனவும் பொருள் கொள்ளலாம்,

தான தானன தந்தன தத்தன
தான தானன தந்தன தத்தன
தான தானன தந்தன தத்தன — தனதான

340. நீகு லாவிய ணிந்தது பொற்றுகில்
யாமெ லாமணி கின்றது மிந்தழை
நீல நீபுனை யுந்தொடை யிக்குர — வணிவோம்யாம்
நீயி ராசகு லந்தனி லுற்றவன்
ஈன மாமற மெங்கள்கு லத்தியல்
நேய மோடுக லந்திடல் மத்திமம் — எனவோதித்
தோகை யாரிழி வின்கிளவித்துறை
ஆதி கோவைய டங்கவு ரைத்ததி
தார மேகிழு சுண்டர்ப்ரி யப்பட — எதிர்பாடிச்
சோக மாகியு ழன்றுப டைத்திடு
நீடு பாபம கன்றிட நட்பொடு
தூய பாதமி றைஞ்சியு னைத்தொழ — அருள்வாயே
மேக நாதனை யிந்திர சித்தெனு
நாம மோதிவ ரங்கள ளித்தனல்
மீதி லேவரு துங்கர தத்திடை — புனையானும்

வீறு சாவில தென்றுமு தற்பரி
யாக மானநி கும்பலை முற்றிடில்
வேத மாகநி னைந்தது முற்றுக எனவோதி

மாக நாதனி ருஞ்சிறை புக்கது
போது மேயென நின்றுது தித்தயன்
வாழி கூறவ வன்சிறை விட்டனன் மனம்நாணி

வானு ளோர்பதி யும்பதி புக்கனன்
ராம னேயெனும் வென்றிய கத்திய
மாத வேசனை யன்றுப்பி ரியப்படு பெருமாளே.

உரை :—ஓடிச் சென்ற இமையவர் நான்முகனிடம் முறையிட, அவன் இலங்கைக்கு வந்து மேகநாதனைப் புகழ்ந்து அவனுக்கு இந்திர செயித் தென்று பெயர் இட்டு, "நிகும்பலையில் முதன்மையான பரிமேதம் செய்து, அவ் வேள்விக் கனலின் மேல் வரும் சிறப்புடைய தேரின்கண் நீ இருப் பாயாயின் எவராலும் வெல்லப்படாமையே யன்றி உனக்கு இறப்பு மில்லை" என்று வரமருளி, 'இவ் வேள்வி குறைவின்றி முற்றுமாயின் வேதத்தைப் போல் உனக்கு அழிவின்றி நினைத்த பொருள்கள் நிறை வேறும்' எனவும் மொழிந்து, 'விண்ணவர் தலைவன் சிறையிலிருந்தது போதும்; அவனை விடுக' என்று வாழ்த்திய பின், இந்திரசித்தன் இந்தி ரனைச் சிறைவிட்டான்; தேவர் கோனும் நாணமுற்றுத் தலைகுனிந்து அம ராவதியை அடைந்தான்; இராமா அறிக" வென்று சொல்லிய வெற்றி பெற்ற பெருந் தவசிகட்குத் தலைவராகிய அகத்திய முனிவர் விரும்பிய பெருமாளே; கோவைத் துறையாக ஒரு மறப் பெண் ஓர் அரசனிடம் கூறுதல் :

"நீர், விளங்கும் பொன்னுடையை அணிவீர்: நாங்கள் உடுப்பது இத்தழை; நீர் சூடும் மாலை குவளை; நாங்கள் இக் குராமலரைச் சூடுவோம்; (குராவில் மணமும் தேனும் இன்மையால் மேன் மக்கள் அணிவதில்லை; சிவபெருமானுக்கு மட்டும் உரியது) நீர் அரச குலத்தவர்; நாங்கள் இழிந்த மறக்குடியிற் பிறந்தவர்கள்; இவ்வாறுயர்ந்துள்ள நீர் இழிந்த எங்களோடு கலத்தல் சிறந்ததாகாது;" என்று பெண்கள் கூறும் இழிந்த கிளவித் துறைகளையுடைய கோவையை முற்றும் சொல்லி, நெடுந் தொலைவு சென்று இழந்த மக்கள் மகிழுமாறு அவர்கள் எதிரிற்பாடி, மயக்கத்தோடு உழன்று தேடிக் கொண்ட பேரச்சம் நீங்கப் பெற்று அன் புடன் நின் தூய மலரடிகளை வணங்கி நிற்க அருள் செய்வாயாக.

இது, தோழி கையுறை மறுத்தல் என்னும் துறை.

தாத்ததான தாத்தன தனதன
தாத்ததான தாத்தன தனதன
தாத்ததான தாத்தன தனதன தனதான

341. கோர்த்தவாளி பொற்குழை முடுகுவ
வாய்த்தகாம சாத்திர மொழிகுவ
கோட்டியான வ்யாத்திகள் பயிலுவ முனிவோர்தப்
கூட்டமோட வோட்டுவ வெகுவிளை
யாட்டிஞேடு சாட்டைகள் முயலுவ
கூற்றநாண நாட்டுயிர் பருகுவ அரியாட
நேத்ரமாதர் காற்கடை தனில்விழு
வேட்கையான சூழ்ச்சியும் விரகும்
நீட்சியான தூர்த்தனை யசடனை யிருபோதுப்
நீற்றிஞர் பூத்தலை யுறைபவர்
பார்க்கொணுத தாட்டொழ வருள்செய்து
நீக்கொணுத பாக்கிய முதவுவ தொருநாளே
கார்த்தவீரி யார்ச்சுனன் நருமதை
ஆற்றின்மாதர் கூட்டம துடன்மகிழ்
காட்சிமேவ ராக்கதர் குலபதி அதுகாணு
காற்றின்வேக மாய்ப்பொர வவனிவன்
ஆற்றல்போக நீட்டிய புயவலி
காட்டுபோது தோற்றன னிவனையொர் சிறையூடே
தாத்ரிராசன் வீழ்த்தின னிளையவர்
கேட்டுவேத மூர்த்திமுன் விரைவொடு
சாற்றவோது நாற்கலை மலர்முனி சிறைமீள
தாழ்ச்சியோடு போய்ப்பதி மருவினன்
வேட்டைபோன பேர்க்கிது வெனமிகு
தாக்கிஞேடு மாக்குட முனிபுகழ் பெருமாளே

உரை :—இராவணன் திசைகளை வென்ற செய்தி கேட்டு இராமன் 'இராவணன் தோல்வியுற்ற இடம் இல்லையோ?' எனக் கேட்டதற்கு அகத்திய முனிவர் கூறியது :

"கார்த்த வீரியனென்னும் அரசன் நருமதையாற்றில் தன் மனைவியர் பலரோடு நீர் விளையாடிக் கொண்டிருக்கையில், அரக்கர் குலத் தலைவனை

இராவணன் அவனைக் கண்டு காற்றினும் கடுகச் சென்று போர்புரிய அவ்வரசன் கரைக்கு வந்து இராவணனை எதிர்த்து அவன் வலிமை கெடத் தடியாலடித்துத் தன் ஆற்றலைக் காட்டிய போது இராவணன் தோற்றான்; தோற்ற அவனை நிலவுலகுக் கரசனாகிய அக் கார்த்த வீரியன் ஒரு சிறையில் விழச் செய்தான்; அச் செய்தியை மகோதரன் முதலியோரால் தம்பியாகிய விபீடணன் கேள்விப்பட்டு மறைகளே வடிவு கொண்டது போல் இருந்த பாட்டனாராகிய புலத்திய முனிபாற் சென்றுரைக்க, நான்கு வேதங்களும் மலர்ந்தது போலுள்ள அம் முனிவர், கார்த்த வீரியன்பால் வந்து முகமன் கூறிச் சிறை விடுவிக்க, இராவணன் தலை குனிந்து தோல்வியாகிய தாழ்வுடன் இலங்கையை யடைந்தான்; இராமா, வேட்டை மேற் சென்றோர்க்கு நேர்ந்ததிது ", என்று மிக்க தாக்குதலோடு பெருமையுள்ள கும்ப முனி புகழ்ந்து போற்றிய பெருமாளே ; வில்லில் தொடுத்த அம்பைப் போல் காதணியை நெருங்குவதும், தனக்குக் கிடைத்த மதனன் நூலைச் சொல்லுவதும், கேலித் கூத்தான வியாத்திகளைப் பழகுவதும், முனிவரர் கூட்டம் ஓடத் துரத்துவதும், மிக்க விளையாட்டுக்களோடு குறும்புகள் செய்வதும், நிலையான எமன் நாணுமாறு உயிர் குடிப்பதும் ஆகிய நெறியில்லாத கண்ணையுடைய பெண்களின் காற்கடையில் விழும் காமமாகிய சூழ்ச்சியும், காமக் கவலையும் உள்ள தூர்த்தனாகிய அடியேனை, அறிவில்லாத அசடனை—காலை மாலை என்னும் இரு பொழுதும், திருநீற்றிற்குத் தலைவனாகிய சிவபெருமானும், தாமரை மலரிலிருக்கும் நான்முகனும் தேடிக் காணமாட்டாத நின் திருவடிகளை வணங்கச் செய்து, விலக்க வரிதாகிய பெரும் பேறாகிய திரு வைகுந்தத்தைக் கொடுத்தருளுவது எந்நாளோ? இன்றே அருளல் வேண்டும்.

வியாத்தி—செயல். வியத்தி என்பதின் விகாரம்.

பூத்தலை—தாமரைப் பூவின்கண்; தலை ஏழனுருபு.

தத்தந்தன தானன தாத்தன
தத்தந்தன தானன தாத்தன
தத்தந்தன தானன தாத்தன தனதான

312. இட்டந்தனில் வாழ்வது நீர்கொடு
புட்பங்கொடு னீரடி போற்றவும்
எற்கென்றிர வாமையு மேற்றரும் மடவாரால்
எற்றுண்டுது ராகத மூத்திரம்
கட்டுண்டுள வாசலை நோக்குறும்
இத்தொந்தமு ருதபி ராத்தியும் ஒருகாலும்

முட்டின்றியெ நாளுமி ராப்பகல்
இட்டுண்டுயர் நீதிந டாத்தலும்
முற்றும்பெறு தூயக டாட்சமும் உடையேனாய்
மொய்த்தண்டர்ப ராவுறு மாப்பத
நற்பங்கய மேபெறு பேற்றினை
முற்றொண்டர்மு னேவழி காட்டுவ தொருநாளோ
கட்டுண்டவி ராவணன் மேற்படு
கிட்கிந்தைபு காநனி போய்க்கவி
கர்த்தன்சிவ பூசைதென் மாக்கடல் முயல்வானைக்
கைக்கொண்டிடு போதுதன் வாற்சுரு
ளைக்கொண்டட ராவிவன் வாய்ப்புனல்
கக்கும்படி தோள்களை வீக்கினன் அதனோடே
வட்டங்கொடு தாவினன் மேற்கடல்
அக்கண்சிவன் மேன்மலர் சாத்தினன்
மற்றங்குதி யாவட பாற்கடல் குணமேவலை
மற்றும்பல பூசைசெ யாப்பதி
யிற்சென்றனன் வாலியெ னுத்தமிழ்
வர்க்கந்தரு மாமுனி போற்றிசெய் பெருமாளே.

உரை :—“ கார்த்த வீரியனாற் கட்டுண்ட விராவணன், பின்னர் மேன்மையுடைய கிட்கிந்தைக்குப் போய்க் கோட்டை வாயிற் காவலரால் வாலியிருக்கும் இடத்தை யறிந்து விரைந்து சென்று தென் கடலில் குரக்குத் தலைவனாகிய வாலி சிவ பூசை செய்யுங்கால் தன் இருபது கைகளாலும் அவனைப் பின்புறத்திற் கட்டியிறுக்கும் போது, அவ் வாலி தன் வாலாகிய சுருளைக் கொண்டு இராவணன் உடலைச் சுற்றி அவன் வாய் நீரைக் கக்குமாறு அவனுடைய இருபது தோள்களையும் இறுகக் கட்டினான்; பின், அக் கட்டுடன் எழும்பி விண்ணில் வட்டமிட்டு மேலைக் கடலில் தாவிப் பாய்ந்து அங்கும் சிவ பூசை செய்து பூவைச் சாத்தினான்; மீண்டும் இவ்வாறே குதித்து வட கடலிலும் சிவபெருமானை வழிபட்டுத் திரும்பவும் கீழ்க் கடலிற் குதித்துச் சிவ பூசை, வயிரவ பூசை, சண்டேசுவர பூசை முதலிய பல வழிபாடுகளும் செய்து, கிட்கிந்தைக்குப் போனான் ” என்று தமிழ்த் துறைகளை யுண்டாக்கிய அகத்திய முனிவர் போற்றி செய்யப் பெற்ற பெருமாளே; விரும்பிய முறைகளில் வாழ்வதும், மஞ்சன நீர், திருமாலை, பூ முதலிய கொண்டு நின் திருவடிகளிரண்டையும் அருச்சித்தும் அணி செய்தும் வணங்கிப் பரவுதலும், பயன் கருதி வேள்வி செய்யா

திருத்தலும், நாள்தோறும் பெண்களால் இடருண்டு வலிந்து மூத்திரத் தாற் கட்டப்பட்டுள்ளது போல் இருக்கும் வாயிலான குறியைப் பார்க்கும் கட்டாகிய தொடர்பின்றி நன்மை அடைவதும், என்றும் முட்டின்றி இரவும் பகலும் இரவலர்க்கீந்து உண்ணும் நீதி நெறியிற் செல்லுதலும், முடிவு நாளில் பெறத்தக்க தூய்மையுள்ள நின் அருட்பார்வையைப் பெறு தலும் உடையவனாகி நான் இமையவர் நெருங்கிப் போற்றும் பெருமை வாய்ந்தநின் திருவடி மலர்களைப் பெறும் அடியவர்களின் முன் செல்ல நீ வழி காட்டுதல் எந்நாளோ ?

தானன தாந்தன
தானன தாந்தன
தானன தாந்தன தனதான

343. மூலவ ராங்கனை
சீலகு ணம்புதி
மூதறி வாண்டவள் அயனார்தம்
மோகன வேந்திழை
மாதவ ளாம்புயை
மோனிப ராங்குசை கலிவாணி
பாலைப லாண்டுமென்
நாவக ராஞ்சனை
பாடல்கள் தேர்ந்தவள் அபிராமை
பாரதி யீந்திடு
வாய்மைகொ டங்கிரு
பாதமும் யான்புகழ் புரிவேனோ
வாலிடை தூங்கிய
ராவணன் வேண்டலும்
வாலியை யீண்டிய ஒருதாரை
மாக்ருபை கூர்ந்தபின்
ஆயவ னீண்டதொர்
வால்விட வீழ்ந்தனன் அசுரேசன்
மேலொரு பாங்கன்மெய்
தானென வான்கனல்
மேவிய சான்றென உறவானன்

வீறிது காண்பெரு
மானென மாண்குட
வேதியர் தாம்புகழ் பெருமாளே.

உரை:—“ வாலின் நுனியில் இறுக்கிக் கட்டப்பட்டு, நாற் கடலையும் வாலி சுற்றி வருமளவும் தொங்கிக் கொண்டிருந்த இராவணன் தன்னை விட்டு விடச் சொல்லி வேண்டிக் கொள்ள, அப்போது வாலியின் அருகில் வந்து நின்ற ஒப்பற்ற தாரை இராவணன் படும் அல்லலைக் கண்டு இரக்கம் கொண்டு, மிக்க அருளோடு வாலியை வேண்டி இராவணனை விடுதலை செய்யுமாறு கேட்டாள்; வாலி, தன் ஒப்பற்ற நீண்ட வாலை விட இராவணன் கீழே விழுந்தான்; அவனை வாலி பார்த்து ‘ நீ எங்கு வந்தாய்? ’ உண்மையைச் சொல்? என்ன, அவன் ‘ உன்னிடம் பொருதற்கு வந்தேன் ’ என்ன, அங்ஙனமாயின் ‘ இருவரும் பொருதும் ’ என வாலி கூற, இராவணன் அஞ்சி இனி யான் உனக்கு ஒரு சிறந்த தோழன்; இது மெய்; இதற்குப் பெருமையுள்ள அக்கினியே சான்று’ என்று சொல்லி வாலியுடன் உறவானான்; அரசே, இதுவே கண்டாய் வாலியின் புகழ் ” என்ற சிறப்புள்ள கலயத்திற் பிறந்த அகத்திய முனிவர் போற்றும் பெருமாளே; எல்லாப் பொருள்களும் தோன்றுதற்குக் காரணமானவளும், வரமருளும் தெய்வப் பெண்ணும், நல்ல அறிவும் பண்பும் கடல்போலுள்ளவளும், பழைய அறிவுடைய தலைவியும், நான்முகனுடைய காதல் தலைவியும், பொன்னாலும் மணிகளாலும் செய்யப்பட்ட அணிகளை யணிந்தவளும், பெருமை மிக்க வெண்டாமரையில் வீற்றிருப்பவளும், (வீற்றிருத்தல்—சிறப்பாக அமர்ந்திருத்தல் என்வும் வருத்தமின்றி இருத்தல் எனவும் பொருள்படும்) பேசாதிருப்பவளும், பெருமையுள்ள அங்குசந் தரித்த கையை யுடையவளும், (இஃது அன்னத்தை ஏறிச் செலுத்துவதற்காகக் கொள்ளப்பட்டது) பாட்டுக்களே வடிவமாக விருக்கிற வாணி யென்னும் பெயருடையவளும், பேதைப் பருவ (பாலை) மானவளும், பல காலங்களிலும் என் நாவை விட்டு நீங்காது மனத்திற்குப் பெரு மகிழ்வளிப்பவளும், பாட்டுக் குரிமையுடைய தேர்ச்சியுள்ளவளும், அழகுள்ளவளும், பாரதி யென்னும் பெயருடையவளும் ஆகிய கலை மகள் ஈந்தருளிய சொற்களைக் கொண்டு இங்கு நின் திருவடிகள் இரண்டையும், அடியேன் புகழ்ந்து பாடுவேனே யன்றிப் பிறிதில்லை.

ஈங்கென்றது, இவ்வுலகத்தென்றும், இத்திருப்புகழின் கண் என்றும் கொள்வதற்கென்க.

வர—அங்கனை—வராங்கனை; அங்கனை—பெண். ரஞ்சனை என்பது சந்தம் நோக்கி முதல் நீண்டது. ரஞ்சனை—மகிழ்ச்சியை அளிப்பவள், ‘ நாவக லாஞ்சனை ’ எனவும் பாடம்.

தனதன தானன தந்த
தனதன தானன தந்த
தனதன தானன தந்த தனதான

344. பலதலை யானுயி ருண்ட
திறமது சேவக மென்று
பகருவ தோவவன் மங்கு சிறைவீழப்
படைபொரு ராசனை மூந்த
இருபுய மாயிர மன்று
பரசுகொ டேயரி கின்ற திறலோனைச்
சிலையது கோலிமு னிந்து
தவமது வாரிய பின்பு
செயசெய ராகவ வென்று மழுவாளி
திசைபழு தாகியொ டுங்கி
எனைவிடெ னுவுயிர் கொண்டு
செலவிடு வீரமி னைந்து புகழ்வேனோ
உலகினில் வாலிதி றங்கள்
பகருமதோவிடும் வென்றி
உயரனு மானையொ ழிந்த திறலோரார்
ஒலிகடல் தாவினன் வஞ்ச
மகளுடல் பீறினன் மங்கை
உயிரது பேணினன் வெந்த நகர்வீரர்
குலமது நூறின னெம்பி
கிளையொடு வாழம ருந்து
குளிர்வரை யோடுபி டுங்கி வருநீதி
குணநிதி யானவி வன்றன்
வலியறி யாவகை யென்கொல்
குறுமுனி யேயுரை யென்ற பெருமாளே.

உரை :—அகத்திய முனிவர் சொல்லியவற்றைக் கேட்டுவந்த இராம பிரான் கூறுவது :

“முனிவரரே, உலகில் வாலியின் திறமைகளைச் சொல்லவும் இயலுமோ? அதை விடுதிர்; வெற்றியுள்ள மேன்மையுடைய அனுமானைத் தவிரத் திறமையுள்ளவர்கள் யாருளர்? அவன் ஒலி மிக்க கடலைத் தாண்டி

ஞன் ; வஞ்சனை மிகவும் செய்த ஆங்கார தாரையின் உடலைக் கிழித்தான் ; சீதையின் உயிர் நீங்காமற் காத்தான் ; இலங்கையை எரித்து அதனால் வெந்த அந் நகரிலிருந்த வீரர்களைக் குலத்தோடு பொடியாக்கினான் ; என் தம்பி குரங்குப் படையாகிய உறவோடு பிழைத்தெழுமாறு மருந்தைக் குளிர்ந்த மலையோடு பிடுங்கி வந்து உதவினான் ; நீதியும் நல்லியல்பும் உருக் கொண்டு வந்தன போன்றுள்ள அவ் வனுமானது திறத்தை அறிவி யாததென்னோ ? குறிய வடிவுள்ள மாமுனிவரே, சொல்வீராக,"வென்று திருவாய் மலர்ந்தருளிய பெருமானே ; பத்துத் தலைகளையுடைய இராவ ணன் உயிரைப் போக்கிய ஆண்மையை வீரமென்று சொல்லுவதோ ? அவ் விராவணன் வெற்றி மழுங்கிச் சிறையில் விழுமாறு போர் செய்த கார்த்தவீரி யார்ச்சுனனுடைய ஆயிரம் பெருந் தோள்களையும் கோடரியால் வெட்டிய திறமையையுடைய பரசுராமனை அவன் தந்த வில்லைக் கைக் கொண்டு வளைத்து வெகுண்டு அம்பைத் தாரந்து அவன் தவம் முழுதை யும் வாரிக் கொண்ட பின் மழுவாளியாகிய அவன், திக்குக் கெட்டு நடுங்கி யொடுங்கி, " இராமா, நினக்கு வெற்றி, வெற்றி ; நான் தவத்திறம் உடை யவன் ; என்னைக் கொல்லாதே ; நான் அந்தணன் " என வேண்ட, அப் போது நீ இரக்கமுற்று, 'உன் உயிரை மட்டும் கொண்டு பிழைத்துப்போ' என்றனுப்பிவிட்ட வீரத்தை நினைந்து புகழ்ந்து போற்றுவதோ ? சொல்வா யாக.

தானதன தந்தனன தான
தானதன தந்தனன தான
தானதன தந்தனன தான தனதான

345\. பேருலகி ரந்தவிர வாளர்
சேரவும டங்கியறி யாத
பீடுடைய தம்பமுறு கோபர் க்ருபையாளர்
பேய்முலைய ருந்துமொரு பாலர்
பாரிடைவ ருங்கிழவர் சேடர்
பேணிமகி ழுந்தமையர் சேடர் இளவீரர்
போரினிடை வென்றுவரு தீரர்
ஓடிமறை யுந்துவரை யாளர்
பூவையர்மு யங்குமணவாளர் கரிபாலன்
போலெழுவ ரும்பிரம சாரி
ரூபமென நின்புகழ்ப ராவு
போதிலொரு கிஞ்சிலொரு போது பெறுவேனோ

சூரியன்ம கன்சுவண மேரு
மேவிமகிழ் அஞ்சனையெ னுமெவோர்
தோகைபவ னன்புணர நீடு கருவாகிச்
சூலுவென வந்துகனி தேடி
ஆயவள்பி ரிந்தபொரு போது
தூயகனி யென்றுகதி ரோனை எதிர்தாவ
ஈரரவு மெங்களைய லாது
பாய்பவனெ வன்கொலென மோத
ராகுவொடு செம்பணியும் வீழ அமராட
யாகபதி வெங்குலிச மேவ
மாருதிம யங்குகதை கூறி
ஈனமில்கு றுந்தவர்ப ராவு பெருமாளே.

உரை :—அகத்தியர் மறுமொழி கூறல் :

'கதிரவன் வரத்தாற் பிறந்தமையாற் சுவணமேரு வென்னும் பெயர் பெற்றவன் கூடி மகிழ்ந்திருந்த அஞ்சனை யென்னும் ஒரு பெண்ணை வாயு தேவன் கூடி இன்புற அவள் பல நாட்கள் கருக்கொண்டிருந்து ஈன, அவள் மகனெனப் பிறந்து, ஒரு நாள் தாயை நோக்கி 'எனக்கு உணவே' தென்று கேட்க அவள், காட்டிலுள்ள சிவந்த பழங்கள் எல்லாம் உன் உணவு என்று சொல்லி யிருந்ததால், அவ் அஞ்சனை பழந்தேடிப் பிள்ளையைப் பிரிந்து போயிருக்கையில், அமாவாசை யன்று, பகலவன் காலையில் தோன்றக் கண்டு, அவன் பகலவனைத் தூய கனியெனக் கருதி எதிராகப் பாய்ந்து வர, இராகு கேது வென்னும் இரு பாம்புகளும், 'எங்களை யன்றிக் கதிரவன் மேற் பாய்பவன் எவன்?' என்று சினந்து வந்து, அப் பிள்ளையை மோத, இராகுவும் செம் பாம்பும் விழுமாறு அம்மகவு போர் புரிந்து அடிக்க, அவர்கட்குத் துணையாய் வந்த வேள்வித் தலைவனான இந்திரன் அச் சிறுவன்மேல் உள் வெப்பம் மிகுந்த வச்சிரப் படையை யேவ அதனால் அடிபட்டு அக் குழவி மடங்கிய வரலாற்றைச் சொல்லிக் குற்றமற்ற அகத்திய முனிவர் போற்றி செய்த பெருமாளே; பெரிய உலகங்களை மாவலியிடம் இரந்து வாங்கிய இரவலரும், எல்லாப் பொருள்களும் சேர்ந்து அடங்கியுள்ள—அறியப்படாத தன்மையுள்ள—பெருமை வாய்ந்த தூணுக்குள் இருந்து இரணியன்மேல் சினமும் பிரகலாதன்மேல் அருளும் கொண்ட நரசிங்க மூர்த்தியும், பூதனையின் முலையை யுண்ணும் குழந்தையும், முதலாழ்வார் மூவரும் இருட்டில் நெருங்கியிருக்க அவர்களை அருளும் பொருட்டு உலகிற்கு வந்த கிழவரும், ஆதிசேடனான இளைய பெருமான்

ஆதரித்து மகிழ வந்த தமையனாரும், அவ் வாதிசேடனான தமையனுக்குத் தம்பியான வீரரும், போரில் வெற்றி பெற்று வரும் துணிவுடையவரும் போரில் தோற்று ஓடி ஒளிந்து துவாரகையில் வாழ்பவரும், பல பெண் களோடும் கூடியிருக்கும் மணாளரும், அசுவத்தாமனின் அம்புக் கிலக்காகி உத்தரையின் வயிற்றினின்றும் வீழ்ந்த கரிக்கட்டையைக் குழந்தையாகப் பிழைத்தெழச் செய்த பிரமசரிய ஒழுக்கமுள்ளவரும், ஆகிய இவ்வடிவுடை யோரெனப் பலர் உம்மைப் பரவும் போது, நும்மைச் சிறிதளவு போற்றுப் ஒரு பொழுதையேனும் நான் பெறுவேனோ? சொல்லுக.

தானன தத்தன தனன தத்தன
தானன தத்தன தனன தத்தன
தானன தத்தன தனன தத்தன் தனதான

346. தூசுகள் பெற்றில ரிடையர் தத்தையர்
தூசுகள் பெற்றன ளொருமடக்கொடி
சூரிய புத்ரனை யுறவு பற்றினை ஒருகாலப்
சூரிய புத்ரனை யுயிர்ப றித்தனை
சூழ்கட லைச்செனு மிசைய டக்கினை
சூழ்கடல் புக்கனை கமட முற்றனை அதனோடோர்
ஈசனை முற்றம ரிடைது ரத்தினை
ஈசனை வைத்தனை யொருபு றத்தினில்
ஏழுல கத்தினு ளுனது வித்தைகள் அறிவார்யார்
யானுனை யெப்படி யினிநி னைப்பது
யானுனை எப்படி தொழுது நிற்பது
யானுனை யெப்படி யினிவ ழுத்துவ தருள்வாயே
வாசவன் வச்சிர மநுவி னிற்பட
ஒய்வுறு புத்திர னுடலி னைக்கொடு
வாயுவொ ளித்தன னுலகு கெட்டது நெடுவானோ
வாழ்பிர மற்கிது முறையி டச்செக
சூனிய மிப்படி வருகை கற்பல
மாருத வுத்தம பிழைபொ றுத்திநின் மகனாள்
நாசம றப்பெறு கெனவெ ழுப்பினன்
ஈசர்மு தற்கட வுளர்ப டைக்கலம்
நாடுத லற்றிட வரம ளித்தனன் அநுமானை

நாமம ளித்தனன் அனுமன் விக்ரமம்
வீரசெ ருக்கினில் விளையு மக்கதை
ஞானவ கத்திய ருரைசெ யத்தெருள் பெருமாளே.

உரை :—"இந்திரனது வச்சிரப்படை இடக் கன்னத்திற்பட்டு அதனால் மெய்ம்மறந்த மகனுடைய உடலை யெடுத்துக் கொண்டு போய் வாயு தேவன் பாதலத்தில் ஒளித்துக் காற்றியங்காமற் செய்தான் : அப்போது மூவுலகும் அசைதலின்றிக் கெட்டன ; இச் செய்தியை இன்பத்தோடு வாழும் நான்முகனுக்கு நீண்ட விண்ணுலகவர் முறையிட்டுக் கொள்ள அவன் வாயு தேவனிடம் வந்து, ' சிறந்தவரான வாயு தேவரே, உலகங்கள் பாழ்பட்டிருத்தல் முறையன்று ; இந்திரன் செய்த பிழையைப் பொறுத்துக் கொள்க ; நும் மகன் என்றும் உயிர் நீங்காமல் அழிவின்றி யிருக்கக் கடவன்", என்று சொல்லி அக் குழவியைக் கையாற்றடவி எழுப்பிய பின், ' இக் குழந்தை சிவபெருமான் முதலிய விண்ணவர் தம் படைக்கலங்களால் ஊறுபடான்; இவன்மேற் படும் அவைகளே அழிவன வாகும் ;' என்று வரமருளினன் ; அனுமான் என்னும் பெயரையும் அக் குழவிக்கு ஈந்தனன் ; அப்போது வாயு கட்டின்றிப் பரவியது ; மலரவன் முதலிய விண்ணவர்களும் தம் இருப்பிடம் அடைந்தனர் ; வாயு தேவனும் அப் பிள்ளையை அஞ்சனையினிடம் கொடுத்துவிட்டுப் போனான் ; வீரமுள்ள இராமா, அனுமானுடைய ஆற்றல்கள் எல்லாம் தருக்கினால் உண்டாயின" என்னும் அக் கதையை ஞானமுள்ள அகத்திய முனிவர் சொல்லத் தெளிந்தருளிய பெருமாளே ; கிளிபோற் குலாவும் சொற்களையுடைய இடைப் பெண்களின் துகில்களை நீ பறித்துக் கொண்டனை ; பெண்கள் பலருக்குப் புடைவை தாராத நீ, மடப்பமுடைய பொற் கொடி போன்ற திரௌபதிக்குப் பல புடைவைகளை யளித்தனை; ஒரு காலத்தில் கதிரோன் மகனாகிய சுக்கிரீவனை உறவு கொண்டனை ; பின்னொரு காலத்தில் கதிரவன் மைந்தனாகிய கன்னன் உயிரை வாங்கினை ; இவ் விரண்டு செயல்களாலும், ஒருகால் இந்திரன் மகனான வாலியைக் கொன்றும், மற்றொரு கால் இந்திரன் மகனான அருச்சுனனை நட்புக் கொண்டும் வேறு வேறு திருவிளையாடல் புரிந்தனை ; ;மச்சாவதாரம் எடுத்தபோது உலகைச் சூழ்ந்துள்ள கடலை உன் அவதாரத்தின் செலுவில் அடக்கினை ; அமுதத்திற்காகப் பாற்கடலைக் கடந்தபோது கூர்மாவதார மெடுத்துக் கடற்குள் புகுந்தனை; வாணனது முற்பட்ட போர்க்களத்தில், சிவபெருமான் தன் மக்கள், மனைவி, படைகளோடு ஓடத் துரத்தினை ; அப்பெருமானையே நின் உருவத்தில் ஒருபுறத்து வைத்தனை ; இவை நின் திருவிளையாடல்கள்; இத்தகைய நின் வேடிக்கையான செயல்களை எழுலகிலும் அறிவார் யார்? எவருமிலர் ; ஆதலின் எவரினும் கடைப்பட்ட அடியேன், நின்னை எங்ஙு

னம் நினைப்பது ? எங்ஙனம் வணங்குவது ? எங்ஙனம் பூசை செய்வது என்பவற்றை அருளிச் செய்வாய்.

தானன தத்தன தத்தன
தானன தத்தன தத்தன
தானன தத்தன தத்தன தனதா

347. ஓரா வுச்சிய றுத்தனை
ஓரா வுச்சிந டித்தனை
ஓரா வத்தைய டர்த்தனை அணையா
ஓரா விற்றுயில் பற்றினை
ஓரா வைக்கிரி சுற்றினை
ஓரா வைப்பிழை பட்டிட ஒருதேனா
பாரில முத்தினை யிப்படி
மாயந டிக்குமு னக்குள
பான்மைக ளைத்தெரி யக்கொடு தினமான
பாடிமு டித்தரு சித்தெழு
சீலகு ணத்தைநி னைத்திரு
பாதமெ னுச்சியில் வைப்பதும் ஒருநாளே
மாருதி மெத்தசெ ருக்கினில்
வேதவி சிட்டர்த வத்தினை
வாரிய ழித்தனன் மெய்த்தவர் முனிவா
வாயுவ ளித்திடு புத்திர
னீபுன்மி டுக்கறி யக்கட
வாயலை நற்றெருழில் பற்றுதி எனலோடு
வீரனு மக்ரமம் விட்டனன்
வாலிது ரத்திய சுக்ரிபன்
வேணுமெ னத்துணை பற்றினன் ரவிதேரி
மேவிய ருக்கனி டத்துவி
யாகர ணப்பொருள் கற்றனன்
வீறிதெ னச்சொல கத்தியர் பெருமாளே

உரை :—" வரம்பெற்ற அனுமான் மிக்க தருக்கோடு, நான்மறைகளை யோதும் சிறந்த முனிவர்கள் தவம் செய்யும் பன்னசாலையில் புகுந்

வன்விக்குரிய பொருள்களை வாரியிறைத்தும், அக்கனலை யழித்தும் சய்கின்ற துடுக்கான செயல்களைக் கண்ட உண்மையான தவவடிவுள்ள ரமுனிவர் வெகுண்டு, 'வாயு மைந்த, நீ யுன் ஆற்றலை யறியாதிருக்கக் டவை; இன்று முதல் நற்செயல்களைக் கைக்கொள்ளக் கடவை' என்று, சால்ல, வீரனான அனுமானும் அன்று முதல் தீச்செயல்களை விட்டான்; ன், வாலி துரத்த ஓடிய சுக்கிரீவன், 'நீ எனக்குத் துணையாக வேண்டு' மனை அதற்கு உடன்பட்டிருந்தான்; கதிரவன் தேரின் முன் நின்று ாலையுங் கால்களையும் ஒடுக்கி வாய் புதைத்துப் பின்னல் ஓடிக்கொண்டே ியாகரணமென்னும் நற்கலையை உரையோடு கற்றுக் கொண்டான்; ◌ந்து அனுமன் வரலாறு" என்று அகத்திய முனிவர் சொல்லக் கேட் ருளிய பெருமாளே; நீ அமுதம் பகிர்ந்தளித்த போது இராகு வென் ும் ஒரு பாம்பின் தலையைச் சட்டுவத்தால் அறுத்தனை; காளிங்கனென் ும் ஒரு பாம்பின் உச்சியில் ஆடினை; மாடு மேய்த்தபோது பாம்பாக ந்த அசுரன் வாயைப் பிளந்து இடையரைப் பிழைப்பித்தனை; ஆதி சடனென்னும் பாம்பைப் படுக்கையாகக் கொண்டு அதன்மேல் பள்ளி காண்டனை; வாசுகியென்னும் பாம்பை அமுதம் கடைதற்காக மந்தர லையில் சுற்றினை; அருச்சுனனைக் கொல்வதற்காகக் கன்னன் கையி ிருந்த பாம்பு குறிதவறிப் போகுமாறு அருச்சுனன் தேரைத் தரையில் ழுத்தினை; இங்ஙனமாக, ஊர்வனவாகிய பாம்புகளின் இனத்தில் இத் னை மாயம் செய்யும் நின் இயல்புகளை நன்கு தெரிந்து கொண்டு, ாடோறும் நின்னைப் பாடி நின்னை அருச்சித்த திருத்துழாயை என் தலை ிலே முடித்து நின் திருவிளையாடல்களை அறியும் என் நல்லறிவின் இயற்கையை நினைத்து, நின் திருவடிகள் இரண்டையும் என் உச்சியில் வைப்பது இனி என்நாளோ? இன்றே அருளல் வேண்டும்.

பிறர் புகழ்ந்து கூறினாலன்றி அனுமானுக்குத் தன் ஆற்றல் தெரியா திருக்க வேண்டும் எனவும் முனிவர்கள் சொன்னார்கள்.

தனத்தனன தான தனன
தனத்தனன தான தனன
தனத்தனன தான தனன தனதான

348. நெருக்குலக மீது பிரம
சிருட்டிவகை யீது பிறவி
நிரைத்தவுயி ரீது மரண வகையீது
நிறுத்தநர கீது சுவவு
சுவர்க்கபத மீது சுருதி
நிலைப்பொருள்க ளீது நமது வடிவிதென்

முருக்கமொடு கூறி முழுதும்
அருச்சுனன்வி டாது தெளிய
உணர்த்திய து போல வெனது உயிர்காண

உளக்கணடி யூடு தெரிய
அனைத்தும்வெளி யாக வுதவி
உனக்கடிமை யாக வருள்செய் திடுவாயே.

அரக்கர்வர லாறு மனுமன்
மிடுக்குளதி யாவு முரைசெய்
அகத்தியர்மு னோர்க ளகல விடைபாலி

நடுத்தொரு போது சனகன்
வரத்தொழுது மீள வவனும்
அருத்தியொடு வாய்மை மருவ அதுபார

குரக்கரசு வாயு குமரன்
அரக்கர்பதி யேக விடைகள்
கொடுத்தருளி ராச நெறியில் உறைநாளி

குருத்தகுவி மான ரதமும்
உரைப்படிகு பேர னருகு
குறிப்பினுட னேக வருள்செய் பெருமாளே

உரை :—அரக்கர் தம் வரலாறும் அனுமானது வீரம் முற்றிய செய்தி களும் சொல்லிய அகத்திய முனிவர் முதலிய முனிவர்கள் அனைவரும் தத்தம் இருப்பிடங்கட்குப் போக விடையளித்து நீ இருக்கும் போழ்து சனக மன்னன் வர, நீ எதிர் கொண்டழைத்து வணங்கி இருக்கச் செய்ய அம் மன்னனும் காட்டிற்கு நீ சென்று மீண்ட வரலாறுகளைக் கேட்க அவை முழுதையும் நீ யுரைக்க அவற்றைக் கேட்டுச் சனகன் மகிழ்ந்திரு கையில் குரக்கரசான சுக்கிரீவனும் வாயு மைந்தனான அனுமானும், அர கர்கோனாகிய வீடணனும் தங்கள் நகருக்குப் போக விடையீந்து, அர நீதியை மேற் கொண்டு வாழும் நாளில், ஒரு நாள் விண்ணில் உனக்கு ஓரோசை கேட்டது; அஃது யாதெனில், "இறைவரே, நான் புட்பக விம னம்; குபேரனிடமிருந்து இராவணன் என்னைப் பறித்த நாளில், அவனை கொல்லும் உமக்காக நான் பயன்பட வேண்டுமென்று குபேரன் சொன் னான்; அதன்படியே நான் இங்கு வந்தேன்; இனி நீர் நினைத்த போது வருவேன்; இப்போது குபேரனிடம் செல்கின்றேன்" என்பது. சிறந் திறத்தால் தகுதியுள்ள புட்பக விமானத்தை அது சொல்லிய குறிப்பின்

டியே 'குபேரன்பாற் செல்க' வென்றருளிய பெருமானே ; எல்லா
-யிர்களும் நெருங்கியுள்ள உலகம் இது என்றும், பிரமத்தின் படைப்பு
முறை இது என்றும், வரிசை வரிசையாகப் பிறந்த உயிர்கள் இவை
என்றும், இறப்பது இவ்விதம் என்றும், இன்ன பாவத்திற்குரியது இது
வென்று நிறுத்திய நரகம் இது வென்றும், இந்தப் புண்ணியத்திற்குரிய
போகம் இது வென்றும், மறைகள் நினைக்கும் பொருள் இது வென்றும்,
மது வடிவிது என்றும் பேரருளோடு எல்லாவற்றையுங் கூறி அருச்சு
னன் மயங்கி விடாமல் நன்கு தெளியுமாறு விளக்கியது போல அடியேன்
கண்களூடே காணுமாறு தாங்கள் எழுந்தருளி என் உள்ளமாகிய கண்ணின்
வெருக்குள் நன்றாகத் தெளியும் வண்ணம் அருள் செய்து, நின் அடியவ
ஞன என்னை அடிமையாக ஏற்றுக் கொண்டு அருள்வாயாக.

தானதன தத்த தானதன
தானதன தத்த தானதன
தானதன தத்த தானதன தனதான

349. நாயகமெ ருத்தன் மூலமுதல்
பேரொளிசு டர்ப்ர காசவெளி
ஞானநிலை யெட்டொ ணுவடிவ நிறைகோல

ஞானமறி வற்ற தோர்பிரமம்
ஆருயிர்ம றப்ப டாததுமெய்
நானெனது மற்ற ஏகநின ததிரூபம்

ஆயதுமி ருக்க மூவுருவின்
நீடுலகி யற்றி நாளும்வினை
யாடுவைபு னைப்ப ராவலினி வசமாமோ

ஆதரவு பற்றி நானுமொரு
நேரிது திக்கி றேனடிமை
ஆமெனநி னைப்பை யோகருணை அறியேனே

நீயினிய ளித்த பாரின்மிசை
நோயுமிலை யத்தி ராதிகளின்
நீடுமர ணப்ர மாதமிலை முதியோரும்

நீலநமன் வெற்றி காணலிலை
ஆயசிறு மக்கள் சாவுமிலை
நேரில்புவி யொப்ப தாய்மருவும் மிதமாயே

வாயுதுறும் மிக்க தோமலடு
பேடிவித வைப்பெ ணுமமிலை
வாரமக ளைப்பெ றூர்மகன்முன் நினையேபோல்

வாழரசு முற்செய் தாருமிலை
காணெனவு ரைத்து நீள்பரதன்
வாழியெனும் வித்த காபெரிய பெருமாளே.

உரை :—விண்ணிலெழுந்த ஓசை கேட்டுப் பரதன் சொல்வது :

" நீவிர் காக்கும் உலகில் நோயும் வருத்தமும் இல்லை ; படைக் கலங்கள் முதலியவற்றால் உளதாகும் பெரிய இறத்தலென்னும் மூாண்பாடில்லை ; முதிர்ந்த கிழவரும் கரிய எமனது வெற்றியைக் காணவில்லை ; (கிழவரும் இறத்தல் இல்லை) இளஞ் சிறு மக்கள் இறப்பதில்லை ; ஒப்பற்ற உலகம் ஒப்புரவின்கண் வாழ்ந்து வருகின்றது : எல்லா உயிர்கட்கும் இன்பமாக இருக்குமாறு காற்றும் வீசும் ; மிக்க குற்றம், மலடு, பேடு, விதவைப் பெண் என்னும் பேர்களே இந் நாட்டில் இல்லை ; (குற்றமாவது உறுப்புக் குறை, நலமில்லா உடல், பாவச் செயல் ஆகியவை) அழகிய பிள்ளைகளைப் பெற்ற பின்னரே தாய்மார் பெண்களைப் பெறுவர் ; இவ்வாறிருத்தலினால், வாழ்வுடைய நாட்டை முன் ஆண்டவர்களுள் நும் முன்னோரில் நும்மைப்போல் சிறந்தவர் எவருமிலர் ; காண்பீராக " என்று (நீண்ட புகழுள்ள பாதன் வாழ்கவென) பரவிய திறமையுள்ளவனே ; எல்லோருக்கும் மேலான பெருமாளே ; தலைவன் ஒருவனே ; இருவர் அல்லர் ; அவன் எல்லாம் உண்டாவதற்குக் காரணமாகிய வேருக்கு முதலாயுள்ளவன் ; அவனுடைய பேரொளி, சோதி வடிவான நிறமற்ற ஆகாய வெளியாகும் ; அது ஞான நிலையாலும் எட்டப்படாத வுருவம் ; அது, நிறைந்த இன்ப வடிவான ஞானம் ; அறிவதற் கியலாத ஒப்பற்ற பிரமம் ; அது தங்கிய உயிர்களால் குற்றம் அடையப்படாதது ; உடலும் நானென்னும் அகங்காரமும், எனது என்னும் உரிமையும் அற்ற ஒரு பொருளாயுளது; இது நினது வியக்கத்தகு வடிவம்; இவ்வாறான தன்மையிருக்கவும், நான்முகன், திருமால், உருத்திரன் என்னும் பதவிகளோடு நீண்ட உலகில் முத்தொழிலையும் நடப்பித்து நீ என்றும் விளையாடுவை ; இத்தகைய நின்னைப் போற்றி செய்யின் நின் புகழ் என் வயத்தில் அகப்படுமோ ? அகப்படாது ; ஆயினும், மாமுனிவர்கள் முதலிய சான்றவர் நின் திருவிளையாடல்களைப் புராணங்களாக்கிப் போற்றிய ஆதரவை நான் பெற்று, அம் முறையைக் கடைப்பிடித்து, அதனினும் வேறு வழியில்லாமையால், அதைத் தானும் சொல்லுவது எப்படி யென்று நாணி, ஒருவாறு உடன்பட்டு இத் திருவிளையாடலைச் சந்த விருத்தமாகப் போற்றி செய்

கின்றேன்; நானும் நின் அடிமை யென்று நினைப்பாயோ? அடிமை யல்லன் என்று புறக்கணிப்பாயோ? நின் திருவருளை அறியேன்.

தான தான தனன தத்த
தான தான தனன தத்த
தான தான தனன தத்த தனதான

350. ஓடி யோடி யுடலி ளைக்கும்
நாடி நாடி நினைவு பற்றும்
ஓதி யோதி நனிச லிக்கும் அழும்விழும்
ஊடி யூடி யுணவை விட்டு
மோக மீது துயின்ம றக்கும்
ஊறும் நேய மொருவ ருக்கும் உரையாது
வாடி வாடி மறுகு மிக்க
கோயில் கோயி லெனவு ரைக்கும்
மாத வாய வெனவ ழைக்கும் அரிராமா
வாழி வாழி யெனவி சைக்கும்
நீடு காதல் மகளி ரொத்து
மாளி ஞேடென் மனமு ழப்ப துணாரோ
நாடு வாழ வரச ளித்து
வாழு நாளி லொருபொ ழிற்குள்
நாளு மேவி மிதிலை யிற்பெண் அவளோடு
நாடி நீர்கள் முழுகி மிக்க
மாலை சூடி மனையி லுற்று
நாணி லாத மதன சித்ர அனுராகம்
ஈடு லாவு கலவி முற்றி
மாது சீதை நகில்க னப்ப
ஈறில் மேனி யதுவி ளர்ப்ப வயிறாடே
ஏடு லாவு புனித கர்ப்ப
மான போது மகிழ்வு பற்றி
ஏது வேணு மெனவு ரைத்த பெருமாளே.

உரை:—பரதன் சொன்னது போல் நாடு வாழும் வண்ணம் அரசாண்டு வாழ்கின்ற நாளில், ஒப்பற்ற சோலைக்குள் நாள்தோறும் சென்று

மிதிலை நகரத்துப் பெண்ணாகிய சீதாபிராட்டியாரோடு புகழ் பெற்ற நீர்களில் மகிழ்ந்து மூழ்கி விளையாடியும், மணம் மிக்க பூ மாலைகளைச் சூடியும், தகுதியுள்ள மனையின்கண் வந்து நாணமில்லாத காமத்தினாலுண்டாகிய அழகோடு ஒருவர்க்கொருவர் தொடர்ந்துவரும் விருப்பத்தால் ஒப்பவிருந்து குலவிய கலவிக் கூட்டுறவு முற்றியும், அதனால் பிராட்டியாரின் நகில்கள் பூரித்துப் பருக்கவும், வருத்தமற்ற திருமேனி வெளுக்கவும், திருவயிற்றில் அழகு மிக்க தூய்மையான கரு உண்டானபோது மகிழ்ந்து 'உனக்கு வேண்டுவது யாது?' எனக் கேட்டருளிய பெருமாளே; காமங் கொண்ட பெண்ணின் இயல்பு: களவிற் கூடிப் பிரிந்த தலைவன் எங்குளனோ? என்று எங்கும் ஓடியோடி உடல் மெலிவாள்; பிறரைக் கேட்டுத் தேடித் தேடி அந் நினைவிலேயே பற்றுக்கொள்வாள்; அவன் புகழைச் சொல்லிச் சொல்லிக் கூப்பிட்டு மிகவும் சலிப்பாள்; அழுவாள்; விழுவாள்; இங்ஙனம் விட்டுப் போகலாமோ? என்று பிணங்கிப் பிணங்கி உணவை விட்டொழிப்பாள்; மயக்கத்தால் முன் நிகழ்த்திய கலவி முறைகளை நினைத்து நினைத்துத் தூக்கத்தை மறப்பாள்; மனத்தில் ஊறிவரும் நட்பை நாணத்தால் ஒருவருக்கும் சொல்லாமல் மனம் வாடி வாடிக் கொதித்து மயங்குவாள்; எல்லா வுலகங்களிலும் பெருமை மிக்க திருவரங்கம் திருவரங்கமென்று தலைவன் ஊரின் பேரைச் சொல்லுவாள்; 'ஸ்ரீமாதவாய' வென்று கூப்பிடுவாள்; 'அரிராமா, வாழ்க வாழ்க' என்று தெய்வத்தைப் பராவுதல் போல் தன் தலைவன் பேரைச் சொல்லுவாள்; இவ்வாறு தாயரையும் தோழியரையும் தெளிய அறியாது தலைவனுடன் ஒரு தடவை கூடிப் பிரிந்து மீண்டும் அவன் வருமுன்னரே விரகம் பொறுமல் ஓடியும் தேடியும், அழுதும் விழுந்தும் பிணங்கியும் உணவு உறக்கங்களை மறந்தும், நெஞ்சு மயங்கியும் வருந்தும் போது, தாயரும் தோழியரும் பூ மெத்தையிற் கிடத்திச் சந்தனம் அப்பியும், விசிறியும் செய்த இன்செயல்க ளெல்லாம், வெப்பத்தால் தீய்ந்து போகவே தன் மெய்யை மறந்திருக்கையில் தாயரும் தோழியரும் அந்நோய் நீங்குவதற்காகப் பலிகள் செய்ய ஆலத்தி சுற்றிக் கண்ணெச்சில் கழிக்கவும், தான் தன்னை அறியாமலும், வாய்விட்டுச் சொன்னால் தன் களவு வெளிப்படு மென்று தெரியாமலும் தலைவன் ஊரைச் சொல்லியும், பேரைச் சொல்லியும் புலம்ப, அவர்கள் அதன் காரணத்தைக் கேட்பாராயின் கடவுளைப் புகழ்ந்தேனென்று மறைத்தும் பெருங் காதல் கொண்டுள்ள பெண் வருந்துவாள். அவளைப் போல் அடியேனும் வீடுபேற்றினை அருள்வது எம்மதத்துக் கடவுளோ? அடையும் முறைகள் எவையோ? என்று அப் பெயர்களை ஓதி ஓதி மிகச் சலித்தும் பிறவி ஒழியப் பெற்றேனல்லன். இதற்கு யாது செய்வதென்று ஒன்றுந் தோன்றாமல் மெய் மறந்து நிற்பேன்; ஒன்றாலும் ஒரு பயனுமில்லை யென்று அனைத்தையும் வெறுத்து

வெறுத்து உணவை யொழித்து விடுவேன் ; வீடுபெற வேண்டு மென்னும் காதலால் தூக்கத்தை மறப்பேன் ; நின் திருவடியே வீடுபேறு என்று உறுதிப்படுத்தி அதனால் தோன்றிய அன்பினை எவர்க்கும் உரையாமல், அதைப் பெறும் வழி யாதென்று கருதி மனம் வாடி வாடி மயங்குவேன் ; பிறிதொன்றும் தெரியாமையால் பெருமை மிக்க திருவரங்கம் திருவரங்க மென்று சொல்லுவேன் ; பின்னையும், மாதவாய, அரி, ராமா, வாழ்க வாழ்க வென்று புகழ்ந்து பாடுவேன் ; இவ்வாறு தீராக் காமமுடைய பெண்களைப் போல் மயங்கி அறிவு நிலை கெட்டு நிற்கும் அடியேனுடைய தன்மைகள் தேவரீருடைய திருவுள்ளத்துக்கு நன்கு தெரியாவோ ?

(இப் பாட்டில், தலைவனைப் பிரிந்த பெண்களின் தன்மையை அடியவர் தன்மைகளாக விரித்துப் பொருத்தமுறக் கூறப்பட்டுள்ள முறை அறிந்து போற்றற்குரியது.)

தானன தான தான தான
தானன தான தான தான
தானன தான தான தான தனதான

351. போதுவை போவை மீள்வை சேர்வை
லோசன மீது காண நோவை
பூரண ஞானம் யாவு மாகி மனமீதே
போதவு லாவி வாழ்வை சூழ்வை
நீர்வெளி யாவை ரூப மாவை
பூசிய வாசம் வீச நேய உறவாகி
ஆதர வாகி நீல மேக
மேனிய தாகி நீடு சேர்பொன்
ஆடைய தாகி மார்பு மாதும் உளனாகி
ஆர்வளை யாழி பாணி யாகி
மாமுடி சூடி யூர வேலெகா
டாளுவை பாலி வேறு போக வசமாமோ
மாதவர் காடு மேவி நீடு
தோழிய ரோடு கூடி யாடி
மானவ மீள வேணும் வாழி எனவோதும்
மாமல ரானை நீடு சேடர்
தேர்மிசை போக வேவி ஞான
வான்மிகர் சாலை யூடு தேவி தனியாகத்

தூதர்க ளோது சேதி நீதி
பேணிவி டாது மூவ ரோடு
தூய்திரு தேசன் ஆடல் மேவு நிமிராசன்
சூழ்கதை கூறி ஞால மேழும்
மாமனு நூலி ஞனி ராம
தோல்வியி லாத கோயில் மேவு பெருமாளே.

உரை :—‘ என்ன வேண்டு ’மென்று நீ, பிராட்டியைக் கேட்டதற்கு, “ நான் பெருந் தவஞ் செய்யும் முனிவர்கள் வாழ்கின்ற காட்டுக்குப்போய், அங்கு மிகுதியாயுள்ள முனிவர் மனைவியரான தோழியரோடு கூடி விளையாடித் திரும்பிவர வேண்டும் ” என்று சொல்லிய அம் மலர்மகளை ‘ அங்ஙனமே செல்க ’ வென்று சொல்லி, அவையில் வந்திருந்த தூதுவர்களைப் பார்த்து, உலக நீதியைக் கேட்டறியும் போது, ஒருவன், தீச் சொற்களைச் சொல்ல, பெருமையுள்ள இலக்குவனையும் சுமந்திரனையுங் கூட்டிப் பிராட்டியாரைத் தேரேற்றி அனுப்ப அப்போது அம் மூவரும் காட்டிற்குச் சென்ற பின், பிராட்டியாரை மட்டும் அவ் விருவரும் காட்டில் விட்டு வரும்போது, “ அன்னையே, உலகினர் கூறும் பழி மொழிக்காக, நம் தலைவர் நின்னைக் காட்டில் விட்டுவரச் சொன்னா ”ரென்று இளைய பெருமாள் சொல்லி மீண்ட பின், பிராட்டியின் குரல் ஓசையை அறிந்த ஞானமுள்ள வான்மீகி முனிவர் வந்து அவரை அழைத்துப் போக, அம் மாமுனிவரது பன்ன சாலைக்குள் பிராட்டி மட்டும், அம் முனிவரது மனைவியரோடு கூடிக் கவலையின்றி யிருந்தார். இஃதிவ்வாறிருக்க அயோத்தியில் தூதுவர்கள் சொல்லிய அதனை உலக நீதியை விடாமல் உடன்பட்டுத் தம்பியர் மூவருடைய கவலை தீருமாறு அவர்களோடு உலகத்தினர் கூறும் நீதியை உடன்படாத முன்னைய அரசர்களின் கதையைக் கீழ்க் கண்டவாறு சொல்லினை :

“ ஒரு நாளைக்குக் கோடி பசுக்களைத் தானம் செய்து தூயனாய் இருந்த நிருதன் என்னும் அரசன், ஒருநாள் மறைவன் ஒருவனுக் களித்த பசு அடங்காமல் தப்பி ஓடிவந்து அரசனுடைய பசுக் கூட்டங்களில் சேர்ந்து நிற்க, அதனை யறியாத தன்மையால் மறு நாளில் அப் பசுவையே மற்றொரு மறையவனுக் களித்துவிட, அம் மறையவன் அதனை ஓட்டிக் கொண்டு போம் போது முன்னைய நாளில் தானமாகப் பெற்றுச் சென்ற அம் மறையவன் அதனைத் தேடிக் கொண்டு வந்து, ‘ இஃது என் பசு ’ என்று சொல்ல அன்று வாங்கினவன் தன் பசு வென்ன, இருவரும் மாறுபட்டு அரசனிடம் வந்து தங்கள் வழக்கைக் கூறினார்கள் ; அரசன் அதனைக் கேளாமையால் அவ் விருவரும் அப் பசுவை வேறொருவனுக்குத்

தானம் செய்தனர்; அரசனையும் பச்சோந்தியாமாறு சபித்தனர்; அதனை யறிந்த அரசன் நடுங்கி, அம் மறையவர்களிடம் சாப விடை கேட்க, அவர்கள், இனி, 'மேல் வரும் துவாபர யுகத்தில் பரவாசுதேவர் திருவவதாரம் செய்வர்: அவரால் சாபம் தீர்க்கப் பெறுவாய்' என்று சொல்லிப் போயினர்; உலக நீதியை ஆராயாமையால் அவ் வரசனுக்குச் சாபம் கிடைத்தது" என்று சொல்லி, மற்றொரு கதையும் கூறினை; அது வருமாறு: மிக்க வலிமையுள்ள நிமி யென்னும் பேரரசன் ஒருவன், ஒரு நாள் வசிட்டரைப் பார்த்து, 'நான் ஐயாயிரம் ஆண்டுகள் வேள்வி செய்தல் வேண்டு'மென்ன, வசிட்டர், நேற்று இந்திரன் வந்து 'ஆயிரம் ஆண்டுகள் வேள்வி செய்விக்க வேண்டும்' என்றான்; நான் அதற்கு உடன்பட்டமையால் அவ் வேள்வியை முடித்த பின் நின் வேள்வியைத் தொடங்குவேன்' என்ன, அரசன் வாளாவிருந்தான்; வசிட்ட முனிவரும் அமராவதிக்குப் போனார்; அப்பொழுது நிமி(ச்சக்ரவர்த்தியும்) யரசனும் உடல் நிலையற்றதென் றுணர்ந்து, கௌதமரை வைத்துக் கொண்டு வேள்வி புரிகையில், ஆயிரம் ஆண்டுகள் கழிந்த பின் வசிட்டர் வந்து நிகழ்ந்தவற்றைக் கேள்விப்பட்டு, வேள்விச் சாலைக்குப் போய்க் காவலர்களிடம் தன் வருகையைச் சொல்லியனுப்ப, அவர்கள் உள்ளே சென்று, வேள்வி செய்த களைப்பால் அரசன் தூங்குவது கண்டு இது தக்க சமயமன்றென வுணர்ந்து வசிட்டரிடம் கூற, அவர் வெகுண்டு, 'நம்மை விட்டொழித்து இவ்வரசன் வேள்வி புரிவதேயன்றி இது காண்பதற்குச் சமயமன்றெனக் கூறலாமா?' என்று நினைத்துச் சினந்தோடிருந்ததால், 'அவ்வரசன் உடலினின்றும் உயிர் வெளியே வருவதாகுக' என்று கடுமையாகச் சபித்தனர்; இதை யறிந்த வாயிற் காவலன், அஞ்சி ஓடிச் சென்று அரசனை எழுப்பி நிகழ்ந்தவற்றை அறிவிக்க, அரசனும் வெகுண்டு, தன்பால் குற்றம் ஒன்றும் இல்லாதிருக்கவும் வசிட்டர் ஆராயாமல் சபித்தது முறையன்று; ஆதலின், அச் சாபம் அவருக்கும் ஆகுக வென்று சபிக்க இருவரும் இறந்தனர். வசிட்டர் உயிர் பிரமன் சபைக்குப் போக அவனுடைய கட்டளையினால், மீண்டு பாதலத்திலுள்ள வருணனுலகில் அவர் திரியும் போது, இந்திரனுக்காக அங்கு வந்த ஊர்வசியைக் காமுற்று ஒரு கமண்டலத்தில் வருணன் சுக்கிலத்தை விட்ட பின் அக் கமண்டலத்தில் அகத்தியரும் வசிட்டரும் பிறந்தனர்; நிமியரசனுடைய உடலைத் தொடாமல் வேள்வியை மற்றைய நாலாயிரம் ஆண்டுகளும் கௌதமர் நிறைவேற்ற, விண்ணவர்கள் வந்து நிமியை எழுப்பி அவன் வேண்டு கோளின்படி கண்படைத்த உயிர்களின் கண்களில் இமையாக நின்று மூடவும் திறக்கவும் கூடும் செயலைப் பெற்று அழிவின்றி யிருக்குமாறு அவனுக்கு வரமீந்து போயினர்; என்பது.

இங்ஙனம் உலக நீதியை ஆராயாது விட்டால் பெருந் தீங்கு வருமென்று சில கதைகளையும் கூறி எழுலகங்களையும் மனு நூலிற் கூறிய முறையில் ஆண்டுவந்த இராமா ; எங்கு முள்ள திருப்பதிகட்குந் தோற்காத வெற்றியுடைய திருவரங்கத்தில் மேவிய பெருமாளே ; அடியேனை எங்குங் கொண்டுபோகுவை ; தனியேயும் போகுவை ; திரும்புவை : என்னுடன் வருகுவை ; கண்ணிற் காண உடன்பட்டு வெளிப்பட்டு நிற்பை ; குறைவின்றி நிறைந்த (பரிபூரணமான) ஞானமெல்லா மாகி உள்ளத்தின் மேல் மிக உலாவி மகிழ்ச்சியோ டிருப்பை ; சுற்றுவை ; இயற்கைத் தன்மை வெளியாகாவாறு உருவற்றிருப்பை ; பூசிய நறுமணப் பொருள்கள் கமழ அருளுடைய உறவாகி, ஆதரவுமாகி, நீல முகில் போன்ற திருவுருவாகி, நீண்ட பொன்னுடை யுடையையாகி, திருமார்பும் அதிற் பெரிய பிராட்டியாரு முடையையாகி, அமர்ந்த சங்கு சக்கரங்கள் உள்ள கையையாகி, பெரிய முடிசூடி, நகை முகங்கொண்டு ஆளுவை ; இவ்வாறெல்லாம் நீ புரிவதனாலே, பாவியாகிய நான் இக் கூத்தாட்டை விட்டு வேறுசெல்லுதலை நினைத்தால் அஃது என் வயத்தில் உளதாகுமோ ? ஆகாது ; யாவும் உன் வசமே யாம்.

'நீர் வெளியாவை' என்பதற்கு இயற்கை வெளியாகுவை என்றும் பொருள். நீர் - நீர்மை.

தானன தான தனன தான
தானன தான தனன தான
தானன தான தனன தான தனதான

352. தோடேறி நாறு துளப தாம
மாரூப மார்ப சதுர மான
தோளார மான மகுட தாரை வளையாழி
தோலாத நீடு கதைவி டாத
மாகோல கால கனக வாடை
சூழ்பாக வான நதிவி லாச விழியாள
கோடேத மான கிரிப பார்கொள்
வாரீச நாபி யுடைய மேன்மை
கூர்மேக ரூப வடிவை நாடி இருபோதும்
கோனாது பாடி யுருகி யாடி
வீணாள்கொ டாது பயிலு மாறு
கோளாறு கூடு மினிய ஞானம் அருள்வாயே

நாடோறு நாடி முறைசெ யாது
கேடான ராசர் கதைகள் கூறி
நாடாளு நாளின் மதுகு மார லவணேசன்
நாலாற தான கிரிபர் தாய்பின்
ஆளுள்பி ராண னனைய சூனு
நாணாத வூண ருதவு சூலம் உடையோனால்
ஈடேறு வேள்வி குலைய வாடி
யூடேத லாடி வெருவி நீடும்
யாகாதி யோக மழிவு றாதுன் அருள்வேணும்
ஈசாவெ னாநன் முனிவர் கூற
மாசேட னார்பி னவனை யேவும்
இராமாபி ராம பரவு தேவர் பெருமாளே.

உரை:—நாடோறும் ஆராய்ந்து அரச நீதியை முறைப்படி செய்யாது கெட்ட அரசர்கள் கதையைக் கூறி நீ நாட்டை ஆளும் காலத்தில், ஒரு நாள் முனிவர் பலர்வந்து நின்னோடு பேசிக்கொண் டிருக்கையில் முனிவர்களுள் ஒருவர், " அரசர்பிரானே, மதுவின் மைந்தனும் இலவண னென்னும் பெயருடைய அசுரனும், அரக்கனாய், நான்கும் ஆறும் கூடிய கழுத்துடையவன் என்று சொல்லப்பட்ட தசக்ரீவனான இராவணனுடைய தாயாகிய கைகசியின் தங்கை கும்பிநசியின் உயிர்போன்ற மகனும், நாண மற்ற உணவாகிய பிச்சையை வாங்கி உண்ணும் சிவபெருமான் கொடுத்த சூலத்தை யுடையவனும் ஆகிய அவன், நாங்கள் முடிக்கும் வேள்விகள் அழியுமாறு திரிந்து கெடுக்கின்றான்; அதனால் உள்ளே வாட்டம்கொண்டு தள்ளாடி இங்கு வெருண்டு வந்தோம்; மற்றையோரும் அவன் துன்பம் பொறாது வந்தார்கள்; பரந்த வேள்வி முதலிய ஓமங்கள் அழியாமல் நிறைவேற நின் அருள் வேண்டும்" என்று கூற, மற்றைய நன்முனிவர்களும் அங்ஙனமே புகல, பெருமை மிக்க திருவனந்தாழ்வானான இளைய பெருமாளின் தம்பியாகிய சத்துருக்கினனை முனிவர்கட்குத் துணையாக அனுப்பிய இராமா, 'அழகிய இராமா' வென்று விண்ணவர் பரவுகின்ற பெருமாளே; இதழ்கள் அடுக்காக ஏறி மணம் வீசும் திருத்துழாய் மாலையும், பெரிய பிராட்டியாரின் வடிவமான திருமார்பும், சதுரமான நான்கு திருத்தோள்களும், முத்துப்போன்ற பற்களும், ஒழுங்கான மணிமுடியும், சங்கு, சக்கரம், தோல்வியுறாத தண்டு முதலிய படைகளை விடாத மிக விரைந்த தன்மையுடைய திருக்கைகளும், பொன்னாடை சூழ்ந்த திருவரையும், வானாற்றையுடைய திருத்தாளும், பரந்த திருக்கண்களும், சங்கினும் சிறப்புள்ள திருக்கழுத்தும், நிலவுலகை இடமாகக் கொண்ட தாமரை மலராகிய

திருவுந்தியும் ஆகிய இவற்றைப் பெற்றுள்ள மேன்மை மிக்க நீருண்ட முகிலை யொத்த நினது திருவுருத்தை இன்பக்காலத்தும் துன்பக்காலத் தும் மனங்கோணுது பாடிக் கல்மனம் உருகி, மகிழ்ச்சியால் ஆடி, வீணில் என் வாணுள் கழியாமல், இதுவே செயலாகப் பழகும் நற்குணமும் நன் னெறியும் கூடிய இன்ப நலமான மெய்யறிவை அடியேற்கு அறிவுறுத் துவாய். (49)

'தாரை' என்பது ஆகுபெயர்.

தாஞன தத்த தத்தன தனதன
தாஞன தத்த தத்தன தனதன
தாஞன தத்த தத்தன தனதன தனதான

353. ஏருன சொற்கள் சொற்றிட லயலவர்
கூருன வற்றை நத்துதல் நிலையற
வீருகை யுற்று மட்குதல் கயவரொ டுறவாடல்
ஏலாவ வற்றி னுற்றிட லவையிடை
தோலாவ ழுக்கி னைக்கெட முடுகுதல்
யாரோடும் வெட்டை தட்டிய வகைசெயல் மனமீரம்
ஊருதி ருத்தல் பொற்றொடி மகளிர்சொல்
மீளாந டத்தல் நட்பிடை பிழைசெய்தல்
ஓடாதொ ளித்தல் கைக்குள திலையெனல் உனைநாளும்
ஓதாது நிற்ற வித்திற முளவனென்
மேலேழ்பி றப்பு மற்றிட வெகுவித
லோகாயு தத்தை விட்டிட வுயர்வரம் அருள்வாயே
மாருது மிக்க பத்தியின் விடைகொடு
நீள்யோச லத்தை விட்டுயர் பகிரதி
வானீர்கு ளித்து மக்களை மருவினன் கெடிதேகி
வான்மீகி மெய்த்த வப்பளி யதனிடை
சீதேவி பெற்ற வுத்தம குசலவர்
மாரூப லட்ச ணத்தையு மிரவிடை நனிகேளா
வேருன மைக்கு வெட்கினன் யமுனையின்
நாளேழி னுற்று நற்றவர் கதைசொல
மோனுள்ம னுக்கு லத்திறை மகபதி தனைமோதும்

மேலோனை திர்த்து முட்டிய லவணனை
சூலாயு தத்தி விற்றது தெளிவுறு
வீருன சத்து ருக்கினன் முதலவ பெருமாளே.

உரை :—தவருமல் மிக்க அன்பினேடு சத்துருக்கினன், வணங்கி விடை பெற்றுக்கொண்டு நீண்ட கோசல நாட்டைக் கடந்து, எல்லா நீர்களுள்ளும் உயர்ந்த கங்கையை அடைந்து, மறுநாள் அத் தூய நீரில் மூழ்கிக் கரையேறித் தென்பால் நெடுந்தொலை சென்று அன்றிரவு வான்மீக மாமுனிவருடைய - உண்மைத் தவம் செய்யப் பெற்ற - ஆச்சிரமத்திற்கு அண்மையில் இறங்கி, அங்குச் சீதாபிராட்டியார் பெற்ற சிறந்த குசன், இலவன் என்னும் பெயருடைய இரு பிள்ளைகளின் பெருமைவாய்ந்த வடிவழகை, அன்றிரவே மிகவும் கேள்வியுற்றுப் பல தானங்களைச் செய்து, அங்கே அப்பிள்ளைகளைப் பார்க்கப் போகாமல் வேறுபட் டிருப்பதற்காக நாணி, மூன்றும் நாள் புறப்பட்டு நடந்து யமுனை யாற்றங்கரையின் அருகில் ஏழாம் நாளிற் சென்று, அங்குள்ள சிறந்த முனிவர்கள் கதைகள் சொல்ல, அவற்றால், முற்காலத்தில் மனு மரபிற்றேன்றிய அரசனுகிய மாந்தாதா வென்பவன், வேள்வித் தலைவனுகிய விண்ணவர் கோனேடு பொருது அடித்து மோதிய ஆற்றலுடையவனு யிருந்தான் என்றும், தன்னை வந்தெதிர்த்த இலவணுசுரனது சூலப்படையினுல் தன் எல்லாப் படைகளோடும் சாம்பராய் மாந்தாதா இறந்தா னென்றும், அவ்வசுரன் கோட்டைக்குள் இல்லாதபோது அக்கோட்டையை வளைத்து அவன் உள்ளே போகாதவாறு தடுத்து அவனைக் கொல்ல வேண்டுமென்றும் தெளிவாக அறியப்பெற்றுன். அம்மேன்மையுள்ள சத்துருக்கினனுக்குத் தமையனுன பெருமாளே ; மிகுதியான சொற்களைச் சொல்லுதலும், அயலவர் உடைமையைக் கவர விரும்புதலும், ஒன்றையே உறுதியாக விரும்பாமல் நிலையற்று இரு பொருள்களிடத்துப் பற்றுக்கொண்டு மழுங்குதலும், கயவரோடு உறவுகொள்ளலும், எவருக்கும் இயலாத செயல்களில் ஈடுபடுதலும், தோலாவழக்கினை அவையில் தோல்வியுறுமாறு முடிக்குதலும், எவரோடும் கொடுஞ் சொற்களைப் பேசி வெகுளி யுண்டாக்குதலும், உள்ளத்தில் அன்புதோன்றுமல் பிறர்பால் அடிமைபூண் டிருத்தலும், பொற்கடகந் தரித்த பெண்களின் சொற்கேட்டு நடத்தலும், நட்டவரிடம் தீமை செய்தலும், ஓடாமல் ஒளித்தலும், கையில் உள்ள பொருளை இல்லையென்றலும், நின்னை என்றும் பரவிப் போற்றுமல் வீணுக நிற்றலும், ஆகிய பலவகைத் தீச் செயல்களை யுடையவன் அடியேன் ; நான் இனி எடுக்கவிருக்கும் எழுவகைப் பிறப்புக்களும் அற்றுப்போகவும், உலகாயத மதத்தைக் கைவிடவும் அருள் செய்வாயாக.

'மனுக்குலத்திறையாகிய மேலோன்' என்று கூட்டுக.

உலகாயத மாவது, பெண்களின் கலவியே சுவர்க்கம், அவர்களைப் பிரிதலே நாகம் என்றும், தெய்வம் கருமம், ஆகாயம் இவை முதலாயவை இல்லை யென்றும் கூறும் மதம். (50)

தனதனத் தனத்தன தனதன
தனதனத் தனத்தன தனதன
தனத்தன தனத்தன தனதன தனதான

354. அதுவெனத் துதித்திட விதுவெனல்
உதுவெனக் கிளத்துத லிவையெனல்
அவையெனப் பயிற்றுத லுவையெனல் அவரோடே
அவனெனப் பரப்புத லிவனெனல்
உவனெனக் குயிற்றுத லிவளெனல்
அவளெனத் தெரித்திட லுவளெனல் வினைநீநான்
முதலுரைத் திடத்தகு பெயர்வகை
அடைவுறத் துதிப்பது முனதருள்
மொழியளித் திடப்பொரு ளுனதருள் அதனாலே
முறைமையைப் புலப்பட வறிவினில்
ஒருவருக் குநிச்சயம் வசமல
முழுதுமித் தலத்துனை யறிபவன் அடியேனோ
மதுநகர்ப் புறத்தினில் விரைவொடு
படையெடுத் தரக்கரும் அசுரரும்
வதைபடத் தனிச்சிலை கொடுபொரு தவனேயும்
மலைமரத் தினைப்பல பொடிசெய்து
தசரதத் தைமுற்பட முடுகியொர்
வடிசரத் தினைக்கொடு லவணனை உயிர்வாரி
எதிரறத் தனத்திரு நகரிடை
அறுவகைக் கிரட்டிநல் வருடமும்
எழில்பெறச் செலுத்திய திகிரியொ டுலகாள
இனியபொற் படைத்திர ளதனொடு
புகழ்நகர்க் குமற்றினி தணுகிய
இளையசத் துருக்கினர் பரவிய பெருமாளே.

உரை :—மதுநகர்க்கோட்டை வாயிலின் புறம் போந்து, விரைவாகப் படையெடுத்துவந்த அரக்கரும் அசுரரும் இறக்குமாறு ஒப்பற்ற வில்லைக்

காண்டு போர்புரிந்து, அந்த லவணாசுரன் ஏவிய மலைகளையும் மரங்களை ம் பற்பல பொடிகளாக்கி, தசரதமன்னனது தேரை இலவணனுக் கதிரே முடுக்கி அராவி வடித்த ஓரம்பினைச் செலுத்தி அவன் உயிரைக் வர்ந்து, அவ்வழகிய நகரில் பகைகெடுமாறு பன்னிரண்டாண்டுகள் ர்கு அழகு பெறச் செலுத்தும் ஆணைத் திகிரியோடு அரசு செலுத்திப் ன்னர் அச்சத்துருக்கினன், தனக்கு விருப்பமான பொலிவுடைய படைத் ரளோடு அந்நகரை விட்டுப் புகழ்மிக்க அயோத்தி நகர்க்குள் வந்து ஙாங்க விருந்த பெருமாளே ; வீடுபேறளிப்பது அது என்று ஒன்றைப் பாற்றுதலும், மீண்டும் இது வென்று வேறொன்றைச் சொல்லுதலும், ன்னும் இவ்விரண்டுமல்லாத உதுவென்று சொல்லுதலும், இனிச் சில றிவற்ற பொருளை இதுவென்று சொல்லுதலும், இவ்விரண்டு மல்லா தை உவன் என்றும், இவனென்றும் அவனென்றும் தெரிவித்தலும், இவ ான்றும், அவளென்றும், உவளென்றும் கூறுதலுமாக இங்ஙனம் வினை பயும் உன்னையும் என்னையும் கடந்த இலக்கணத்தை முதலாகச் சொல் ம் பெயர் வகைகளின் முறைப்படிப் போற்றி செய்தலும் உன் அருளே கும் ; இம்மூன்றின் பரப்பையும் விரிவாகச் சொல்லும் சொல்லும் லாவற்றிலுமுள்ள மிக்க பொருளும் உன் அருளேயாகும் ; இவ்வாறு ால்லும், பொருளும் எனப்படுகின்ற பொருள்கள் அளவில்லாதிருப் தும் உன் அருளே ; ஆதலின், நின் அருளே அளவிடப்படாத தென் ல் நின் இயற்கைச் சங்கற்பத்தை அறிவில் நன்றாய் உண்மையாக அறி ற்கு எத்தகையோருக்கும் இயலாது ; எனவே, நின்புகழை முற்ற வுணர்ந் ர் யாருமிலர் ; இத்தகைய நின்புகழை முற்ற வுணர்த்தினார் யாருமிலர் ; ாவே நின்னை இவ்வுலகில் அடியேனோ அறிபவன் ? இதனைத் தெளிவு த்த வேண்டின் மிக விரியும் ; அஃது, எவர் அறிவிற்கும் அடங்காது ; ரறிவு படைத்தவர்க்கே தெரியும். (51)

தனனதத்த தத்தனன
தனனதத்த தத்தனன
தனனதத்த தத்தனன தனதான

5. அரவெடுத்து வெற்றிமத
கரிமறித்து நட்டகழை
அதனிலுச்சி யிற்பவுரி நடமாடி
அலரியசத்தி னிற்கடுகு
நடைபயிற்றி மெய்க்கரணம்
அவையியற்றி யெற்றுதிரை கடலோடி

இரவுபட்ட சத்தியமும்
முழுதுரைத்து யிர்க்கிறுதி
இடரிழைத்த பத்தமுறு பொருள்தேடும்
இதய துக்கம் விட்டெனது
முழுதுமற்ற மெய்ப்பொருளை
எளிமையிற்ச கத்திடுடு தெளிவேனோ

பாவுசத்து ருக்கினனை
உடனெடுத்த ணைத்தெனது
பகையரக்க ரைப்பொருது றுயிலாதான்
பழுதவத்தி யற்றுதவி
அமைவிலைச்ச டைப்புனிதன்
படையெடுத்து டற்றவல லவனேசன்

விரவுமப்ப திக்கணுகி
அவனையுற்ற டர்த்துலகில்
வினையறுத்து விட்டனையி தமையாதோ
விரவியத்த லத்தரசு
மனுவினிற்பு ரத்தியென
விடைகொடுத்த ளித்தருள்மெய்ப் பெருமாளே.

உரை:—சத்துருக்கினன் வணங்கியவுடன் அவனை எடுத்து மார்புடன் அணைத்து, "என் பகைவராகிய அரக்கரைப் பொருதுகொன்று என் கவலையாகிய குற்றத்தைப் போக்கித் தூங்காமல் காட்டில் வாழ்ந்தவனாகிய இலக்குவன் செய்த உதவி போதாது; ஆகையால் அமைந்ததில்லை; சடையையுடைய தேவனாகிய சிவபெருமான் ஈந்த சூலப்படையைக் கொண்டு சண்டைசெய்து எவரையும் வெல்லவல்ல லவணாசுரன் இருந்த அம் மதுராபுரிக்கு நீ சென்று அவனை எதிர்த்துக் கொன்று உலகத்தாருடைய துன்பத்தைத் தீர்த்தனை; இஃதமையாதோ? தனிப்பட்ட ஒருவனுக்குச் செய்யும் உதவியினும் உலகிற்குச் செய்யும் உதவி பெரிது; ஆதலின், நீ செய்த வெற்றிச் செயலே அமையும்; இன்னும் அந்நகர்க்கு நீ போய் அங்கு மனு நூலின் முறைப்படி அரசாளுதி," என்று விடை கொடுத்தருளிய உண்மையான பெருமாளே; பொருள் தேடுவதற்காகப் பாம்பைப் பிடித்தாட்டியும் வெற்ற பொருந்திய மதயானையை அடக்கியும், நட்ட மூங்கிற் கம்பத்தி னுச்சியில் சுழன்றாடியும், குறுகிய விடத்தில் மிக விரைவாக நடை பழகியும், உடல் வணங்கக் கரணங்கள் போட்டும், ஏறி

யும் அலைகளையுடைய கடலில் ஓடியும், இரந்து கேட்டும், பொய்யும் பயனற்ற சொற்களும் சொல்லியும், உயிரைப்போக்கத் தக்க துன்பம் செய்தும் வருந்தி, நிலைத்திராது அலைகின்ற அச் செல்வத்தைத் தேடும் மனவருத்தத்தை விட்டு, எனது என்னும் சுதந்திரம் அகலப்பெற்றதும், அழிவின்றி உண்மையாக விருப்பதுமான வலிமையுள்ள ஞானமாகிய செல்வத்தை எளிதாக உலகத்தோடு கூடத் தெளிவேனோ? சொல்லுக. (52)

இப்பாட்டில் பொருளீட்டும் வழிகள் கூறப்பட்டுள்ளன.

தானன தனதன தந்த தந்த
தானன தனதன தந்த தந்த
தானன தனதன தந்த தந்த தனதான

356. கூறிய பொருளையு ணர்ந்து ணர்ந்து
சீரடி யவரொ டணைந்த ணைந்து
கோயிலின் மருவியு றைந்து றைந்து அடிமீதே
கூடிய துளவைய ணிந்த ணிந்து
காவிரி முழுகினெ ழுந்தெ ழுந்து
கூர்புனை நிழலிலி ருந்தி ருந்து சடகோபர்
ஆரண மொழியிலி ழிந்தி ழிந்து
நாமமொ டறிகுறி கொண்டு கொண்டுள்
ஆடிய பகைதனை வென்று வென்று புலன்யாவும்
ஆசற வொருவுவ கண்டு கண்டு
நீரொடு மலர்கொடு வந்து வந்துள்
ஆதர வொடுதொழ வென்று மென்றும் அருள்வாயே
தாரணி யினிதுபு ரந்தி ருந்த
நாளினொர் மறையவ னுேந்து வந்து
சாவறு மகனையி ழந்த துன்பம் அதனாலே
சாலவு முறையிடல் கண்ட தென்கொல்
நாரத வருள்கென நின்று ணர்ந்து
சாதியின் முறைமைத விர்ந்து சம்பு உழவாளன்
பாரிய கனலிடை நின்று தன்சு
ரீரம தொடுவிணு யர்ந்த வண்டர்
பாலுற முயல்குவ னங்க வன்செய் தவம்யாவும்

பாழ்பட முடுகுதி யென்றி யம்ப
மாமறை யவனைய ணைந்தி றந்த
பாலக னுயிர்பெறு மஞ்ச லென்ற பெருமாளே.

உரை :—இங்ஙனம் உலகை இன்பமாக நீ ஆண்டுவரும் நாளில் ஒரு நாள் ஒரு மறையவன் நின்பால் வந்து உளம் நொந்து இறத்தற்குரிய காலம் பெறாத மகன் இறக்கப்பெற்று உழந்த அத் துன்பத்தால் மிகவும் முறையிடுவது கண்டு, நின் அருகிலிருந்த நாரதமாமுனிவரைப் பார்த்து, "முனிவர் பெருமானே, தந்தை யிருக்க மகன் மாண்டது என்? அதனை எனக்கு விளங்க வுரைத்தருள வேண்டும்" என்ன, நாரதர் சிறிதுநேரம் கூர்ந்தறிந்து, "உழவுத் தொழிலைச் செய்யும் வேளாளன், சம்பு வென்னும் பெயருடையவன்; தன் சாதிக்குரிய ஒழுக்கத்தை விட்டு, நன்கு பரந் தெரியும் ஐந்தீநாப்பண் நின்று, தன் உடலோடு விண்ணுலகில் இமையவர்களோடு சேர்ந்திருக்க வேண்டுமென்று விரும்பித் தவம் செய்கின்றான்; அவன் தவம் எல்லாப் பொருள்களையும் பாழாக்கி விடும்" என்றுரைத்துப்போக, அப்போது நீ அப் பெருமறையோன்பாற் சென்று, நின் மகன் உயிர் பிழைப்பான்; அஞ்சாதே" என்று சொல்லி, 'அக் குழந்தையைக் கொண்டுபோய் எண்ணெயில் இட்டுவை' என்றும் அருளிய பெருமாளே; நுண்பொருள்களைப் பல கால் தெரிந்தும் சிறந்த அடியவர்களோடு கூடிக் கூடித் திருவரங்கமான திருக்கோயிலில் சேர்ந்திருந்தும், நின் திருவடிகளின்மேல் அருச்சனை செய்யப்பட்டிருந்த திருத்துழாயைப் பன்முறை தரித்தும், திருக்காவிரி யாற்றில் பலதடவை முழுகி எழுந்தும், சிறந்த புன்னை நிழலிலிருந்து சடகோபனென்னும் பெயர்தரித்த நம்மாழ்வார் அருளிய மறைப்பொருளாகிய திருவாய்மொழியில் இறங்கியும், பெயரோடு அடையாளம் கொண்டும், ஆறு பகைகளையும் வென்றும், ஐம்பொறிகளால் வரும் ஐம்புலன்களையும் குற்றமறவிட்டும், அவை நீங்குவதைக் கண்டு கண்டு திருமஞ்சன நீருடன் பூக்களைக் கொணர்ந்துவந்து உள்ளத்தொடு பொருந்திய அறிவோடு நினக்குத் திருமஞ்சனமும் அருச்சனையும் செய்தும் வணங்க என்று அருள் செய்வாயோ? புன்னை, புனை என நின்றது விகாரம்.

தனந்த தந்தன தானன தத்தன
தனந்த தந்தன தானன தத்தன
தனந்த தந்தன தானன தத்தன தனதான

357. கரந்து கொண்டுவி டாததி யற்றியும்
இரந்து நின்றும்வி லாதன விற்றுமெய்
கடிந்து முன்பினு டாதது டுத்துமல் தலம்யாவும்

கடந்து சென்றுமு னாதுக ழிப்பவை
அயின்று மந்தணர் வாய்மை பிழைத்துமெய்
கலந்த நண்பரொ டேபகை பற்றியும் அனைதாதை

வருந்தல் கண்டுமி டாதன விட்டுமுன்
மருந்து கொண்டட லாழிக ழற்றியும்
மகிழ்ந்த பெண்டிரை வேறுப டுத்தியும் மறுதேவர்

வரம்ப ழிந்திடு மாறுநி னைத்துமுன்
அரங்க முந்திய கோயில்தி ருப்பணி
மயங்க லின்றிவி டாதுந டத்துதல் கடனேமோ

பரந்த விம்பவி மானர தத்திடை
புகுந்து வெங்குட கோடுவ டக்கது
படர்ந்து பண்பொடு கீழ்திசை யுற்றபின் நெடிதேகிப்

படர்ந்த தென்திசை யூடொரு பத்மத
டம்பு குந்தன லூடுத வத்துறை [யாரும்
பயின்ற சம்புவை வாள்கொடு வெட்டிவிண் ணவர்

இருந்த வம்புரி வோரும் மருட்சியின்
வழங்கொ ழுங்கிய பூமழை மொய்த்திட
எழுந்தி டுஞ்சதுர் வேதமு ழக்குற மனுநீதி

இலங்கி நின்றுல கேழுநி லைப்பெற
நமன்க லங்கின னுயிரொ ளித்திட
இறந்தி டுஞ்சிறு வோனையெ ழுப்பிய பெருமாளே.

உரை :—பின்னர், மிகப் பரந்துள்ள தேவவடிவமான புட்பக விமான மென்னும் தேரின் மேலேறியிருந்து கொடிய மேற்றிசையோடு வட திசைக்குப் போய், நல்லியல்போடு கீழ்த்திசையைச் சேர்ந்து நெடுந் தொலை சென்று பரந்த தென் திசைக்கண் ஒரு தாமரைக்குளத்தை அடைந்து ஐந்தீநாப்பண் தவநெறியை மேற்கொண்டிருந்த வேளாளச் சம்புவை வாளால் வெட்டித் தேவர்களும் பெருந் தவம் செய்யும் முனிவர் களும் மகிழ்ச்சியாற் பொழிந்த பூமாரி வரிசை வரிசையாக மொய்த்துக் கொள்ள, அநீதி போயினமையால் எழுகின்ற நான்மறைகளும் ஒலிக்க, மனு முறைப்படி நீதி விளங்கி நின்று எழுலகமும் நிலைபெற, அம் மறைய வன் மகனுயிரைப் பிடித்த எமன் மனங் கலங்கி அவ்வுயிரை மீண்டும் கொணர்ந்து அவ்வுடலில் விட்டுப் பிற வுயிர்களையும் காண நாணங் கொண்டு ஒளிக்க, இறந்த மகனை எழுப்பிய பெருமாளே ; ஒளித்துக்

கொண்டு விடப்படாததை விட்டும், இரந்து நின்று ஈவார் முகம் நோக்கி யிருந்தும், விற்காத பொருள்களை விற்றும், உடலை வருத்தியும், முன் பின் உடுக்காத உடைகளை யுடுத்தும், நல்ல திருப்பதிகளை யெல்லாம் கடந்து போய்ப் பாவத்தின் வழியிற் சென்றும், யாரும் உண்ணுது தள்ளிய வற்றை யுண்டும், மறையவர் சொற்களைத் தள்ளியும், உண்மையாகக் கூடிய நண்பர்களைப் பகைத்தும், தாய் தந்தையர் வருந்துவதைப் பார்த் தும் அவர்கட்கு இடத்தகாதனவற்றை இட்டும், உள்ளுக்கு மருந்திட்டு மயக்கி அவர்கள் உடலை அழகு செய்து வந்த ஆழி முதலிய அணிகலன் களைக் கழற்றியும், ஈருள்ளமும் ஒன்ருகுமாறு கலந்து மகிழ்ந்த மனைவியை வேறுபடுத்தியும், மற்றைய தெய்வங்களிடம் மதத்தின் வரம்பு அழியும் நெறியினை நினைத்தும், இத்தகைய வேறு பிற செயல்களைச் செய்தும், திருவரங்கத்தில் எழுந்துள்ள திருக்கோயின் திருப்பணியை அறிவு கலங் காமலும் சலித்து விடாமலும் நடத்துதல் ஒருவன் செய்யும் கடமையா குமோ? சொல்லுக. இவ்வாறு செய்தவர் திருமங்கை மன்னர்; ஆதலின், தீச் செயலையே கருவியாகக் கொண்டு நின் திருப்பணியைச் செய்யினும் பாவமில்லை யென்பது தெளிவு.

விம்பம் = வடிவம்; அஃதாவது தெய்வ வடிவமுடையது. விமான-ரதம்—புட்பக விமானமாகிய ரதம். அது தேர் வடிவமுடையது.

தந்தன தானன தத்தன தானன
தந்தன தானன தத்தன தானன
தந்தன தானன தத்தன தானன தனதான

358. கும்பிட வோநின்னி ருப்புறு கோயில்வ
லஞ்செய வோபணி வுற்றிட வோமயல்
குன்றிட வோவலை சக்கர மாகிய பொறிதோளிற்
கொண்டிட வோபுக ழைத்தனி பாடல்பு
ரிந்திட வோதுள வத்துட னேபல
கொந்தள மாலைகள் கட்டிட வோவுன தருளேதோ
நம்பிட வோவுயர் பத்தரொ டேதினம்
இன்புற வோகுரு கைச்சட கோபர்தம்
நன்குண வேலைமு ழுக்குற வோபெறு பயனேதோ
நங்களை நீபிற விக்கிடை யேவிடல்
வம்பல வோசன னத்தில்வி டாதினி
நண்பொடு வானதி பற்றிய தாள்பெற அருள்வாயே

சம்புவை தூயவ கத்திய ருறை
யுந்தல மேவிம திப்புட னேயவர்
தந்திடு பூடண மிட்டுயர் போனகம் நுகராமேல்
தண்டக பூபதி சுக்கிரன் மாமகள்
மென்சரை மேன்மய லுற்றவள் மேல்விழு
சங்கையி னுன்முனி யிட்டிடு சாபமும் அதனாலே
வம்புறு நாடுமி றப்பவ நாள்முதல்
வெம்பிய கானிது முற்கதை யீதென
வண்குட வேதியர் செப்பவி ராமுழு தவண்மேவி
வந்துல கேழும்வி யப்புட னேதொழ
அந்தவி மானரா தத்துட னேபெரு
மங்கல மானதி ருப்பதி மேவிய பெருமாளே.

உரை :—சம்புவை வெட்டிய பின் சிவபெருமானை நிகர்த்த தூய அகத்திய முனிவருடைய ஆச்சிரமத்திற்கு இமையவர்களோடு விண்ணின் வழியாக வந்து அவரால் உபசரிக்கப் பெற்று, இவருக்கு இம்மாலை எற்கு மென்று குறிப்பின் உணர்ந்து அவர் நினக்குக் கொடுத்த மாலையைப் பெற்று 'இம் முத்துமாலை வந்தவாறு எங்ஙனே' என்று நீ கேட்க அகத்தியர், கூறுவார்: "விதர்ப்ப நாட்டில் சுவேதனென்னும் அரசன், உணவும் நீரும் கொடாமல், மாணிக்கம் முதலிய ஒன்பது மணிகளாகிய உயர்ந்த பொருள்களைப் பசித்தோர்க்கு மிகவும் அளித்துப் பின்னர்த் தவம் செய்து மலரோன் உலகம் சென்று பலவகையான அணிகளை யணிந்த அழ கோடும் பலவகை உபசாரங்களோடும், அவ்வவையில் இருக்கும்போது, நீர் வேட்கையும் பசியும் வரக் கண்டு, நான்முகனைப் பார்த்து, 'இவ்வுல கிலும் பசியும் நீர் வேட்கையு முண்டோ?' என்று கேட்க, நான்முகன், 'நீ, இரந்தோர்க்கு நீரும் சோறும் கொடாமையால் அவை இங்கு வந்தன' வென்று சொல்ல, 'பின் யாது செய்வ' தென்று அரசன் கேட்க, 'நீரும் சோறும் கொடுத்து நின் உடலை நீ வளர்த்தமையால் அதனைத் தின்று பசி யாறுக' வென்று மலரவன் மொழிய, அதைத் தின்றால் குறையாதோ? என்றவன் கேட்க, அது குறையாமலிருக்கக் கடவதென்று பிரமன் சொல்ல, அவ்வுடல் சுவையா யிருக்குமோ? என்றவன் வினவ, 'அஃது இனிமையா யிருப்பதாகுக' என்று படைப்புக் கடவுள் பகர, ஆயின், இத் துன்பம் எப்போது நீங்குமென்று அரசன் கேட்க, அவன் தான் அணிந் திருந்த முத்து மாலையை அகத்தியருக்குத் தந்தால் பசித் துன்பம் பறக்கும் என்று நான்முகன் நவில, அவன் விமானமேறி நிலவுலகில் முன் தான் தவஞ் செய்த இடத்திற்கு வந்து, நீராடித் தன் பிணத்தை யரிந்து தின்று

கொண்டிருக்கும் நாளில் ஒரு நாள், நான் வடக்கண் இருந்து வந்தபோது அவ்வாச்சிரமத்தில் தங்கி அன்றிரவைக் கழித்து வைகறையில் காலைக் கடன்செய்து கொண்டிருக்க, துந்துபிப் பறையின் ஒலி கேட்டது; அஃதென்னவென்று நான் பார்த்துக் கொண்டிருக்கையில், ஒரு விமானம் கீழே இறங்கிற்று; அதிலிருந்து வெளிவந்த அவ்வரசன் நீராடிய பின் தன் பிணத்தைத் தின்று வாய்ப்பூசி மீண்டும் விமானம் ஏறப்போன சமயத்தில், நான் இப் புதுமையை அறிய வேண்டி, அவ்வரசனை அணுகி, அவனைக் கூப்பிட அவன் வந்து வணங்கி நிகழ்ந்தனவெல்லாம் சொல்லியதோடு என்னையும் அறிந்து கொண்டு இம் முத்து மாலையை எனக்கீந்தான்; நான் அதனை வாங்கிக் கொண்டவுடன் அப்பிணம் திடீரென மறைந்து போயிற்று; அவ்வரசனும் பசி, நீர்வேட்கை ஆகியவை யொழியப் பெற்று மலரோன் உலகடைந்தனன்.”

இக் கதையைச் சொல்லி அகத்தியர் படைத்த உணவை நீ யுண்டு, “இத் தண்டகவனம் எப்படி யுண்டாயிற்றென்று கேட்க, அகத்தியர், “மனுமரபில் தண்டனென்னும் அரசன் கொடியவனாய்த் தன் நாட்டை ஆண்டு, ஒரு நாள் வேட்டைக்குப் போனவிடத்தில், சுக்கிரனுடைய மகளாகிய சாரை யென்பவள் சமித்துத் தேடிவரக் கண்டு ‘நீ யார்’ என்று கேட்டான்; அவள் தன் வரலாற்றைக் கூறி, ‘நீ இங்கே நில்லாமல் ஓடிப் போ’ என்றும் சொன்னாள்; இவன் காமியாயினமையால் அவளை வலிந்து பற்றத் தொடங்கினான்; அவள் அவனிடம் அகப்படாமல் தப்பியோடித் தன் தந்தைபால் அழுது முறையிட்டாள்; அவர் வடவைக் கனல் போற் சினந்து, ‘இத் தண்டகனும் அவன் பரிவாரங்களும் அவன் நாடும் மண்மாரியால் அழிக; அவன் நாடு காடாகி அரக்கர் வாழும் இடம் ஆகுக’ என்று சபித்தனர்; அந் நாள் முதல் தண்டகன் நாடு காடாகி அரக்கர் மறைந்துறையும் இடமாயிற்று; பிறர்க்கு அச்சந்தரும் காடுமாயிற்று; இது முற்கதை” யென்று உண்மைத் தவம் செய்த அகத்திய முனிவர் சொல்ல, இரவெல்லாம் அங்குத் தங்கியிருந்து, விடிந்த பின் எழுலகவரும் வியப்புடன் வந்து வணங்க அப் புட்பக விமானத்தில் புறப்பட்டுப் பெருமையும் மங்கலமுமுடைய அயோத்தி நகருக்கு எழுந்தருளிய பெருமானே; உன்னைக் கும்பிடவோ? நினக்கு விருப்பமுள்ள திருக்கோயிலை வலம்வரவோ? நின் திருமுன் நின்று வணங்கவோ? உலக மயக்கம் குறைந்து போகவோ? நின் பெருமைகளை ஒப்பற்ற பாடல்களாகப் பாடவோ? திருத்துழாயோடு கொத்தான பூக்களை மாலையாகக் கட்டவோ? நின்னை நம்பவோ? எவரினும் மேம்பட்ட அடியவர்களோடு நாடோறும் இன்பமாகக் கூடியிருக்கவோ? திருக்குருகூர்ச் சடகோபராகிய நம்மாழ்வாருடைய நற்குணங்களாகிய கடலில் மூழ்கியிருக்கவோ? இவற்றால் நீ பெறும் பயன்தான்

யாதோ? ஒரு பயனுமின்றி எங்களைப் பிறவிக் கடலுள் மூழ்கச் செய்தல் வீணன்றோ? இனி எங்களை இவ்வாறு பிறக்க விடாமல் கட்போடு கங்கை யாறு தோன்றிய நின் திருவடியை அடியோங்கள் பெறத் தக்கவாறு அருள் செய்வாயாக.

தான தானனு தந்தன தானன
தான தானனு தந்தன தானன
தான தானனு தந்தன தானன தனதான

359. காசு தேடுவார் பெண்களொ டேவிளை
யாடி யூடுவார் முன்புள தாகிய
காணி பூணுவார் சந்தன லேபன மணிமாலை
காத லாகியே யின்புறு வார்மத
யானை யேறுவார் வெம்பரி யானது
காண நாடுவார் உண்டிசு காசுகம் உணர்வார்யார்

ஓசை சூழவே யம்புவி யோர்மனம்
வேறு வேறுபோ கும்படி போவது
லோக நீதியா நின்றநி யானவர் வழிபோகா(து)
ஓ(ம்)ந மோநமோ ரங்கமெ னுவுரை
நாடி னேனினீ யிங்கிது தாழ்வுயர்
வோடு மோடுமோ வென்செய் மோவிதை அறியேனே

ராச ரூபயா கம்புரி வேனென
நீடு சேடனு ரங்கிது நீசெயில்
ஏறி ராசநீ தம்பட வேதினம் வரவேணும்
ஈதின் மேன்மையா கும்பரி வேள்வியை
நீசெய் வாயெனு வன்புட னேசொல
ஈறில் வீடணே சன்கவி ராசனொ டனுமானும்

தேச ராசர்யா ரும்பரி வாய்வர
ஓலை யேவியே பொங்கிய கோமத
தீர மீதிலே யண்டர்ப ராவரு வனமீதே
தீதில் சாலைநீ கண்டிடு வாயென
நேர்வி டாதகொர் தம்பியை யேவிய
தேவ தேவனே செந்திரு மேவிய பெருமாளே.

உரை :—நீ உலகை நன்முறையில் ஆள்கையில் ஒரு நாள் தம்பியாரைப் பார்த்து இராசசூய வேள்வி செய்ய வேண்டுமென்று சொல்ல, மிக்க புகழ்படைத்த இலக்குவன், "அவ்வேள்வியைத் தாங்கள் செய்ய வேண்டின், தங்கள் திருமுகத்தைக் காண விருப்பம் கொண்டுள்ளவரும், மேன் மேல் வளரும் நீதியை யுடையவருமான அரசர்களை வென்று அவர்களுடைய செல்வங்களைக் கொண்டு வருதல் வேண்டும்; ஆதலின், அரசர்களை வருத்தாமல், இதனினும் சிறந்துள்ள அசுவமேதம் என்னும் வேள்வியைச் செய்யுங்கள்" என்று அன்புடன் கூற, அதற்கு நீ உடன்பட்டு அழிவில்லா விபீடணனாகிய அரக்கர்கோனும், குரக்கரசான சுக்கிரீவனோடு அனுமானும், பிறநாட்டரசர்களும், எல்லா முனிவரர்களும் அன்புடன் வருமாறு ஓலை யனுப்பி வெள்ளம் பெருகிவருகின்ற கோமதி நதியின் கரையின்மேல், விண்ணவர் பரவுதற்கரிதாகிய நைமிசாரண்யத்தில் குற்றமற்ற வேள்விச்சாலையைச் செய்கவென்று சொல்லி, இடைவிடாது, ஒப்பற்ற இலக்குவனாகிய தம்பியை அனுப்பிய தேவதேவா, திருமாமகள் வீற்றிருக்கும் திருமார்புடைய பெருமாளே; (உலகத்தின் நீதியாவது) உலகவர், பொருள் தேடுவர்; பெண்களோடு விளையாடிப் பிணங்கிக் கூடுவர்; முன்னே அமைந்துள்ள காணியைத் தரிப்பர்; சந்தனமுதலிய பூசும் பொருள்களையும் மணிமாலைகளையும் விரும்பி உடலின்மேற் கொள்வர்; மதமுள்ள யானைமீதேறுவர்; குதிரைமீதேறி எவருங் காணுமாறு திரிவர்; உணவின் இன்ப துன்பங்களை யறிவார் யார்? எவருமிலர்; இங்ஙனம் உள்ளோர் ஐவகை இயக்களும் ஒலித்துவர அழகிய உலகிலுள்ள பேரிடம் வேறு வேறு வகையாக விருக்குமாறு செல்வது உலக நீதியாக உள்ளது; அடியேன் அவர்கள் வழியிற்போகாமல் ஓம் நமோ, அரங்கா நமோ என்னும் சொல்லை உண்மையென ஆராய்ந்து நம்பினேன்; இனி, இவ்வாறு பல்கால் நான் அத்திருப்பெயரைக் கூறினால் அது என்னைத் தாழ்ந்த நரகத்திற்கு ஓட்டுமோ? அன்றி உயர்ந்த சுவர்க்கத்திற்கு ஓட்டுமோ? ஐயோ, அஃது என்னசெய்யுமோ? அறியேன்.

'இனி' என்பது 'இனீ' என நீண்டு நின்றது.

தனதன தானன தந்த தந்தன
தனதன தானன தந்த தந்தன
தனதன தானன தந்த தந்தன தனதான

360. கருமுகி லேசர ணந்தி ருந்திய
சுடர்மணி யேசர ணந்தெ ளிந்திடு
கடலமு தேசர ணஞ்செ ழுந்திரு விளையாடுப்

கமழ்தட மேசர ணைந்து லங்கிய
முழுமுத லேசர ணம்ப சுங்குளிர்
கனவரை யேசர ணஞ்சு ரண்சரண் எனவோதி

உருகுதல் பாடுதல் நின்றி ரங்குதல்
விழிபுனல் சோருதல் வந்து கும்பிடல்
உடல்மிசை யேபுள கஞ்செ றிந்திடல் நடமாடல்
உபயச ரோருக மென்ப தங்களின்
நிலமுடி சேரவி ழுந்தி றைஞ்சுதல்
உனதடி யார்களு டன்க லந்தருள் பெறுவேனோ

அரிமிகு நீலது மிந்த சங்கவி
டபநள கேசரி யெண்கொ டங்கதன்
அநுமன்மு னோருமி லங்கை யம்பதி யுடையோனும்
அபயர்ம ராடர்க லிங்கர் வந்திகர்
மகதரி லாடர்தெ லுங்கர் சிங்களர்
அதிகுரு நாடர்க ளங்கர் வங்கர்கன் னடர்மோகர்

இருளறு கோமதர் வெம்பு குன்றவர்
எழுவகை மாதவர் முந்து மந்தணர்
இமையவர் யாருநி றைந்து தந்தொழில் மிசைகாண
வினையறு வான்மிக வன்செ றிந்திட
முதுபரி வேள்விபு ரிந்து பின்குச
லவர்கதை கூறவு வந்தி ருந்தருள் பெருமாளே.

உரை :—வேள்விச்சாலை செய்த செய்தி வந்ததும் சுக்கிரீவன், நீலன், துமிந்தன், சங்கன், இடபன், நளன், கேசரி, சாம்பவன், அங்கதன், அநுமான் முதலிய படைத்தலைவர்களோடு எழுபது வெள்ளம் குரங்குப் படையும், இலங்கை நகரை ஆளுதலுடைய விபீடணனும், சேர நாட்டரசர், மராட்டியர், கலிங்கர், வந்திகர், மகதர், இலாடர், தெலுங்கர், சிங்களர், குருநாட்டவர், அங்கநாட்டவர் ஆகியவரும், வங்கநாட்டரசர், கன்னட நாட்டரசர், மோகரநாட்டரசர்கள், மயக்கமற்ற கோமதநாட்டரசர், கொடுங் கோபமுடைய வேடர்கட்கு அரசனை குகன் முதலிய அரசர்களும், எழு வகை மாமுனிவர்களும், மற்றைய முனிவர்களும், விண்ணவரும் ஆகிய எல்லோரும் அங்குவந்து நிறைந்து தங்கள் தங்கள் சிறப்பு வரிசைகள் தோன்றத் தட்செயல்களில் ஈடுபட்டிருக்கவும், வான்மீகிமுனிவர் நெருங்கி வந்திருக்கவும், தாயர், அமைச்சர், படைத்தலைவர், படைவீரர் முதலியோர்

உடன்வரவும் நைமிச வனத்திற்குப்போய் முற்றிய பரிவேள்வி செய்து, பின்னர்க் குசலவர் வந்து கதைசொல்லக் கேட்டு மகிழ்ந்தருளிய பெருமானே; கரிய முகில்போன்றவனே அடைக்கலம்; குற்றமற்ற திருத்தமான ஒளியையுடைய நீலமணியே அடைக்கலம்; தெளிந்த திருப்பாற் கடலில் பள்ளிகொண்டருளிய அமுதமே அடைக்கலம்; செழுமைவாய்ந்த திருமகள் திருவிளையாடல் புரியும் மணமுள்ள பொய்கையே அடைக்கலம்; எங்கும் நீக்கமற நிறைந்து விளங்கிய குறைவற்ற மூலப்பொருளே அடைக்கலம்; பசிய நிறத்தோடு குளிர்ச்சியையுடைய நீல மலையே அடைக்கலம்; அடைக்கலம்; அடைக்கலமென்று பலகால் சொல்லி உள்ளம் உருகுதலும், வாய்பாடுதலும், நின்றிரங்கி மிடறு விம்முதலும், கண் மகிழ்ச்சிநீர் சொரிதலும், நின் திருமுன்வந்து கும்பிடுதலும், உடலின்மேற் புளகம் செறிதலும், கால்கள் மகிழ்ச்சியால் ஆடுதலும், நின் செந்தாமரைபோன்ற மெல்லிய இரண்டு திருவடிகளிற் படுமாறு நிலத்தில் தலை சேரவிழுந்து வணங்குதலும், நின் அடியவரோடு கூடியிருத்தலும், ஆகிய நின் திருவருளை நான் என்று பெறுவேனோ? சொல்லுக.

தந்தன தான தந்த
தந்தன தான தந்த
தந்தன தான தந்த தனதான

361. மூந்திய மூல மென்பர்
பின்புறு சோதி யென்பர்
முன்புள போத மென்பர் வெளியாகி
மொய்ம்புள கோல மென்பர்
அஞ்சன ரூப மென்பர்
முண்டக நாபி யென்பர் மறைநாலும்
தந்திடு நாத மென்பர்
ஒண்பொரு ளாய தென்பர்
தங்கிய மோன மென்பர் க்ருபைவீசு
தண்சுடர் கானு மென்பர்
அந்தமில் மாயை யென்பர்
தந்தெளி வானு னங்கம் அறிவார்யார்
அந்தணர் வேணு மென்ற
தண்டுல மாடை செம்பொன்
அம்புவி யாவி னங்கள் பலதானம்

அன்புட னேவ ழங்கி
மைந்தர்கள் வாழ நண்பின்
அந்தமி லாது யர்ந்த நிதிவீசி
இந்திரை சீதை யிங்கு
வந்திட வேணு மூந்த
என்றலு மேகொ ணர்ந்து முனிபோத
இன்பவி லோச னங்கள்
அங்கவள் மேலெ றிந்த
ரங்கப தேதெய் வங்கள் பெருமாளே.

உரை :—வேள்வியை முற்றுவித்து மறையவர் வேண்டிய அளவிற்கு அரிசி, ஆடை, செம்பொன், நிலம், பசுக்கூட்டங்கள், முதலிய பல தானங்களை அன்புடன் அளித்து, தன் மக்கள் வாழ நட்போடு அளவில்லாப் பெருஞ் செல்வகளை நல்கித் (மைந்தர் என்பதற்கு வலிமையுடைய அரசர் என்றும் மனிதர் என்றும் பொருள் கூறலாம்.) திருமகளாகிய சீதை இங்கே எல்லார் முன்னிலையிலும் வரவேண்டுமென்று நீ சொல்லியவுடன், வான்மீகிமுனிவர் பிராட்டியைக் கொணர்ந்து விட்டுப்போக, இன்பமுள்ள திருக்கண்களை அங்கே அவள்மேல் வீசிப் பார்த்தருளிய திருவரங்க நாதா, தெய்வங்களின் பெருமாளே ; நின் திருவடிவத்தை ஆதிமூலமென்பர் சிலர் ; அதன் பின்புள்ள ஒளியென்பர் சிலர் ; முன்பேயுள்ள ஞானமென்பர் சிலர் ; வெட்டவெளியாகி வலிமையுள்ள அழகிய வடிவமென்பர் சிலர்; மைபோன்ற கரிய வடிவமென்பர் சிலர் ; தாமரைக் கொப்பூழ் என்பர் சிலர் : நான்மறைகளும் உண்டாக்குகின்ற நாதம் என்பர் சிலர் ; ஒளி மிக்க அறிவாகிய பொருள் என்பர் சிலர் ; எல்லாம் அடங்கி நின்ற மௌனமான (சொல்லற்ற) இடமென்பர் சிலர் ; ஒளிவீசும் சிறந்த சோதி யதுகாண்மின் என்பர் சிலர் ; அழிவற்ற மாயையென்பர் சிலர் ; இங்ஙனம் வேறுவேறாகச் சொல்லுவார்களே யன்றி எவரேனும் தம் தெளிந்த அறிவினால் நின் வடிவத்தை அறிவரோ ? அறியார் ; நின் அருளாலே நின்னை யறிவதன்றித் தங்கள் அறிவால் அறிபவரிலர்.

தந்தன தானன தத்த
தந்தன தானன தத்த
தந்தன தானன தத்த தனதான

362. அந்தமி லாதத னந்து
நின்றுல கேழும திக்க
அன்பொடு நீதிவ ளர்க்க வரவேணும்

அன்றியி லாசையை விட்டு
முன்புள பேருமொ ளித்து
மைம்புலன் யாவுமொ டுக்கும் துறவாகி

உந்திட வேணுமி தற்கு
இங்கடி யேன்முனி ழைத்த
தொன்றுமி லேனிலை யற்ற வாழ்வானேன்

உன்பெரு மாயைவி ளைத்த
கெம்பிர மானச கத்தை
ஒண்சுக மோடுக டக்க வசமாமோ

வந்திடு சீதைபு விக்குள்
அன்பொடு நாணியொ ளிக்க
மண்டிய கோபமு திர்ச்சி வரலோடும்

வண்கம லேசனு ரைக்க
அங்குட னேகைகள் பற்றி
மங்கைசொ ரூபம்வ குத்த வடிவோடே

வெந்தழல் சேரவி ளைத்து
முந்திய தேவர்க ளிக்க
விஞ்சிய வீரதி விட்டு விதியாலே

வென்றிகொள் வேதவ சிட்டர்
மந்திரம் யாவு நடத்த
வெம்பரி வேள்விமு டித்த பெருமாளே.

உரை :—அங்குவந்த சீதாபிராட்டியார் அன்போடு நாணங்கொண்டு நிலத்தின் உட்புக, அது கண்டு நினக்கு மிக்கெழுந்த வெகுளி முற்றிவரும் போது, வளப்பம் பொருந்திய தாமரையில் வாழும் நான்முகன் வந்து சிறிது தேறுதல் கூறிய பின் சினந்தணியப்பெற்று, அவன் கைகளாற் பிடித்துப் பிராட்டியின் வடிவாகச் செய்த பொற்பாவையை உடன் வைத்துக்கொண்டு உள்ளே வெப்பமுடைய முத்தீக்களையும் ஒருங்கே வளர்த்து, முற்பட்டு வந்திருந்த இமையவர் மகிழுமாறு மிக்குள்ள நூலின் முறைப்படி மறையறிந்த வெற்றியையுடைய வசிட்டமுனிவர் ஓமம், மந்திரம் முதலிய சடங்குகளைச் செய்யக் கடிய விரைவுடைய அசுவமேத மென்னும் வேள்வியை முற்றுவித்தருளிய பெருமாளே; அளவற்ற செல்வத்தில் நின்று எழுலகத்தவரும் எடுத்துச் செல்லுமாறு அதனை நீதியோடு வளரச்செய்தல் வேண்டும்; அதுவன்றி இல்லுறையும் விருப்பத்தை

விட்டு முன்பிருந்த பேரையும் பெருமையையும் ஒளித்து ஐம்புலத்தால் வரும் அவாவினை யொடுக்கி நிற்கும் துறவுள்ளங் கொண்டு உலக மாயைக்குத் தப்பிப் பிழைக்கவேண்டும் ; இவ்விருவகை அறங்களுள் நான் இப்புவியில் முன் ஒன்றும் செய்ததில்லை ; ஆனால் அலைந்தலைந்து பயனின்றிக் கெட்டேன் ; நின் பெருமாயையால் உண்டாக்கிய வீறிய உலகத்தை ஒள்ளிய (இன்பமுடைய) நலத்தோடு கடக்க என்றால் இயலுமோ ? இயலாது ; நின் அருளால் அஃது இயல வேண்டும்.

வீரதி = வேள்விச் சடங்குகளின் கூறு பாடுகள்.

தனதான தானன தத்தன
தனதான தானன தத்தன
தனதான தானன தத்தன தனதான

363. இருநாலு கோலவெ ழுத்தையும்
ஒருநாள்வி டாமலு ரைத்திட
இருநாலு நாலுபு லப்படு திருநாமம்
எழிலாக மீதுத ரித்திட
வளையாழி சேர்பொறி யொற்றிட
இசையான தாமரை யிற்படு மணிமாலை
உரமீது தாழவு னக்குள
வனமாலை நீடுசி ரத்துற
உணர்வோடு நாளுமு னைத்தொழும் அடியார்தம்
உறவேவி டாதுக ருத்துற
அரிகேச வாவென நித்தமும்
உயர்கோயில் கோயிலெ னக்கொடு திரிவேனே
பரிமேத யாகமு டித்தபின்
நகர்மீது மேவமு னைப்பறு
பரிவான கோசலை மிக்கவின் மிசையேற
பகரீம மீதுபு குந்தனும்
மறுதாயி னோடுசு மித்திரை
பரலோக மேவனு முற்கடன் முறைபேணி
அரசான கேகய னைப்பொரு
தொருதேவன் நேமிசெ லுத்தலும்
அழகான தோர்பர தற்குநல் விடையேவி

அவன்மாம னுடுத னிற்புக
உலகாளி ராகவ வுத்தம
அபிராம னேயர விற்றுயில் பெருமாளே.

உரை :—நீ, அசுவமேத மென்னும் வேள்வியை முடித்து அயோத்தி நகரையடைந்து வாழ்கையில், முற்பட்டவளாய்-ஒப்பற்ற பெரியவளாய்-விளங்கிய கோசலை மேலுலகங்களுக் கெல்லாம் மேலான பரமபதத்தின் மேலேற வருத்தமுற்று, நூல்களாற் சொல்லப்படும் ஈமத்தின்மேல் அவள் உடலைவைத்து உரிய கடன்களை முடித்துச் சின்னுட்கள் கழிய மறுதாயா ராகிய கைகேயியுடன் சுமத்திரையும் பரமபதத்தை யடைய அவர்கட்கும் முன்செய்தவாறே கடன்களை ஆதரவுடன் செய்து வாலாமை கழிந்தபின் அரசாளும்போது, கேகயநாட்டரசனை யுதாசித்து என்பவனைக் கந்தருவ னை சயிலூடன் என்பான் பொருதுவென்று அவன் நாட்டில் சிந்துநதி யின் இருபுறங்களிலும் இருந்த பல நாடுகளைக் கைப்பற்றித் தன் மூன்று கோடி மக்களோடு ஆணைத்திகிரி செலுத்தி ஆளுவதை யறிந்து அவ்யுதா சித்து, தன் குருவாகிய கார்க்கிய முனிவராகிய ஆங்கிரீசமுனிவருடைய மைந்தனை நின்பால் அனுப்ப அவர்சொல்லியன கேட்டு, நீ, அவரிடம், "பரதனுடைய மக்கள் தட்சனென்றும் புட்கரனென்றும் இருவர் உளர்; அவர்களோடு பரதனையும் உம்மோடு அனுப்பி வைக்கிறேன்; நீங்கள் யுதாசித்தனையும் கூட்டிக்கொண்டு அக்கந்திருவனை வென்று பரதன் மக்களை அந்நாடுகளை யாளவைத்து நலமுற்றபின் பரதனை இங்கு அனுப்பு திர்;" என்று சொல்லிப் பரதனையும் அவன் மக்களையும் பல படைகளை யும் முனிவருடன் அனுப்பப் பரதன் தன் அம்மான் நாடுசென்று அக் கந்தருவனை வென்று இன்புற்றிருக்கும்போது இவ்வுலகையாண்ட ராகவா; ஆண்டகையே, அழகிய இராமா, திருவனந்தாழ்வான்மேற் பள்ளிகொண் டருளிய பெருமாளே; அழகிய திருவெட்டெழுத்தை ஒருநாளும் விடா மல் பன்முறை யுரைக்கவும், அறிவைத் தரும் பன்னிரண்டு திருநாமங்களை யும் ஓதி அழகிய உடலில் பன்னிரண் டிடங்களிலும் திருமண் காப்பினைத் தரிக்கவும், சங்குசக்கரம் சேர்ந்த அடையாளத்தை இரு தோள்களிலும் ஒற்றிக்கொள்ளவும், புகழமைந்த தாமரையி லுண்டாகிய மணிமாலை மார் பின்மேல் தாழ்ந்தசையச் சூடியிருக்கவும், நின் திருத்துழாய்மாலையை நீண்ட தலையில் அணிந்திருக்கவும், தெளிந்த அறிவோடு எந்நாளும் உன்னை வணங்கும் அடியவர் உறவை விடாமல் கூடியிருக்கத் தக்க உள்ளம் பெற வும் பெற்று நாள்தோறும், அரி, கேசவா, என்று யாவரும் மிகப் பரவும் கோயில் கோயிலென்று சொல்லிக்கொண்டு திரிவேன்.

'உனக்குள்ள' என்பதனைத் திருவெட்டெழுத்து, திருநாமம் முத லிய வற்றோடும் கூட்டியுரைக்கலாம். கோயில் என்றது திருவரங்கத்தை.

தந்தனன தானன தத்தன
தந்தனன தானன தத்தன
தந்தனன தானன தத்தன தனதான

364. அந்தணர்கள் வேதம னைத்தையும்
நன்குரையி னோடறி யத்தரும்
அங்கரசர் வாகைபெ றத்தரும் வணிகேசர்
அம்பொனிதி வாழ்வையு றத்தரும்
நின்றவரு மேன்மையு றத்தரும்
அஞ்சொல்மட வார்மிகு புத்திரர் பெறுமாறு
தந்திடுமி லாதவ ரெப்படி
சிந்தனைசெய் தாலும வர்க்கது
சந்தயமி லாமல ளித்திடும் மலரோனும்
சங்கரனு மாகவ ழுத்திடும்
நின்சரித மோதிநி னைத்திரு
தன்செவியி னூடுநி றைத்திடில் அரிதேதோ
கந்திருவ ராசனை முட்டிய
வெம்பரதன் வாகைப டைத்திரு
கண்களனை யாமொரு புட்கரன் எனுநாமன்
கந்தனனை யாமொரு தக்கனும்
என்றநல்கு மாரரை வைத்தொளிர்
கந்தமுடி சூடவ ருட்செய்து நகராகச்
சிந்துவெனு நாடிடை புட்கல
வங்குளிர்சி லாபுர மிப்படி
திண்டிறலி னோடுப டைத்தவர் அரசாளச்
சிந்தைமகிழ் வோடுதி ருப்பதி
வந்துதொழு மாபர தர்க்கிரு
செங்கணரு ளானது வைத்தருள் பெருமாளே.

உரை :—கிரி விரசநகரை விட்டு யுதாசித்துடன் புறப்பட்டு இருவர் தம் படைகளுடனும் சென்று கந்திருவ மன்னனையெதிர்த்துப் பொருது, ஏழாம்நாட் போரில் பரதன் காலப்படை யென்னும் சிறந்த படைக்கலத்தைச் செலுத்த, அந்த அம்பினால், மூன்றுகோடி கந்திருவர்களும் அழிந்து போகப் போர்க்கொடுமையுள்ள பரதன் வெற்றிமாலை சூடித் தன் கண்களை

நிகர்த்த புட்கானையும் முருகவேளை யொத்த தட்சனையும் ஒளியும் மணமு முடைய மாலை தரித்து மணிகள் பதிக்கப்பட்டுள்ள முடி சூட்டி, சிந்து நாட்டில் புட்கானுக்குப் புட்கலாபுரியும் தட்சனுக்குத் தட்சிலையும் மிக்க திறமையோடு நகராகச்செய்து, அவற்றை அம் மைந்தர்கள் ஆளவிட்டு, அவர்களோடு ஐந்தாண்டுகள் தங்கியிருந்து அவர்கட்கு எல்லா நீதிகளையும் அறிவுறுத்தி மகிழ்ந்து அயோத்திக்கு வந்து வணங்கிய பெருமையுள்ள அப்பரதனுக்குச் செந்தாமரை மலர்களைப்போன்ற கண்ணின் அருள் நோக்கத்தை வைத்துச் செய்திகள் அனைத்தையும் கேட்டருளிய பெருமாளே ; நான்முகனும் சிவபெருமானும் பரவுகின்ற நின் வரலாற்றை ஓதியும் உள்ளத்தில் நினைத்தும், இரு காதுகளும் குளிரக் கேட்டும் வரும் செயலை மறையவர்கள் செய்தால் அது மறைகள் அனைத்தையும் உரையுடன் நன்ருக அறியும் திறத்தை அவர்கட்குத் தரும் ; அரசர்கள் செய்யின் பகையரசர்களை வெற்றிகொள்ளும் திறலைத் தரும் ; வணிகர்கள் செய்யின் அழகிய பொன் முதலிய செல்வங்களை அடையச் செய்யும் ; இம்மூவரு மன்றி மற்றையோர் செய்யின் அவர்கள் விரும்பிய மேன்மைகளைத் தரும் ; அழகிய சொல்லையுடைய பெண்கள் செய்தால், பல நன்மக்களைப் பெறச்செய்யும் ; வேறு எவரேனும் கவலையுடன் ஏதேனும் ஒரு பொருளைப் பெற வேண்டிச் செய்யின் அதனை அப்படியே ஐயமின்றித் தரும் ; ஆதலின் நின் அருளாற் கொடுத்தற்கரியது யாதுளது ? எல்லாவற்றையும் அது எளிதிற் கொடுக்கும்.

இவ்விராமசெயத் திருப்புகழாகிய இந் நூலும் உன் புகழைக் கூறுதலால் இதுவும் எல்லாப் பயன்களையும் தரும் என்க.

தானதன தந்தன தானன
தானதன தந்தன தானன
தானதன தந்தன தானன தனதான

365\. வாராய்வெளி வந்துநி லாயருள்
கூராயொரு தொண்டுகொ ளாய்பெரு
மாமாயையெ னுங்கரு நீள்வலை யதுபீறி
மாருப்பத மென்சிர மீதுற
நேராய்விழி நின்றரு ளாய்மணி
வாயூடுமி ருந்துத வாயென துளமீதில்
சேராயிரு கண்க்ருபை யேகொடு
பாரார்தொட ருப்பல தீவினை
தீராய்நினை யுந்தொறும் ஊறிடும் அமுதாகித்

தேனாகிய் ருங்கனி யாயொளி
தானாகியி ரண்டற வேயொரு
சீராகிநி றைந்துவி டாயினி அமையாதோ

பேராண்மையி ளங்களி றானவர்
சேயாகிய வங்கத னோடொரு
பேராகிய சந்திர கேதுவொ டிருவோரும்

பேராமகு டந்தலை சூடியொர்
காராபத மென்றுரை யேபெறு
பேணார்பர வுந்திரு நாடது தனிலேகிக்

காராபதி யென்பதொ ரூர்தனை
நேரேமுதல் வன்பெற நீடிய
கானார்புரி சந்திர மாமகன் பதியாகிக்

காரார்பெரு மைந்தனும் வாழ்வுற
நாடாளுமி குந்தச ராசர
காலாரகு நந்தன னேசுரர் பெருமாளே.

உரை :—இவ்வாறு அரசாளுங்கால், இலக்குவனுடைய இரண்டு மைந்தர்கட்கும் நாடு அமைக்க வேண்டுமென்று நீ கேட்கப் பரதன் சொல்கிறான் : "கார்பதமென்னும் நாடு மேற்குத்திசையிலும் வடதிசையிலும் மிகப் பரந்திருக்கின்றது ; அங்கு மல்லர்கள் இருந்து உலகெங்கும் தீங்குகள் செய்துகொண்டு பரவி யிருக்கின்றனர் ; அந்நாட்டைச் சிறப்புற்ற நகரங்க ளாக்கலாம்." இவ்வாறு சொல்லியவுடன், அங்ஙனமே 'பேராண்மை படைத்த மதயானைபோன்ற தம்பியாகிய இலக்குவனுடைய மகனாகிய அங்கதனுக்கு மேற்கு நாட்டின்கண் காராபதியில் அங்கதீயமென்றொரு நகரை யுண்டாக்கி இலக்குவனும் உடன்சென்று அந்நகரில் ஆட்சியை நிறுவுக' என்றும், 'வடநாட்டில் சந்திரகேதுவுக்குச் சந்திரகாந்தமென்னும் நகருண்டாக்கிப் பரதன் உடன் சென்று அங்கு ஆட்சியை நிறுவுக' என்றும் சொல்லி அனுப்ப, அவர்கள் அங்ஙனமே செய்து ஓராண்டு அங்குக் கூடியிருந்து பிறகு அவ்விருவரும் வந்து வணங்கித் தாங்கள் செய்தவைகளைச் சொல்லக்கேட்டு அரசாண்டவனே, மிக்க அரக்கர்க்கு எமன்போன்றவனே, இரகுமரபிற்றோன்றிய பெருமானே ; நீ வெளியில் வருவாய் ; வந்தவுடன் போகாது நிற்பாய் ; நின்று அருள்செய்வாய் ; அடியேனையும் ஒரு பொருளாக எண்ணி அடிமைகொள்வாய் ; மிக்க பெருமையான மாயையாகிய இருண்டு நீண்டுள்ள வலையைக் கிழித்து விலக்குவாய்; பெருகிய மாயையை விலக்கி நின்திருவடிகளை அடியேன் தலைமேலிருக்கச்

செவ்வையாக வைப்பாய் ; அடியேன் கண்முன்னே நின்றருள்வாய்; அச்கிய வாயினுள்ளிருந்து மெய்ந்நெறியைக் கற்பிப்பாய்; கற்பித்து அடியேன் உள்ளத்தின் உள்ளே சேருவாய் ; சேர்ந்து அருளோடு பார்த்தருள்வாய்; பிறவிகள்தோறும் தொடரும் பல தீவினைகளைத் தீர்த்தருள்வாய் ; தீர்த்து அடியேன் நினைக்குந்தோறும் உண்ணும் அமுதாகித் தேனாகி அரிய கனியாகிப் பரஞ்சோதியாகி, நீ, நான் என்னும் வேற்றுமையற்று நீயே நானும் நானே நீயாய்ச் சீராய் நிறைந்து விடுவாய் ; இவையன்றி வேறொன்றும் அடியேனுக்கு வேண்டாம் ; இது போதாதோ ? போதும்.

(சிலர் நீள்வலை யென்பதைப் பிறவியாகிய வலையென் றுரைப்பர் ; மாயை யில்லையாயின் பிறவி யில்லை ; எனவே பிறவி வலையெனல் சிறப்புடைத் தன்று)

தனதன தான தனதந்த தான
தனதன தான தனதந்த தான
தனதன தான தனதந்த தான தனதான

366. முலைகுடி பால கனுயர்ந்த ரூபன்
வனிதையர் நாண விளமைந்தர் தாதை
முதுநரை யாளி கிழவன்கை காணும் உதவாதான்
முறைபிறழ் வாயன் வசனங்கள் தோடன்
விழுபிணி மூழ லெனவிஞ்சு நாமன்
மொழிசெய லான செனனங்க ளூடு தடுமாறும்
அலையுறு பாவி மிகுதொந்த மான
வினைகளை நூறி யுனதன்ப னாகி
அடியவர் மேவு சபையின்கண் மேவி ரகுநாதா
அரிகரி ராம வரிரங்க தாம
செயசெய வாழி யெனநின்று பாடி
அழிவறு வான நதிகொண்ட தாள்கள் அடைவேனோ
உலகது காவல் புரிகின்ற நாளின்
முனியுரு வாகி நமன்வந்து மேவி
ஒருமொழி கூற நடுவிங்கொர் பூதர் வருவோரின்
உயிர்கொடு போவ னெனநின்று சேடன்
மனைவழி காவல் மிசைநின்ற போதில்
உறுதுரு வாசர் மலர்கண்டு போக விடலோடும்

வலிகொடு சீறி நமனுன்ற னாவி
 தருகென வோடும் முனியென்று சேடன்
மறைகளும் யாவும் இடர்கண்டு மூழ்க இருபாதம்
வரன்முறை கூடி யடலும்பர் பேணும்
 சரயுவின் மூழ்கி யுயர்கின்ற லோக
மருவுறு நீதி நெறிகண்ட தேவர் பெருமாளே.

உரை :—உலகைக்காத்து நன்முறையில் நீ அரசாளுகின்ற நாளில், எமன் ஒரு முனிவன் வடிவாகிவந்து, "நாம் மறைவாகச் சில பேசுதல் வேண்டும் ; நாம் பேசும்போது நடுவில் ஒருயிரும் இங்கு வருதல் கூடாது; அவ்வாறு வருபவர் உயிரையும் நான் கொண்டு செல்வேன்;" என்று சொல்ல, அங்ஙனமே யாரும் உள்ளே வரவொட்டாமல் 'ஏகாந்தமண்டப' வாயிலில் இலக்குவன் நின்று காக்க, துருவாசமுனிவர் வந்து தம்மை உள்ளே போகுமாறு விடவேண்டுமென்று இலக்குவனைக் கேட்க அவன் என்னசொல்லித் தடுத்தும் கேளாமலிருந்ததால், நின்மலர்முகத்தைக் காணுமாறு அவரை உள்ளேவிட, அவரைக்கண்ட எமன் வெருண்டு, 'என் ஆற்றலைக் கொண்டு உன் உயிரைக் கொண்டுபோவேன் ; உன் உயிரைக் கொடுத்துவிடு' என்று அம்முனிவரைக் கேட்டபோது, இலக்குவன், 'அவர் பெரு முனிவர் ; அவர் உயிருக்கு ஈடாக என் உயிரைத் தருகிறேன்' என்று சொல்லி, மறைகளும் மற்றைய உயிர்களும் துயர்க்கடலில் மூழ்க, நின் திருவடிகளிரண்டையும் தலை நிலத்தில் படிய முறைப்படி வணங்கி, வலிமைமிக்க இமையவர் ஆதரிக்கும் சரயுவுக்கு வந்து அந்நீரில் மூழ்கி எல்லா உலகங்களுக்கும் மேலாக உயர்ந்த பரமபதத்தை அடைய அவனது நீதியைக்கண்ட விண்ணோர் பெருமாளே ; உலகிற் பிறந்தவுடன் முலைப்பால் குடிக்கும் குழந்தையாயும், பின்னர், பெண்கள் நாண வளர்ந்த வடிவழகுடையனாயும், இளங் குழவிகட்குத் தந்தையாயும், அதற்குமேல் முதிர்ந்த நரையுடையவனும் கிழவனும், கையுங் காலும் உதவாமற் கிடந்தவனும், முறைதவறிப் பேசும் வாயை யுடையவனும், மெய்ம் மறந்தவனும் ஆகியும், மனம், மொழி, மெய் ஆகிய மூன்றும் குற்றம் உடையவனாயும், நோய்கள் தங்கும் குடுக்கையாயும் ஒன்றன் பின் ஒன்றாக மிக்கு வளரும் பெயர், பேச்சு, செயல் ஆகிய முத்தொழில்களையு முடைய பிறவிகளுள் அகப்பட்டுத் தடுமாறி அலையும் பாவியாகிய அடியேன், மிகுந்து தொடர்ந்துவரும் வினைகளைத் தூளாக்கி நின் அன்பனாகி நின் அடியவர் கூட்டத்தில் சேர்ந்து 'இரகுநாதா, அரிஅரி, ராமா ; அரி அரங்கநாதா வாழ்க வாழ்க !' என்றுநின்று பாடி, அழிவற்ற வானாற்றைத் தோற்றுவித்த நின் திருவடிகளைச் சேருவேனோ ? சொல்லுக.

தனத்தனன தந்த தான
தனத்தனன தந்த தான
தனத்தனன தந்த தான தனதான

367. தலைப்பொறிவி ரிந்த நோயை
அகற்றிடும ருந்து பார்வை
தவத்துறைபெ ருந்தி யானம் உயிரான

தனிப்பொருளு வந்த பாடல்
வழித்துணைப யந்து ளார்கள்
தமர்க்குழுவை குந்த மேற விடுமேனி

நிலைச்சுருதி மஞ்ச மாலை
மொழிக்குமுத வின்ப ஞான
நினைத்தவைய டங்க ராம எனவோது

நினக்குரிய தஞ்ச மான
எழுத்திவையி ரண்ட லாது
நிலத்திலுள தென்று வேறு கருதேனே

இலக்குவன்வை குந்த மேற
அலக்கணொடு நின்று வாழ
லவக்குசரை யம்பொன் மோலி புனையாமேல்

எடுத்தகுச னன்பி னோடு
குசப்பதியி ருந்து வாழ
லவக்குரிசி லுஞ்சி ராம பதிமேவ

வலத்துலவ ணன்ற னோடு
பரித்தவொரு தம்பி தானும்
மதித்தவொரு மைந்தர் சீரம துரைபுரிவ

மகிழ்ச்சியின்வி ளங்க நீடு
திருப்பதியில் வந்து கூடி
வணக்கமுற நின்ற தேவர் பெருமாளே.

உரை:—இலக்குவன் பரமபதமேறக் கண்டு பெரு வருத்தத்துடன் நின்று, உலகத்தில் வாழுமாறு குச லவருக்கு அழகிய பொன்னாற் செய்யப்பெற்ற முடிசூட்டி, முதல் மகனென்றெடுத்துச் சொல்லப்பட்ட குசன், அன்புடன் முதற் கோசலத்தில் குசப்பதியிலிருந்து வாழக் கடவனென்றும், இலவனென்னும் (அரசன்) சிறப்புடையவன் பிற் கோசலத்தில்

சீராமபதியிலிருந்து வாழக்கடவ னென்றும் சொல்லி அவர்களை அவ் விரு நகரிலும் நிறுவி, வலிமையுடைய இலவணனது நாட்டையாண்ட தம்பியான சத்துருக்கினன், உலகவர்போற்றும் சீர்த்தியையுடைய தன் இரு மக்களும் சிறப்புடைய மதுரைநகரில் மகிழ்ந்து அரசாண்டு விளங்கச் செய்வித்து அயோத்திக்கு வந்து வணங்க அவனை எடுத்தணைத்து நின்ற விண்ணவர் பெருமாளே; பிறவி யுண்டானபோதே தலையில் எழுதி விதிக்கப்பெற்ற பின், நோய்களைத் தீர்க்கும் மருந்தும், எல்லா உயிர்களுக்கும் கண்மணியும், தவத்திற்கு இறங்குந் துறையும், உயர்ந்த நினைவும், உயிராகிய ஒப்பற்ற பொருளும், இளையவர் மகிழ்ந்து கற்பிக்கும் பாட்டும், வழிக்குத் துணையும், அச்சமுள்ளவர்கட்கு உறவாய கூட்டமும், வைகுந்தத்துக்கு ஏறவைத்த ஏணியும், அழியாத மறைகளைப் பள்ளியாகக் கொண்டு படுத்து ஒழுங்காய் இருப்பதும், சொல்லுக்கு முதலானதும், இன்ப ஞானமானதும் இவை முதலாக நினைத்தவை யெல்லாம் ஆகி, நினக்குரிமை யுடையதாய் எல்லாவற்றிற்கும் அடிப்படையாய்த் தாங்குகின்றதுமான எழுத்து (இ)ராம வென்பதே யன்றி வேறுளதாக நினையேன்.

தனத்தனன தான தான
தனத்தனன தான தான
தனத்தனன தான தான தனதான

368. கருக்குழியி லேவி டாது
விடுப்பினுமி டாது ஞாந
கரத்திலக ஞாக நாலு மறையோதும்
கனத்தகுல தீப ஞாக
உனக்கடிமை யாக நீடு
கலைத்தமிழ்வி நோத ஞாக உயிர்யாவும்
புரக்குநெறி யாள ஞாக
அருட்குரிய ஞாக மேனி
புலப்படுசொ ரூப ஞாக நிலையாகப்
புகழ்த்தரும சீல ஞாக
அணைத்துநெடு வாழ்வு பேறு
புவிக்குளுடை யேனு மாக அருள்வாயே
குரக்கரசர் வீர ரோடும்
அரக்கர்பதி யோடு நீடு
குலப்பதியின் மேவு போதில் அருளாலே

கொடுத்தவர மாருறாது
அரக்கர்பதி யோடு நீடு
குறித்தவனு மானு மேக எனவேதான்

இரக்கமுட னாணை கூறி
அகற்றியபின் வான ரேசன்
இகற்குகனொ லோரும் வீறு பதியோரும்

இருக்குமிளை யோரு மேவி
அடுத்துவர யாற தான
எழிற்சரயு மீதி லோடு பெருமாளே.

உரை :—முன் நிகழ்ந்த செய்தி கேட்டு, படை வீரர்களோடு குரங்கினத்தரசனான சுக்கிரீவனும் அரக்கர் தலைவனாகிய விபீடணனும் அழுது கொண்டு, கதிரவன் மரபோர் அரசாண்ட நகராகிய அயோத்திக்கு வந்து நின்னை வணங்கி, "நாங்களும் நின்னுடன் வருவோம்" என்றழுது வேண்ட, நீ, "நான் முன்னே அருளாற் கொடுத்த வரத்தை மாற்றுதல் கூடாது; ஆதலின், அரக்கர்கோனாகிய எங்கள் விபீடணனோடு, மிக்க பெருமையை உலகிற்குச் சொல்லவல்ல அனுமானும் அவரவர் இருக்குமிடம் செல்லுக" என்று இரக்கத்துடன் ஆணையிட்டு அவர்களை அனுப்பி விட்டு, சுக்கிரீவன், வலிமைமிக்க குகன், ஆகியோரும் அவர் தம் படைத் தலைவர்களும் படைகளும் பெருமைமிக்க அயோத்திநகரி லுள்ளவர்களும் அருகிலிருந்த பரத சத்துருக்னரான தம்பியரும் நின்னை அடுத்துவரச் சரயுவென்னும் ஆற்று நீரில் மூழ்கிய பெருமாளே; அடியேனைக் கருக்குழியில் தள்ளிவிடாதே; என் தீவினையால் ஒருவேளை கருவில் விருத்தினாலும், பிறந்தபின் விருந்தினர்க் கிட்டாலன்றி உண்ணாதிருக்கும் (இட்டு உண்ணும்) கையுடையவர்களுள் சிறந்தவனாகவும், நான்மறைகளை யோதும் உயர்குலத்தவனாகவும், நினக்கடிமையாகவும், விரிந்த தமிழ்க்கலைகளைக் கற்பதில் பொழுது போக்குபவனாகவும், எல்லா உயிர்களையும் ஆளும் அறநெறி யுடையவனாகவும், நின் அருளுக்கு உரிமை பூண்டவனாகவும், அறிவுடைய அழகிய உடலுடையவ னாகவும், நிலைத்த புகழுடைய அறவொழுக்கமுடைய னாகவும், உலகில் எல்லாச் செல்வங்களையும் பெற்றவனாகவும் நான் இருக்குமாறு அருள் புரிவாயாக.

தானன தந்தான தந்த தானன
தானன தந்தான தந்த தானன
தானன தந்தான தந்த தானன தனதான

369. மாதாவு மென்றுறை யும்பி தாமகர்
ஆனோரி றந்தோரு மெங்கு மேனெகினும்
மாறாது நின்பாதம் வந்து பேணவென் வழியானோர்

வாழ்வோடி ருந்தேய னந்த மாயவர்
கால்கால்வ ளர்ந்தேறி யன்ப ராகியுன்
மாசோயி லுஞ்சேவை யுங்கை யாளுக அடியேனும்

போதாந டந்தேதெ ளிந்து நீள்புலன்
நேரேக லங்காது றைந்த தோர்வழி
போவார்தி றம்போல மைந்த யோகமொ டுளதான

பூவார்ப தம்பார ளந்த நீள்கழல்
வாறுறு வந்தேக லந்த காலிரு
பூமாத ரும்பாணி கொண்ட சேவடி அடைவேனோ

வேதாவி யந்தோது பண்டை தேவநின்
மாரூப மின்றே றெனொன் ற போதினில்
வீறுன சங்காழி யங்கை மீதுற மணிமார்பின்

மீதேசெ ழும்பூம டந்தை வாழ்வுற
நால்வேத முஞ்சூழ வந்து தாள்தொழ
வீறுக நின்றேபின் வந்த வானரர் சுரராக

வீதான பின்பாக வந்த வூரவர்
மேலான சந்தான மென்மெ ரூர்புக
யாகேச னுந்தேவ னும்பு ராரியும் மலரோனும்

ஈடேறி முன்போல்வ ணங்கி வாழ்வுற
மீளாந லஞ்சேர்வை குந்த மேறிய
ராமாவ ரங்காவ னந்த வானவர் பெருமாளே.

உரை :—நீ சரயுவின் கரையில் நிற்கும்போது விண்ணின் கண் வந்து நின்ற நான்முகன் சிவபெருமான், இந்திரன், இமையவர், முனிவர்கள், ஆகிய அனைவரும் நின்னை வணங்க, மலரவன் வியந்து, "எந்தையே, மிக்க மேன்மையையுடைய நினது பேருருவைப் பெறுக" என்ற அளவில் உடனிருந்தோர் அனைவரோடும் நீ அந் நீரில் மூழ்கியபின் சிறந்த சங்கு சக்கரங்களாகிய இரண்டும் நின் திருக்கைகளில் இருக்கவும், கௌத்து மணியைத் தரித்த திருமார்பில் செழுமையுள்ள திருமாமகள் இன்புற்றி ருக்கவும், நான்மறைகள் நின்னை வலஞ்செய்து நின் திருவடிகளை வணங்க வும், மேலான பரவாசுதேவ வடிவத்தோடு நின்ற பின்னே, வந்த வானரர் அனைவரும் முன் பெற்றிருந்த தேவ வடிவிற் கலந்து தேவர்களாகவும், இவை நிகழ்ந்தபின், அயோத்தியி னின்றும் வந்தவர் எல்லோரும், நின் கட்டளைப்படிப் புதிதாக நான்முகனால் உண்டாக்கப்பெற்ற மேலான

சந்தான உலகில் சேர்ந்திருக்கவும், வேள்வித் தலைவனாகிய இந்திரனு இமையவரும் முப்புரமெரித்த சிவபெருமானும், மலரோனும் வருத்த நீங்கப்பெற்று முன்போல் தத்தம் இருப்பிடத்தி லிருந்து நின்னை வணங் வாழ்ந்திருக்கவும் திரும்பிவாராத இன்பம் பொருந்தியுள்ள திருவைகு தத்திலேறி யருளிய ஸ்ரீராமா, திருவரங்கா, எல்லாத் தேவர்களுக்கு மேலான பெருமாளே; அடியேனுடைய தாயுந் தந்தையும் பாட்டன்மாரு இறந்த மற்றவரும், எத்தகைய நல்வினை தீவினைகளைச் செய்து எந்த சுவர்க்க நரகங்களில் இருந்தாலும் அவர்கள் மறவாமல் வந்து நின் திருவடி களை ஆதாரவாகக் கொண்டிருக்கவும்; இனி, அடியேனுக்குப் பின் தோன்ற வோர் செல்வத்தோடிருந்து அளவற்றவராய் ஒருதலைமுறைக் கொருதலை முறை பெருகி வளர்ந்து நின் அன்பராகி, நின் பெரிய திருக்கோயில் திருப்பணியும் நின்சேவையுங் கைக்கொண்டு வாழவும்; அடியேனும் மெ யறிவின் வழியொழுகி மயக்கந் தெளிந்து பெரிய ஐம்புலன்களாற் செ வையாய்க் கலங்காமல் அறிந்து ஒப்பற்ற நன்னெறியில் போவார் தம் தன் மையைப் போலவும், ஒருப்பட்டு ஓரூரினின்றும் மற்றோர் ஊருக்கு போகிறவர் வழியைப் புதிதாகச் செல்வோர் பின்பற்றுதல் போலவும் மெய்யறிவு வடிவாகி வருத்தமின்றி அமர்ந்த யோக வுடலுடன், நின் செ தாமரை போன்ற திருவடிகளை—உலகையளந்த பெரிய திருவடிகளை— வாறு தோன்றிய திருவடிகளை—இரண்டு மனைவியாராகிய சிறிய பிராட்டியாரும் பெரிய பிராட்டியாரும் அரிய தம் திருக்கைகளாற் தாங்கிக்கொண்ட சிவந்த திருவடிகளை அடையக் கடவேன்.

'என்செய்தேகினும்' என்றும், "புனல்சேரே" என்றும் பாடம்

தான தானன தானன தத்தன
தான தானன தானன தத்தன
தான தானன தானன தத்தன தனதான

370. வேலை நீடிய வானைய ரத்தொடு
சேலை யோடிய தீயவி டத்தினை
வீணி லேபழி சேரவி ளைத்திடு விழிமாது
மீதி லேமய லாகும னத்துயர்
தீர வேயிரு பாதமு றக்ருபை
வேலை நாடிடு நீதிய னுட்டைகள் வழுவாமல்
ஞால மேபுகழ் கோயிலி டத்தினில்
மேவி யேதொழ ஞானம றைப்பொருள்
நாவி லேதினை காலநி னைத்திட மிடிதீ

நாடி யேயடி யார்கள்மொ ழிப்படி
தானு மேதவ றுமல டிக்கடி
நானு மேசெய நீயுமெ னக்கருள் தருவாயே

வால பாரதி ராமசெ யத்தமிழ்
(நூலி னுகுமு) நூறெழு பத்தினை
வாணி நாவின னீள்பு து வைப்பதி வருராமன்

வாகு நேர்நிரை சீர்தளை யிற்பிழை
யாம லேமணி போலுமெ ழுத்தினை
மாசி லாமடன் மீதுபொ றித்திடு கவிசோத்

தால மீதினில் நாளுநி னைப்பவர்
ஓதி யேபய னோடுமு ரைப்பவர்
சார வேயிசை யோடுப டிப்பவர் அனைவோரும்

தால மீதினில் வாழ்வுப டைத்தளி
பாட வேயலர் தாமரை யொத்துள
தாளி லேவர வேயரு ளைப்புரி பெருமாளே.

உரை:—பெரிய திருவில்லிபுத்தூரிற் பிறந்தவனும் இராமனென்னும் பெயருடையவனும் கலைமகளையே நாவாவாக வுடையவனும் ஆகிய வால பாரதி பாடிய இராமசெயமென்னும் பெயரையுடைய தமிழ்க்கவி மூந்நூற்றெழுபதையும், அழகிய சந்தம், நேர்கள் நிரைகள், சீர்கள், தளைகள் ஆகிய வற்றிற் பிழையின்றி மணிபோலும் எழுத்தை குற்றமின்றியுள்ள பனை யோலை யேட்டின்மேல் எழுதி, நாள்தோறும் அவற்றை நாவின்மேல் நினைத்துச் சொல்பவரும், அவற்றைப் பொருளோடு உரைப்பவரும், கேட்போர் உள்ளத்தில் நன்கு பதியுமாறு சந்தத்தோடு படிப்பவரும், உலகில் செல்வம் பெற்றுப் பின், வண்டுகள் பாட மலர்ந்த செந்தாமரை மலரை யொத்த நின் திருவடிகளை வந்தடையுமாறு அருள் செய்கின்ற பெருமாளே; வேற்படையையும், நீண்ட வாட்படையையும், அரத்துடன் கெண்டை மீனையும், நஞ்சினையும், உவமை யில்லாமையால் பழி சேருமாறு வீணுகும் படி செய்கின்றதும் காதள வோடியதுமான கண்ணையுடைய பெண்கள் மேல் காதல்கொள்ளும் மனக்கவலை தீரும்பொருட்டும், நின் திருவடிகள் இரண்டும் கிடைக்கும்பொருட்டும், நின் அருட்கடலைத் தேடிக் கூடும் கட்டளையாகிய நற்செயல்கள் (அனுட்டானங்கள்) தவறுமல், உலகத்தவர் புகழ்ந்து போற்றுகின்ற திருவரங்கத் திருகோயிற் சேர்ந்து வணங்கும் பொருட்டு, மெய்யறிவின் வடிவாகி மறைப்பொருளாகிய நின்னை நாடோறும் நாவில் நினைக்கும்பொருட்டும், அறியாமையாகிய வறுமை போகும்

பொருட்டும், நல்வழிகளை ஆராய்ந்து அறுவுறுத்தும் நின் அடியார்ளுடைய சொற்கேட்டு நாளும் தவறாமல் நடக்குமாறு எனக்கு அருட் புரிவாய்.

உத்தரகாண்டம் முற்றும்.

ஆக, காண்டம் ஏழுக்குத் திருவிருத்தம் 370

---

வால பாரதியாகிய இராமையங்காரை நிந்தித்த போது இந்தக் கோயிலார் முன்னே அரங்கேற்றுகிறதில்லை ; இந்திரன் சபையிலே அரங்கேற்றுகிறே னென்று கோயிலாருக்குச் சொல்லி, இந்திரனுக்குச் சீட்டுக் கவியெழுதி அவ் வேட்டை விண்ணவ ருலகுக்குக் கனுப்பி, அங்கிருந்து உடனே வந்த விமானத்தின் மேலேறிக் கொண்டு போய் இந்திரன் சபையில் அரங்கேற்றி யிருக்க இந்திரன் அனுப்ப உலகிற்கு வந்த இராமசெயமானதால் தேவலோகத்துக் கனுப்பிய சீட்டுக் கவி :

" உந்திய செந்தமி ழான்வால பாரதி யோலையுண்மை
யிந்திர ரானவ ரெல்லாருங் காண்க இதன்றியிலே
செந்தமிழ் பாடவும் பொன்னுடு பார்க்கவும் [1]சீர்பெறவும்
வந்திட வேணும் விடுதியுஞ் சோடித்து வைத்திடுமே "

என்பது.

சீராமன் ராம செயந்தன்னைப் பூசித்துப்
பாரா யணைநாளும் பண்ணினல்—வாராது
தீது நலமே சிறக்துங்கா ணெஞ்சமே
ஏதுமவ னென்றே யிரு.

1. சேவிக்கவும்.

ஸ்ரீ ராமாயபரத்துமனே நமః
ஸ்ரீ ராமச்சந்திர சுவாமியே நமః

ஸ்ரீ:

# பாட்டின் முதற்குறிப்பு அகர வரிசை.

(எண் - பக்கத்தின் எண்)

# பிழை திருத்தம்.

| பக்கம். | வரி. | பிழை. | திருத்தம். |
|---|---|---|---|
| 1 | 6 | த்ரையங்கள் | த்ரையங்கண் |
| ,, | 13 | சுரரேவ வணங்க | சுரரேவ ணங்க |
| 11 | 11 | நாளேழும கன்றிபின் | நாளேழு மகன்றபின் |
| 16 | 13 | வடிவு மென்று | வடிவ மென்று |
| 33 | 27 | ஊடனொடு | ஊடனொடு |
| 52 | 11 | தாமரை | சாமரை |
| 53 | 18 | தாருமென்ரோர் | தாருமென்றோர் |
| 78 | 29 | மற்றடி | மற்றுள |
| ,, | 30 | மற்றுத் | மற்றடி |
| 79 | 30 | தாமசையை | தாமரையை |
| 93 | 10 | முதலாக நீவரும் | முதலாகி நீவிடும் |
| 95 | 1 | ஙிமிட | ஙிபிட |
| 99 | 8 | அயலோர்கண் | அயலோர்கள் |
| 107 | 5 | ராவணி | ராவணீ |
| ,, | 24 | தோளின்மேல் | தோளின்மேல் ஏறி |
| 109 | 25 | எள்னுயிர் | என்னுயிர் |
| 111 | 33 | செழுந்துடை | செந்துடை |
| 127 | 6 | வென்றே னெறெதிர் | வென்றே னென்றெதிர் |
| 128 | 21 | தேரோடு | தேரொடு |
| 130 | 30 | தனத்த | தனத்தத் |
| 131 | 2 | சிறுக்குர லெழும்பிக் | சிறுகுர லெழுப்பிக் |
| ,, | 20 | முடுகு சித்ர | முடுகு சித்ரச் |
| 132 | 1 | எழும்பி | எழுப்பி |
| ,, | 33 | துனித்திட்ட | துணித்திட்ட |
| 136 | 22 | யாரோடுமே | யாரொடுமே |
| 198 | 4 | வெஞ்னமாகி | வெஞ்சின மாகி |
| 210 | 26 | அரவினோடு | அரவினொடு |
| 221 | 31 | இழந்த மக்கள் | இழிந்த மக்கள் |

